# ஸரஸாவின் பொம்மை

(கதைகள்)

ஆசிரியர்

சி. சு. செல்லப்பா



கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர் : : சென்னை—4

 [விலை ரூ. 2-0-0

என் நண்பன்

**வத்தலக்குண்டு பி. எஸ். சங்கரன்**

ஞாபகத்துக்கு

# பொருளடக்கம்

# முகவுரை

"ஒரு பிராமணன் ஒரு வீட்டில் பிச்சை கேட்டான். அந்த வீட்டு ஸ்திரீ அவனுக்கு அன்னம் இட்டாள். அதைத் தொன்னையில் வாங்கிக்கொண்டு ஒரு மரத் தடியில் வைத்துவிட்டுக் குளிக்கப் போனான். அப் பொழுது மரத்தின் மேலிருந்த கருடன், ஒரு நாகத்தைப் பிடித்துக் கொத்திக்கொண் டிருந்தது. நாகம் வலி பொறுக்க முடியாமல் விஷத்தைக் கக்க, அது பிராமணன் அன்னத்தில் விழ, குளித்து வந்த பிராமணன் அதைச் சாப்பிட, அவன் உயிர் துறந்தான். இந்தப் பாவம் யாரைச் சாரும்?'' என்று வேதாளம் விக்ரமாதித்தனைக் கேட்டது.

தத்துவ ஞானியான வேதாளம் விக்ரமாதித்தனை இருபத்து நாலு கேள்விகளே கேட்டது. ஆனால், வாழ்க்கை இப்படிப் போடும் விடுகதைகள் அனந்தம். லக்ஷக்கணக்கான புதிர்களுக்கு விக்ரமாதித்தனைப் போலப் பதில் சொல்ல முயலுகிறது கலை. மயக்கம் தரும் மாயைகளைப் பிளந்துகொண்டு உண்மையைத் தேடிக் கொண்டு செல்கிறான் கலைஞனும் கவிஞனும். நிரந்தர மான பிரச்னைகள், நிரந்தரமான போராட்டங்கள், இவைகளை ஊடுருவிப் பார்ப்பதுவே இலக்கியம். மகா

பாரதமாயினும் சரி, சிறுகதையாயினும் சரி, இவைகளை விஸ்தரிக்கும்பொழுது உயர்ந்த இலக்கியம் ஆகிவிடுகிறது. மேலெழுந்த வாரியாகப் பார்க்காமல் சமூகம், தேசம், பாஷை, மதம் இவைகளைக் கடந்து மனித ஹ்ருதயத்தின் ஆழத்தைக் கண்டு, அந்த அனுபவத்தை பிறருக்கும் பங்கிட்டுக் கொடுப்பதே ஆசிரியன் வேலை. மின்னல் போல விநாடிக்கு விநாடி தோன்றி மறையும் அனுபவங்களை நிரந்தரமாக்குகிறது கலை.

பிறப்பும் இறப்பும் வாழ்க்கையின் எல்லைக் கோடுகளாக இருக்கின்றன. விருப்பு வெறுப்புக்களும், ஆசா பாசங்களும் மனித உள்ளத்தில் புயலடித்துக்கொண்டிருக்கின்றன. இதற்குட்பட்ட வாழ்க்கையில் முக்குளித்து வரும் மனிதன் கதையை, ஆதிகாலந்தொட்டு எழுதிவந்திருக்கிறார்கள் அறிஞர்கள். ஆனால், மனிதன் கதை முடிவில்லாததொரு பழங்கதை. இந்தப் பழங்கதையைப் புது முறையில் சொல்லுவதே ஆசிரியன் திறனைக் காட்டுகிறது.

ஸ்ரீ **செல்லப்பா** எப்படி வாழ்க்கையின் விநோதங்களைப் பார்த்திருக்கிறார் ? வாழ்வின் பலவித சூக்ஷமங்களுக்கு எவ்வித அர்த்தங்களைக் கண்டுபிடித்திருக்கிறார் ? பழமையான மனிதன் கதையில் என்ன புதுமையை அவர் கண்டார் ?

வாழ்க்கையில் அவர் கண்ட பல்வேறு அனுபவங்களும், அவர் கண்ட புதுமைகளுமே, **'சரசாவின் பொம்மை'** யாக உருப்பெற்றிருக்கின்றன.

சோகத்தையும் அதன் சோபையையும் கண்டு அனுபவிக்க ரஸனை வேண்டும்; துன்பத்தின் பல்வேறு சாயைகளிலும் இருக்கும் ஒருமையைக் கண்டுகொள்ள அன்பு பரந்த கவியுள்ளம் வேண்டும். ஸ்ரீ செல்லப்பாவிடம் குருவிக் குஞ்சு முதற்கொண்டு நொண்டிக் குழந்தை வரையில் சகல ஜீவராசிகளையும் பற்றிக்கொள்ளும் பரந்த அன்பு இருக்கிறது. வாழ்க்கையிலிருந்து தப்ப முடி'யாதபடி, விதியின் விளையாட்டுக்களினால் ஏற்படும் துன்பங்களைக் கண்டு வேதனைப்படும் உள்ளக்கனிவு இருக்கிறது. வாழ்க்கையின் சில விபரீதங்களை எட்டி நின்று பார்க்கும் பற்றின்மை இருக்கிறது. இக்குணங்கள் ஆசிரியனின் எழுத்தை உயர்ந்ததாகச் செய்கின்றன. பொதுவாக எல்லாக் கதைகளிலும், கதாபாத்திரங்களின் மனம் போகிற போக்கை நுட்பமாகப் பின் தொடர்ந்து சென்றிருக்கிறார். சம்பாஷணைகள் இயற்கையாகவும் பொருத்தமாகவும் இருக்கின்றன. சுற்றுணர்ச்சி நன்கு அமைந்திருக்கிறது. கதாபாத்திரங்களும் தெளிவான உருவம் பெற்றிருக்கிறார்கள்.

ஸரஸாவைப் பொம்மையாக வைத்து விளையாடி வந்தான் அவன். ஆனால், அவன்தான் ஸரஸாவின் பொம்மையாக இருந்தான். அந்த உண்மை தெரிந்த போது ஏற்பட்ட திகைப்பும் திருப்தியும் ஏமாற்றமும் 'ஸரஸாவின் பொம்மை'யில் வெகு அழகாகச் செதுக்கப் பெற்றிருக்கின்றன. குழந்தை ராதா, சந்திரனுக்கு இறந்துபோன தங்கையின் ஞாபகார்த்தமாக இருக்கிறாள். ராதாவோ தனக்குக் கிடைத்திருக்கும் புதிய தாயாரைக்

காட்டிப் பெருமை கொள்கிருள். விளையாட்டுக் குழந் தைக்கு மாமாவின் மனத்தில் எழும் துன்ப அலைகளைப் பற்றி ஒன்றும் தெரியாது. இப்படியே தாயிடமிருந்து பிரிந்து வந்திருக்கும் 'குருவிக்குஞ்'சின் க்ஷேமத்திற்குத் தவிக்கும் நெஞ்சம்; புக்ககத்திற்குத் தங்கையைக் கொண்டு விடப்போகும் பொழுது அண்ணனுக்கு ஏற்படும் மனநிலை; தான் நொண்டியாக இருந்தாலும் மாயக் கண்ணனைப் போலப் பல ரூபங்கள் பெற்று எல்லாக் குழந் தைகள் விளையாட்டிலும் ஈடுபட்டுக் கலந்து கொள்ளும் 'நொண்டிக் குழந்தை', உறவினர்கள் அழுதுவிட்டுத் திரும்பிப் போக மறுநாள் சாம்பலை உறவினர்களிடம் ஒப்படைக்கப்போகும், மயானம் காக்கும் இருஜீவன் களிடமிருந்து வரும் ஆனந்த கீதத்தின் மூலம் புலப் படும் 'வாழ்க்கை'யின் விசித்திரம்; சிறியதொரு சிறையி லிருந்து வெளிப்பட்டாலும் பெரியதொரு சிறை 'மூடியிருந்தது' என்று ஏங்கும் உள்ளம் முதலிய உள்ள நெகிழ்ச்சிகள், சந்தர்ப்பங்கள் போன்றவைகளை ரஸம் குன்ருமல் அழகாகச் சித்திரித்திருக்கிருர்.

'நான்' என்று சொல்லிவருகிற கதைகளில் இவர் விசேஷமான வெற்றி பெற்றிருக்கிருர். சிறுகதை ஒரு ரஸத் துணுக்கு. அதை எவ்வளவு தீவிரமாகவும், எவ்வளவு சக்தி யுள்ளதாகவும் எழுத முடிகிறதோ அதில்தான் வெற்றி இருக்கிறது. சொந்த அனுபவங் களைப்போல், நேருக்கு நேராகச் சொல்வதில் ஆசிரிய ருக்கும் வாசகருக்கும் உறவு நெருக்கமாக ஏற்படு கிறது; மனத்தை விண்டு காட்ட முடிகிறது. அவ்விதம்

எழுதுவதில் ஒருவித நேர்மை ஏற்படுகிறது. சிறுகதைக்கு நேர்மையும்(honesty), அந்தரங்க சுத்தியுந் (sincerity) தான் அவசியம்.

இக் கதைகளில், சம்பவங்கள் அதிகம் இல்லை. ஒன்றுக்கொன்று பொருந்தாத சம்பவக் குவியல்களில் பிறக்கும் கதைகள் அல்ல இவை. ஒரு சிறு ஞாபகம் எழுப்பும் சிந்தனை அலைகள், ஒரு நொடிப் பொழுதில் உதயமாகும் எண்ணம் போன்றவைகள்தாம் இவர் கதைகள் கட்டி எழுப்புவதற்கேற்பட்ட அஸ்தி வாரங்கள். சிறுகதைக்கு ஏற்பட்ட விஷயங்களும் இத்தன்மை கொண்டனவாகத்தான் இருக்க வேண்டும். சிறிதைப் பெரிதாக்குவதும், நிமிஷத்தை நித்திய மாக்குவதுந் தான் சிறுகதையின் வேலை.

சிறுகதைக்கு முக்கியமாக வேண்டியது **பா**வம். **பா**வசித்திரம் நன்கு அமைந்திருப்பதே கதையின் சிறப்புக்கு அடிப்படை. குண சித்திரங்களுக்குச் சிறுகதைகளில் அதிகமான வேலை இல்லை. பல்வேறு சந்தர்ப்பங்களில் ஏற்படும் குணவேறுபாடுகளைத் தீட்ட முயலும் போது சிறுகதையின் அளவை மீறி நாவலாகிவிடுகிறது. செல்லப்பா அறிமுகப்படுத்தும் சில குண சித்திரங்களும் நன்கு தீட்டப்பட்டிருக்கின்றன. கள் நாற்றத்தோடு கம்பீரமாக வரும் வீரன் குண்டான், அழுக்கேறிய பாவாடையுடன் தோன்றிக் குண்டான் வீரத்திற்குத் தன் காதலை அர்ப்பணம் செய்யும் காபூலிக்காரி, கஜப் போக்கிரி பகுடித்தேவன் போன்றவர்களையும் நமக்குக் காட்டுகிருர்.

குழந்தைகளின் போக்கு மிகவும் கவர்ச்சி நிறைந்தது. இனிமையும், அழகும் கலந்த கல்மஷ மற்ற அவர்கள் ஹ்ருதயம் ஆசிரியர் மனத்தைக் கொள்ளைகொண் டிருக்கிறது. குழந்தைகளின் மனோ தத்துவத்தையும், குழந்தைகளினுல் பெரியவர்களுக்கு ஏற்படும் மனோ பாவங்களையும் சில கதைகள் ஆராய்கின்றன.

வாழ்க்கை நமக்குப் போதிக்கும் நீதிகள் அனேகம். சிந்தித்துப் பார்க்கச் சிந்தனை மட்டும் இருந்தால், நாம் அறிந்துகொள்ளவேண்டிய படிப்பினைகள் ஏராளம். 'வாழ்க்கை'யில் கண்ட விசித்திரம் மூளையைத் தூண்டு கிறது. இப்பொழுது தோன்றுகிறது: "காதலுக்கும் சாதலுக்கும், இயற்கை ஒரு விதமான பாரபக்ஷமும் காட்டுவதில்லை. அதன் அணைப்பிலதான் காதல் பிறக் கிறது. நிலவும், தென்றலும், மணமும் குளுமையும் காதல் போதையைச் சிருஷ்டிக்கின்றன. சாவுக்கும் இயற்கைதான் தாய். மூச்சு நிற்றலும், காற்றுப் போக்கின் சக்தியின் ஓய்வும், சாதல் மயக்கத்தைச் சிருஷ்டிக்கின்றன. இந்தத் தென்னந்தோப்பில், காதல் கூவும் பக்ஷி; எதிர் மேட்டிலே சாதல் ஓலமிடுகிறது. எல்லாம் இயற்கையின் பகைப் புலத்திலே. ஆனுல், சாவின் எதிரில் காதலை நினைக்கவே முடியவில்லை" என்கிருர்.

நடை இலக்கியத்தின் மூச்சு. அந்த அந்தக் கதை களுக்கேற்ற நடையை இவர் கையாண்டிருக்கிருர்.

ஆனல் சில கதைகளில், மேல் நாட்டு மோஸ்தரில் சொற்ருெடர்களும், பாணிகளும் வந்து விழுந்திருக்கின்றன. மேல் நாட்டு இலக்கியத்திலே ஊறி வந்திருக்கிற தற்காலத் தமிழ் எழுத்தாளர்களிடம் பெரும்பாலும் இந்தக் குறை இருந்துதான் தீரும். ஆனல், இம்மாதிரி நடைகளெல்லாம், அனேக எண்ணங்களை வெளியிட முடியாமல் ஊமையாயிருக்கிற தமிழன் வாயைத் திறக்க ஹேதுவாயிருக்கலாம். எல்லாம் போகப் போகத்தான் தெரியும்.

ஸரஸாவிற்குப் பொம்மை தேவை. மனிதனுக்கு இலக்கியம் தேவை. அந்தத் தேவையைப் பூர்த்தி செய்வதற்கு முயலும் எந்த முயற்சியையும் உலகம் வரவேற்க வேண்டும்.

காரைக்குடி,
30—6—'42

**ந. சிதம்பர சுப்ரமண்யன்**

# ஸரஸாவின் பொம்மை

**வ**ழக்கம்போலக் கலாசாலை விட்டதும், ஸரஸாவைப் பார்த்துவிட்டுப் போவதற்காக மாமா வீட்டிற்குள் நுழைந்தேன். அப்பொழுது மாமி சமையலறைக்கு அடுத்தாற்போல் ஒரு வெள்ளிக் கும்பாவில் சாதம் பிசைந்துகொண்டிருந்தாள். ஆனால் யாருக்காக அதைப் பிசைந்துகொண்டிருந்தாளோ அந்த நபர் மட்டும் அருகே காணப்படவில்லை. “ஸரஸா! சாப்பிடவறயா, இல்லையா? அப்புறம் நான் சாதத்தை வெள்ளைக்குப் போட்டுடுவேன் தெரியுமோ? பேசாமே வந்துடு” என்று கோபக்குரலில் அம்மாமி கூறிக்கொண்டிருந்தது மட்டும் என் காதில் விழுந்தது.

நான் கூடத்திற்கு வரவும், என் காலடிச் சப்தம் கேட்கவே, அம்மாமி என் பக்கம் திரும்பி, “வாடாப்பா, சமய சஞ்சீவி! உனக்கு நூறு வயசு; இந்த இரண்டு வாய்ச் சோறு உன் அம்மங்காள் சாப்பிடறத்துக்குள்ளே என் பிராணனை வாங்கிடறாளப்பா. இனிமே என்னாலே இவளோடே பிராணனைக் கொடுத்துக்க முடியாது. இன்னும் 5, 6 வருஷங் கழித்து நீ இவளைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு, உனக்குப் புண்ணியம் உண்டு, இப்போதே கல்யாணம் பண்ணிக் கூட்டிண்டு போயிடு. உபத்திரவம் விட்டுதுன்னாவது இருக்கும்” என்று கோபம் ஒரு புறமும், பரிகாசம் ஒரு புறமும் ததும்பும்

முகத்தோற்றத்துடனே, சரேலென்று எழுந்து தோட்டப் பக்கம் கையலம்பி வரச் சென்றாள். போகும்பொழுதே உரத்த குரலில், "ஸரஸா! இதோ கூடத்திலே உன் அத்தான் வந்திருக்கான் பார்—இந்த அழகியைப் பார்க்கிறதுக்கு — அழுகுணியை!" என்று சொல்லிக் கொண்டே சென்றாள்.

நான் இதையெல்லாம் கேட்டுக்கொண்டே, வந்த சிறுநகைப்பையும் அடக்கியபடியே சமையலறையை நோக்கிச் சென்றேன். ஸரஸாவின் கோபத்திற்கு ஆளாவதற்குத் தாங்கள் செய்த குற்றம் இன்னதென்று அறியாமல், சிதறி உருண்டோடிக்கொண் டிருக்கும் பாத்திரங்களையும், கைகளில் கிழிபட்டுக் கொண் டிருக்கும் பழைய காலண்டரையும், அவள் வாய் முணு முணுப்பையும், கண்களில் நீர் மல்கி இருந்ததையும் பார்த்த உடனே மாமி அங்கலாய்த்துக்கொண்டதில் ஒரு சிறிதும் தப்பிதமில்லையே என்று என் மனத்திற் பட்டது.

"ஸரஸா! என்ன இது? இப்படி இன்னிக்கு அசடு மாதிரி; பார்த்தியா, ஐய ஐயே...இங்கே வா" என்று மிருதுவாக அழைத்தேன். நான் வந்திருப்பதாக அம்மாமி கூறியதும், நான், "ஸரஸா!" என்று அழைத்ததுமாகிய இரண்டும் ஏககாலத்தில் ஸரஸாவின் காதுகளில் ஒலிக்கவே, சரேலென்று சுருட்டி மடக்கி எழுந்து, 'கௌனி'ன் ஓரத்தால் கன்னங்களில் வழிந்தோடிய கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, மெதுவாக அடி மேல் அடியெடுத்து வைத்து என்னை நோக்கி வந்தாள். அழுகையும் கோபமும் வீம்பும் பறந்து போன இடம் தெரியவில்லை.

ஸாஸாவை அப்படியே அணைத்துக்கொண்டு அவள் கண்ணீரைத் துடைத்துத் தேற்றி, பிரிந்து கலைந்திருந்த தலையைக் கோதி, "ஸாஸா! சாப்பிடறதுக்கு இப்படியா முரண்டு பண்ணுவா? அட அசடே! ....உட்கார்ந்து சாப்பிடு! சமத்தோல்லியோ?" என்று சமாதானப் படுத்திக் கும்பாவிற்கு நேராக உட்கார வைத்தேன். இதற்குள் கூடத்திற்குத் திரும்பிவந்த அம்மாமி, "ஆமடாப்பா, உன் அம்மங்கா அசடு இல்லாமே ரொம்பச் சமத்தோ இல்லியோ? கோயில்லே வச்சுத் தான் கும்பிடணும். ஐய! கட்டினவன் கடைத்தேறிப் போவான்!" எனக் கூறிக்கொண்டே ஜாடையாக ஸாஸாவைக் கோபங்கொள்வது போன்ற பாவனையாகப் பார்த்தாள்.

"போ அம்மா! நான் அசடுன்னு இருக்கட்டும். போ" என்றாள் ஸாஸா, பதிலுக்கு விட்டுக் கொடுக்காமல்.

"இதாவது வேண்டாமோ? குறைச்சல் இல்லை!" என்று உதட்டைப் பிதுக்கிக்கொண்டு அம்மாமி அப்புறம் போய்விட்டாள்.

சாந்த குண ஸரஸா சாப்பிட ஆரம்பித்தாள். ஆனால் ஒரு வாய்க்கு நாலு பருக்கைக்கு மேல் எடுக்கவே இல்லை. அதிலும் பாதி திரும்பக் கும்பாவிற்கு வந்து விடும். இந்த லக்ஷணத்தில் ஒரு வாய்க்கும், மற்றொரு வாய்க்கும் இடையே எத்தனை கேள்விகள்! என்ன பேச்சு! ஒன்றுக்கொன்று சம்பந்தம் சிறிதாவது இருக்க வேண்டுமே? குழந்தைகள் பேச்செல்லாமே அப்படித் தானே!

"அம்மாமி! உங்களுக்கெல்லாம் ஸரஸாவை அழ விடத்தான் தெரியும். சமாதானப்படுத்தவே தெரியாது" என்றேன்.

"நீ ஒருத்தன் — அருமை அத்தான் — இருக்கயே. போராதோ?" என்றாள், அம்மாமி சிரித்துக்கொண்டு; "அதற்குத்தான் அவளை நீயே கல்யாணம் பண்ணிண்டுடுன்னு சொல்றது. ஏண்டி ஸரஸா, இந்த அத்தானையே கல்யாணம் பண்ணிண்டுடறியா?" என்றாள்.

"ஸரஸா, என்னைக் கல்யாணம் பண்ணிண்டுடறியா?" என்று நானும் சிரித்துக்கொண்டே ஸரஸாவைப் பார்த்துக் கேட்டேன்.

ஸரஸா குனிந்த தலை நிமிராமலே, "நான் உன்னைத் தான் கல்யாணம் பண்ணிக்குவேன் போ; வேறே ஒத்தரையும் கல்யாணம் பண்ணிக்கமாட்டேன் போ" என்று கொஞ்சும் மழலைக் குரலில் பதில் கூறினாள்.

"ரொம்பச் சரியாய்ப் போயிடுத்தே! அம்மாமி, மாப்பிள்ளை தேடவேண்டிய கவலை இன்னமே உங்களுக்கு வேண்டாம். ஒரு நிமிஷத்திலே சம்பாதித்தாகி விட்டது" என்று சொல்லிச் சிரித்தேன்.

"பின்னே என்ன போ!" என்று நிர்விசாரமாகக் கூறிய அம்மாமி தணிவான குரலில், "வயசு வித்தியாசம் ரொம்பக் கொஞ்சந்தான்" என்று சொல்லிச் சிரித்தாள். எனக்கு வயது இருபத்திரண்டுக்குமேல்! ஸரஸாவுக்கோ இன்னும் ஆறு நிரம்பிய பாடில்லை: அவள் என்னைத் தான் கல்யாணம் செய்து கொள்ளுவேன் என்று மூர்க்கமாகக் கூறினால் சிரிப்பு வராமல் என்ன செய்யும்? இருந்தாலும் அதை ஸரஸாவிடம் சொல்லமுடியுமா?

ஸரஸா விரைவில் சாப்பிடுவதாகக் காணேம். எனக்கோ அறைக்குப் போக நேரமாகிக்கொண்டிருந்தது. "சரி, அம்மாமி. நான் போய்விட்டு நாளைக்கு வருகிறேன்" என்று சொல்லி எழுந்து புறப்படத் தயாரானேன். அரைகுறையாகச் சாப்பிட்டுக்கொண்டிருந்த ஸரஸாவும் கூட எழுந்துவிட்டாள். நான் திடுக்கிட்டு, "ஸரஸா, நீ சாப்பிடு. நான் 'ரூமு'க்குப் போயிட்டு அப்புறம் வறேன்" என்று உட்காரச் சொன்னேன். அதையெல்லாம் அவள் காதுகளில் போட்டுக்கொள்ளவில்லை. "நீ இப்போ போகக் கூடாது. இங்கேதான் இருக்கணும் போ" என்று சிணுங்க ஆரம்பித்தாள். இன்னும் ஓர் ஆவர்த்தத்திற்கு அவள் அடிபோடுகிறுள் என்பதை ஊகித்த அம்மாமி, "அப்பா, இருந்தது இருந்தே; அவள் சாப்பிட்டு எழுந்திருக்கிறவரைக்கும் இருந்துட்டுப் போயிடு. உனக்குப் புண்ணியம் உண்டு" என்று வேண்டிக் கொண்டாள். வேறு வழி ஒன்றும் இல்லாமையால், "ஸரஸா, போகல்லே; சட்டுனு சாப்பிடு" என்று சொல்லி உட்கார்ந்தேன்.

ஸரஸா சாப்பிட்டானபின்பு, மறுநாள் கட்டாயம் சீக்கிரம் வந்துவிடுகிறேன் என அவளுக்கு வாக்குக் கொடுத்துவிட்டு, அறைக்குத் திரும்புவதற்குள் தப்பித்தால் போதுமென்றாகிவிட்டது.

அன்றுவரை குழந்தை ஸரஸா என் கண்ணிற்கும் மனத்திற்கும் இதரக் குழந்தைகள்போலவேதான் தோற்றினுள். ஆறு வயது நிரம்பப் பெருத ஸரஸாவின் உருண்ட முகமும், உப்பிய கன்னங்களும், நெற்றியும், எடுப்பான மூக்கும், சூக்ஷ்மப் பார்வை பொலியும்

கண்களும், தோள்களிலும் நெற்றியிலும் விழுந்து புரண்டுகொண்டிருக்கும் கரிய சுருண்ட மயிரும், கொன்னிப் பேசும் மழலைச் சொற்களும் அன்று முதல் அதுவரை எனக்குக் கொடுத்திராத ஒருவகை இன்பத்தை அளித்துப் பரவசப்படுத்திவிட்டன. அவளது மோஹனப் பேச்சும், சுந்தர வடிவமும், மனோஹர நடத்தையும் என்னை அப்படியே கவ்வி விட்டன. என் மனம் பூரணமாக அவளிடத்தில் சென்று லயித்துவிட்டது.

ஊரில் இருக்கும்வரை நாள் தவறாது நான் ஸரஸாவைப் போய்ப் பார்த்து வருவதுண்டு. அநேக ஸமயங்களில் அவளது முரணும், பிடிவாதமும் முன் வந்து வீட்டில் இருப்பவருக்கு வெகு சிரமத்தைக் கொடுத்துவிடும். ஆனால் அதற்கெல்லாம் ஒரே மருந்து என்னிடம் இருந்தது. அவசியமானபோதெல்லாம் அதைக்கொண்டு ஒரு விநாடியில் அவளைப் பழைய ஸரஸாவாக ஆக்கிவிடுவேன். "ஸரஸா, நீ இப்படி முரண்டு பண்ணினால் அப்புறம் நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க...." என்று இழுத்து முடிப் பதற்குள், "ஆட்டும், ஆட்டும். இனிமே இல்லை" என்று பலத்துக் கூவித் தன்னைத் தேற்றிக்கொண்டு கட்டின கன்றாகி விடுவாள். இந்த மருந்தினால், நான் வீட்டிற்கு வராத சமயங்களிலும் குணம் ஏற்படுகிறது என்பதையும் அம்மாமியிடமிருந்து தெரிந்துகொண்டேன்.

நாளாக நாளாக எங்கள் இருவரிடையேயும் அன்பும், பாசமும், நட்பும் வளர்ந்துகொண்டே வந்தன. ஸரஸாவைக் காணவிட்டால் எனக்குப் பொழுதே போகாது. ஸரஸாவுக்கும் அப்படியே. என்னைக் கண்டு

விட்டால் இதர வேலைகள் எல்லாம் அவளுக்கு அலக்ஷிய மாகப் போய்விடும். போட்டது போட்ட வாக்கில்தான். குடும்பத்திலேயே எங்கள் நட்பைக் கண்டு வியப்புறாதவர் களும் பொறாமைப்படாதவர்களும் இல்லை.

அதே வருஷம் எனக்கு மணம் நடை பெற்றது. அந்தச் சமயம் நிகழ்ந்த சம்பவங்களும் காட்சிகளும் இன்னும் என் மனக்கண்முன் அப்படியே தோன்றிப் பிரதிபிம்பிக்கின்றன. நான் மணப் பலகையில் உட்கார்ந்துகொண்டிருந்தேன். அருகே என் புது மனைவி உட்கார்ந்திருந்தாள். அவளை அதற்கு முன் நான் பார்த்ததே இல்லை. எனது அப்போதைய எண்ணங்களும் நினைவுகளும் அவளைப்பற்றியனவாகவே இருந்தன.

திடீரென்று என் அருகில் ஒரு சிறுகுரல் சிணுங்கி அழும் சப்தம் கேட்கவே, தலை நிமிர்ந்து பார்த்தேன். அம்மாமி இடுப்பில் ஸரஸாவுடன் எனக்குச் சமீபமாக நின்றுகொண்டிருந்தாள். ஸரஸாவின் கண்களிலிருந்து நீர் வழிந்துகொண்டிருந்தது.

"அம்மாமி, ஏன் ஸரஸா இப்படி அழுகிறாள்?" என்று ஸரஸாவின் பக்கம் கையை நீட்டியவண்ணம் சிறிது பதற்றத்துடன் கேட்டேன்.

"எதுக்கு அழுவாள்? நீதான் அவளையே நேரிலே கேளேன்" என்று அம்மாமி சிரித்துக்கொண்டே கூறினாள். அருகில் இருந்தவர்கள் எல்லோரும் சிரித்தார்கள்.

அம்மாமி ஸரஸாவைக் கீழே இறக்கி விட்டாள். ஸரஸாவை என் அருகே அழைத்துக்கொண்டு,

"ஸரஸா, எதுக்கு அழறே? உனக்கு என்ன வேணும்?" என்று கேட்டேன்.

விம்மல்—விக்கல்—தேம்புதல்—அழுகை. வேறு பதிலே இல்லை. அம்மாமியின் முகத்தைப் பார்த்தேன்.

"இன்னும் ஒருதரம் கேளேன் நீதான்" என்றாள் அம்மாமி மறுபடியும். பொறுமையை இழந்துவிடாமல் மறுபடியும் கேட்டேன். கொஞ்சங் கொஞ்சமாக ரொம்ப மந்தஸ்தாயியிலேயே பதில் வந்தது. காதோடு காது வைத்துத்தான் கேட்க வேண்டியிருந்தது.

"நான் - உன்னைத்தான் கல்யாணம் பண்ணிக்குவேன் போ" என்று இழுத்து இழுத்து விக்கல் விம்மல்களுக்கு இடையே சொல்லிவிட்டு, ஸரஸா கண்ணைக் கசக்கிக்கொண்டு தேம்பினாள். அவள் அதைச் சொல்லி முடிக்கும்வரை சிரிப்பை அடக்கிக்கொண்டிருந்த நாங்கள் எல்லோரும், சொல்லிமுடிக்கவும் கொல்லென்று வாய்விட்டுச் சிரித்துவிட்டோம். நான் மட்டும் சட்டென்று சிரிப்பை அடக்கிக்கொண்டு, "இதுக்குத் தானா பிரமாதம்? நான் உன்னைத்தான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன். அழாதே, அழாதே" என்று தேறுதல் மொழிகள் பல கூறி என் மடியில் உட்கார வைத்துக்கொண்டேன். ஸரஸாவின் அழுகை நின்றுவிட்டது. அவள் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவம் ஆடியது. கூடி இருந்தவர் செய்யும் கேலியையெல்லாம் அவள் சிறிதும் பொருட்படுத்தவே இல்லை. பேதைக் குழந்தை! கல்யாணம் என்றால் இன்னதென்று தெரியாத குழந்தை! தான் விரும்பிய அத்தானைக் கல்யாணம் செய்து கொண்டுவிட்டோம் என்ற ஆனந்த சாகரத்திலே மூழ்கிக் கிடந்தாள்.

கல்யாணம் ஐந்து தினங்களிலும் ஸரஸா என்னை விட்டு அப்புறம் இப்புறம் நகரவே இல்லை. மணப் பலகையில் என் புது மனைவியுடன் நான் உட்கார்ந்து கொண்டிருக்கும் பொழுதெல்லாம், அவளும் அருகில் உட்கார்ந்துகொண் டிருப்பாள் — நலங்கு, ஊஞ்சல், எப்பொழுதும். எல்லோருக்கும் இது வெறும் வேடிக்கையாக மட்டும் இல்லாமல் மிகுந்த மகிழ்ச்சியையும் அளித்தது. என் மனைவிக்கு நலங்கு இடும்பொழுது அவளுக்கும் இடவேண்டும். இல்லாவிட்டால் அவளுக்கு வந்துவிடும் கோபம்!

இப்படியாகக் கல்யாணம் வெகு குதூகலமாக நடந்த பின்பு, அவரவர்கள் தத்தம் ஊர்களுக்குத் திரும்பி விட்டார்கள். ஸரஸாவுக்குச் சாக்குப் போக்குச் சொல்லிப் பெற்றோருடன் அவளை அனுப்பி வைப்ப தற்குள் நான் பட்ட பாடு போதுமென்று ஆகிவிட்டது. குழந்தை உள்ளத்தில் பதிந்துபோன அன்புருவத்தை அழித்துவிடுவது முடியக்கூடிய காரியமல்ல என்பது அப்பொழுதுதான் நிதர்சனமாயிற்று.

மேற்கூறிய சம்பவங்கள் நிகழ்ந்ததற்கப்பால் ஐந்தாறு வருஷங்கள் கழிந்துபோய்விட்டன. ஐந்தாறு வருஷங்கள் மனித வாழ்க்கையிலே சாதாரணமான அளவுக்காலம் அல்ல. அதற்குள்ளாகவே, மலைக்கும் மடுவுக்கும் உள்ள எத்தனையோ பெருத்த மாறுதல் களும் நிகழ்ச்சிகளும் ஏற்பட்டு நிலைமையைத் தலை கீழாய்ப் புரட்டி விடுகின்றன. சற்றேனும் எதிர்பாராத சம்பவங்களைக் காலம் நம் முன் கொணர்ந்து நடத்திக் காண்பித்துச் சென்றுவிடுகிறது. ஸரஸாவைப் பொறுத்த மட்டில் முன்போல், "அத்தான், உன்னைத்

தான் கல்யாணம் செய்துகொள்வேன்'' என்று முரணும் குழந்தை ஸரஸாவாக இல்லை. கல்யாணத்தைப்பற்றிய விவரம் முழுதும் அறிந்த ஸரஸாவாகி விட்டாள்.

இந்த மாறுதலை அவள் ஒரே நாளில் திடீரென்று அடைந்துவிடவில்லை. சிறிது சிறிதாக இடையே கழிந்து போன ஆறுவருஷங்களில்! அத்தானுக்கு மணமாகி விட்டபடியால், 'அவனைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்' என்பது வெறும் கேலிப் பேச்சேயன்றிச் சாத்தியமாகக் கூடியதல்லவென்றும், பிறர் நகைத்துப் பரிகசிக்க இடமே யொழிய வேறொன்றும் இல்லை யென்றும் அறிந்துகொண்டாள். நான் ஸரஸாவைச் சந்திக்கும்போதெல்லாம்,"ஸரஸா, என்னைக் கல்யாணம் செய்து கொள்கிறாயா?'' என்று கேட்டால், "போ, அத்தான், கேலி பண்ணிண்டு!'' என்று வலிப்புக்காட்டி விட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டு போய்விடுவாள்.

என்னைப்போலவே, அவளும் முன்பின் பார்த்திராத ஒருவனுடன் தன் வாழ்க்கையைப் பிணைத்துக் கொள்ள விரைந்துகொண் டிருந்தாள்!

இந்த இடைக்காலத்தில் என் வாழ்க்கையிலும் அசாதாரணமான மாறுதல்கள் ஏற்படவில்லை. என் மனைவி வீட்டிற்கு வந்துவிட்டாள். நான் இப்போது ஒரு கிருஹஸ்தன். இந்த ஆறு வருஷத்திலே எங்களுக்கு ஆணும் பெண்ணுமாக இரண்டு குழந்தைகள். குடும்பச் சக்கரம் ரொம்ப ஒய்யாரமாகச் சுழன்று கொண்டிருந்தது.

அடுத்த வருஷம் ஸரஸாவுக்குக் கல்யாணம் நடந்தது. பக்கத்து ஜில்லாவிலிருந்து வந்து சேர்ந்தான் அவளுக்குக் கணவன். அப்போது நான் குடும்பச்

சுமையைத் தூக்கிக்கொண்டு ஸரஸாவிடமிருந்து நெடுந் தூரத்தில் வேறு ஊரில் இருந்தேன். அவள் கல்யாணத் திற்குக் குடும்பத்துடன் போய் விட்டு வந்தேன்.

அதற்கு அடுத்த தடவை நான் ஸரஸாவைப் பார்க்க நேர்ந்தபொழுது அவள் பழைய ஸரஸாவாக இல்லை. முற்றம் மாறிப் போயிருந்தாள். உருவத் திலும் தேக வளர்ச்சியிலும் மட்டுமல்ல; மனவளர்ச்சி யில்தான் அதிகமாக. முன்னெல்லாம் என்னோடு கைதொட்டு விளையாடினவள் இந்தத் தடவை என்முன் நின்று ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. நான் வலிய வழிமறித்து ஏதாவது கேட்டாலும் ஒன்றிரண்டு வார்த்தைகளில் சுருக்கமாகப் பதில் சொல்லிவிட்டுத் தப்பித்துக்கொண்டு ஓடிவிடப் பார்ப்பாள். அவளுடைய இந்த நடத்தை எனக்கு ஒருமாதிரி விநோதமாகத்தான் இருந்தது.

முன்னெல்லாம், "உன்னைத்தான், அத்தான், நான் கல்யாணம் பண்ணிக்குவேன்" என்று முரணின ஸரஸாவா இவள் என்று எனக்கே ஆச்சரியமாக இருந்தது. அவள் மனத்திலும் உருவத்திலும் காலச் சக்கரம் உண்டாக்கி விட்ட மாறுதலைக் கண்டு அதிசயப் பட்டேன்.

அன்று சாப்பாடு முடிந்தபிறகு வீட்டுக் கூடத்தில் எல்லாரும் உட்கார்ந்து பேசிக்கொண் டிருந்தோம். அம்மாமி இருந்தாள். ஸரஸாவும் கூட இருந்தாள்.

"அம்மாமி! ஏது, ஸரஸா நான் கூப்பிட்டால் கூடப் பேசமாட்டேன் என்கிறாள்! யாரோ முன்பின் பார்த்திராத ஒருவனை விரட்டுவதுபோல விரட்டு கிறாளே" என்றேன் விளையாட்டாக.

"ஆமாம்; உன்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போருளோ இல்லையோ? அதனால்தான் வெட்கப் படருள்" என்று கணீரெனச் சொல்லிச் சிரித்தாள் அம்மாமி. கூட இருந்தவர்களும் கொல்லென்று சிரித்தார்கள்.

ஸரஸாவுக்கு இந்தக் கேலி தாங்க முடியவில்லை. சரேலென்று எழுந்து நின்று, என்னையும் மாமியையும் ஒரு தடவை வெருட்டிப் பார்த்து, உதட்டைச் சொடுக்கி வலிப்புக் காட்டிவிட்டு உள்ளே ஓடிப்போய்விட்டாள்.

அப்பொழுதுதான் என் மனத்தில் ஒளி பிறந்தது என்றே சொல்லவேண்டும். குழந்தை ஸரஸாவுக்கும் இந்த ஸரஸாவுக்கும் எவ்வித ஸம்பந்தமும் இல்லை. ஆனால் குழந்தை ஸரஸாவுக்கும் எனக்கும் இடையில் இருந்த உறவை உணர்ந்தவுடன்தான் என் மனத்தில் திடுக்கென்றது. அவ்வளவு வருஷங்களாக நான் ஸரஸாவின் ஒரு விளையாட்டுப் பொம்மையாகவே இருந்திருக்கிறேன்! அப்படித்தான் அவள் கருதி என்னிடம் நடந்து வந்திருக்கிருள். எத்தனையோ பொம்மைகள் இல்லையா: யானை, குதிரை, வண்டி முதலியவை? அவற்ருேடு நானும் ஒரு பொம்மை; ஆம்படையான் பொம்மை!

குழந்தை ஸரஸாவின் பொம்மையாக இருந்ததில் எனக்குப் பரம திருப்திதான். ஆனால் அதைப்பற்றி நினைக்கும்போது என் அந்தரங்கத்தில் கொஞ்சம் ஏமாற்றம் கலந்த ஓர் உணர்ச்சி எழாமல் இருப்பதில்லை.

# பந்தயம்

ஊர் ஊராகச் சுற்றிக்கொண்டு வரும் காபூலிப் பட்டாளம் எங்கள் கிராமத்தின் வெளிப்புறத்திலே உள்ள ஒரு பெரிய தென்னந்தோப்பிலே முகாம் போட்டிருந்தது, சென்ற ஒரு வாரமாக. விரும்பத் தகாதவர் கூட்டத்தினரோடு கூட்டத்தினராக இவர்களும் போலீஸாரால் கருதப்பட்டிருந்தபடியால், கிராம எல்லைக்கு உள்ளே தங்குவதற்கு இவர்களுக்கு அனுமதி கொடுபடவில்லை.

இவர்கள் வந்ததுமுதல் கிராமத்தில் ஒரே பரபரப்பு. இவர்களை அராபியர் என்றும் கூப்பிடுவதுண்டு. "அராபிப்படை வந்திருக்கு. பிடித்துக் கொண்டு போய்விடுவான்கள். நகைகளைப் பிடுங்கிக் கொண்டு போய் விடுவான்கள். இராக் காலத்தில் வீடுகளிலே திருட வருவான்கள். ரொம்ப ஜாக்கிரதையாக இருக்கணும்'' என்றெல்லாம் உஷார் வார்த்தைகள் பறந்த வண்ணமாகவே இருந்தன. போலீஸ்காரர்களும் முன்ஜாக்கிரதையாக ஜாமத்திற்கு ஜாமம் ரோந்து சுற்றிக்கொண்டும் பாராக் கொடுத்துக்கொண்டும் இருந்தனர். பொழுது விடிந்தால்தான் ஒவ்வொருவர் மனத்திலும் நிம்மதி பிறக்கும்.

இந்தக் காபூலியர்களுடனே வியாபாரம் செய்வதற்குஒரு தனிச் சாதுரியமும் சாமர்த்தியமும் வேண்டும். எப்பை சாப்பைகள் இவர்களிடம் அகப்பட்டுக் கொண்

டால் படும்பாடு வேறுதான். இவர்கள் பெரும்பாலும் பச்சை, சிவப்பு, நீலம் முதலிய கல் வியாபாரந்தான் செய்பவர்கள். அரை ரூபாய் பெறும்படியான கற்களை ஐம்பது ரூபாய் என்று ஆரம்பிப்பார்கள். படிப்படியாகக் குறைத்துக்கொண்டே வந்து நாம் கேட்ட விலைக்குச் சில சமயம் கொடுத்து விடுவார்கள். இல்லாவிட்டால் தாறுமாறாக வைதுகொண்டும் போய்விடுவார்கள். இவர்களிடம் பேரம்பேசினால் ஏதாவது வாங்கித் தீரவேண்டும். உண்டானதெல்லாம் பார்த்துவிட்டுப் பின்பு 'எனக்கு வேண்டாம்' என்று சொல்லிவிட்டால் வந்துவிட்டது ஆபத்து; பிரமாதமாகச் சண்டைக்கு வந்து விடுவார்கள். ஆகவே யாவரும், முக்கியமாகப் பெண்கள், இவர்களுடன் வியாபாரம் செய்ய அஞ்சுவார்கள். இப்படி உருட்டி மிரட்டி இவர்கள் வாழ்க்கையும் கழிந்து சென்று கொண்டிருக்கிறது.

இவர்கள் உடல் வன்மைக்கும் தேகக் கட்டிற்கும் பேர்போனவர்கள். ஒவ்வொருவனுக்கும் ஐந்தாறு நபர்களை அடித்து விரட்டக்கூடிய ஆற்றல் உண்டு. காபூலிப் பெண்களுங்கூட அப்படித்தான். மிகுந்த உடல்வலிமை படைத்தவர்கள். அதனாலேயே இவர்கள் உருட்டும் மிரட்டும் சென்றுகொண்டிருந்தது. இத்தகைய காபூலிப் பட்டாளம் ஒரு முறை எங்கள் கிராமத்தில் முகாம் போட்டிருந்தபோது நிகழ்ந்த ஓர் அபூர்வ சம்பவம் என் மனத்திலே அழிக்கமுடியாத ஒரு முத்திரை இட்டுச் சென்றது. வீரச் செய்கைகளுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் இன்னும் மதிப்பு இருக்கத்தான் செய்கிறது; அவைகளுக்கு உரிய இடம் கொடுபடவேண்டும்; இக்காலத்திலும் அவை அசாத்தியமானவையல்ல என்ற ஓர் உணர்ச்சியை உண்டாக்கிவிட்டுச் சென்றது அது.

ஒரு நாள் அஸ்தமன சமயம். நடுக்கடலில் தீப் பிடித்து எரிந்து கொஞ்சங் கொஞ்சமாக ஜலத்திற்குள் அமிழ்ந்து போய்க்கொண்டிருக்கும் ஒரு கப்பலைப் போல் சூரியன் மேற்கு மலைவாய்க்குள் போய்க் கொண்டிருந்தான். அதே சமயம், எதிரியின் கப்பல் மறையும் தருணம் பார்த்து, மெதுவாகவும் ஜாக்கிரதையாகவும், கொஞ்சங் கொஞ்சமாக ஜலத்திற்குள்ளிருந்து வெளிக் கிளம்பும் நீர்மூழ்கிக் கப்பலைப்போன்ற பூர்ணசந்திரன் கீழ்வானில் கிளம்பிக்கொண்டிருந்தான்.

காபூலியர் முகாமில் ஒரே களேபரமாக இருந்தது. ஆண்கள் எல்லோரும் கற்கள் விற்றுவரக் கிராமத்திற்குள் போயிருந்தார்கள். பெண்கள்மட்டும் கத்தி, கத்தரிக்கோல் போன்ற சாமான்களைக் கடை பரப்பி வைத்து வியாபாரம் செய்துகொண்டிருந்தார்கள். இவர்களிடம் வியாபாரம் செய்வதைவிட வேடிக்கை பார்க்கும் எண்ணத்தோடு கிராமமே திரண்டுவந்து கூடிக் கிடந்தது. ரெயில் வருவதற்கு இன்னும் அதிக நேரம் இருந்தபடியால் எட்டினாற்போல் இருந்த ஸ்டேஷன் கூட்டமும் ஒன்று சேர்ந்துவிட்டது. கேட்க வேண்டுமா இரைச்சலுக்கும் சந்தடிக்கும்?

இங்கும் அங்குமாகக் காபூலிக்காரிகள் தங்கள் கடைகளைப் பரப்பி இருந்தனர். எல்லோரையும்விட ஒருத்தி இருந்த இடத்தில்தான் கூட்டம் அதிகமாகக் கூடியிருந்தது. அவள் ஒரு யௌவனப்பெண். வயது பதினெட்டுக்குமேல் இராது. இதரக் காபூலிக்காரிகளைப் போலவே நல்ல சிவப்பு நிறம். அவர்களிடையே கறுப்பைக் காண்பதே அரிதல்லவா? மற்றவர்களைப் போலவே அழுக்கேறிப்போய்க் கிடந்த ஒரு பெரிய

பாவாடையையும் முழங்கால்வரை தொங்கும் அங்கியையும் அணிந்திருந்தாள். ஒரு சிவப்புக் கைக் குட்டையைத் தலையை மறைத்து ஜோராகக் கட்டியிருந்தாள். அதுவும் ஓர் அழகாகத்தான் இருந்தது. அதற்குள்ளிருந்து இரண்டு பின்னல்கள் பிளந்து, இரண்டு தோள்களிடையேயும் முன்பாக மார்பில் விழுந்து இடுப்புக்குக் கீழாகத் தொங்கிக்கொண்டிருந்தன. பச்சை குத்தின பொட்டு ஒன்று அவள் நெற்றியை அலங்கரித்துக்கொண்டிருந்தது. கைகால்களில் கருமணிகளும் வளைகளும் வளையங்களும், ஏகத்தாளுகக் கிடந்து சப்தித்துக்கொண்டிருந்தன. காது, மூக்குகளில் புதுப் புது விதமான நகைகள் தொங்கிக்கொண்டிருந்தன. நல்ல அங்க அமைப்பு; கட்டு மஸ்தான சரீரம். ஆளை மயக்கும் கண்கள். காபூலியரிடையே சாதாரணமாகக் காணப்படாத ஓர் உருவம் அவளது. அவள் இருக்கும் இடத்தைத்தான் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தது, அந்த வேடிக்கை பார்க்கும் கூட்டம். அந்தக் கூட்டத்தைப்பற்றி ஏளனமாகத் தன் பாஷையில் மற்றவர்களோடு கேலிசெய்துகொண்டிருந்தாள் அந்தப் பெண்.

கூட்டம் அவளைச் சுற்றி, "இதென்ன விலை? அது என்ன விலை?" என்றெல்லாம் ஓயாமல் கேட்டுக்கொண்டிருந்தது. அவள் ஒரு சமயம் சாந்தமாகப் பதில் சொல்வாள், சில சமயம் எறிந்து விழுவாள். அதையெல்லாம் கூட்டம் பொருட்படுத்தாது.

ஒவ்வொரு கடையாகப் பார்த்துக்கொண்டு வந்த குண்டாத்தேவன் அவள் கடைக்குமுன் வந்து உட்கார்ந்தான். கள்ளுக் கடையிலிருந்து திரும்பி வீட்டிற்குப்

போய்க்கொண் டிருக்கும் வழி அது. அப்பொழுது அவன் முழுப்போதையில் இருந்தான். சுற்றி வெகு தூரத்திற்குக் கள் நாற்றம் வீசியது. குண்டான் வரவும் கூட்டம் கொஞ்சங் கொஞ்சமாக அவனுக்கு வழி செய்து விட்டுக் கலைந்து கொடுத்தது. குண்டானைப்பற்றிக் கிராம வாசிகளுக்குப் பூரணமாகத் தெரியும். குடி விஷயத்தில் மட்டுமல்ல; தேக வலிமையில்தான் முக்கியமாக. சரியாக ஆறடி உயரம், கற்பனைக்குக் கூட விளங்காதபடி மார்பகலம், புயவீக்கம். அவன் உடல் வலிமையைப்பற்றிக் கிராமத்தில் புரண்டுகொண் டிருக்கும் கதைகள் அநேகம். அவனைக் கண்டால் யாருக்கும் பயம். ஒதுங்கி ஒருபுறம் போய்விடுவார்கள்.

ஒரு மலைக்குன்று போல் குண்டான் அருகில் வந்து உட்காரவும், அந்தக் காபூலிப் பெண் அவனை ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்துவிட்டுத் தன் பாஷையில் என்ன வேண்டுமென்று கேட்டாள். குண்டான் பதில் பேசாமல் ஒவ்வொன்றாகப் பார்த்துவிட்டு ஒரு நல்ல கத்தியை எடுத்து விலை கேட்டான். உடைந்த தமிழில் அவள் அதன் விலையைக் கூறினாள். குடிவேகத்தில் குண்டான் ரொம்பக் குறைந்த விலைக்கு அதைக் கேட்டான். அவள் கொடுக்க இஷ்டமில்லாமல் கத்தியைத் திரும்பக் கேட்டாள். அதற்கும் அவனுக்குச் சம்மதமில்லை. அவள் தன் பாஷையில் என்னவோ திட்டிக்கொண்டு கத்தியை அவன் கையிலிருந்து பிடுங்கப் போனாள். அவளுக்கு இஷ்டமில்லை; இந்த விளையாட்டுப் பிடிக்கவும் இல்லை. அவனைப் பார்த்து விழித்துக்கொண்டே, "கீழே வை கத்தியை. இல்லாவிட்டால் சொன்ன விலையைக் கொடு" என்றாள்.

சொல்லிக்கொண்டே சட்டென்று அவன் கன்னத்தில் ஓர் அறை விட்டாள். குண்டான் பொத்தென்று கத்தியைக் கீழே போட்டான்.

குண்டானை அந்தச் சிறு பெண் அடித்து விட்டதைப் பார்த்துக்கொண்டிருந்த கூட்டம் பரபரப்படைந்தது. மேலே என்ன நடக்கப் போகிறதோ என்று ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்தது. குடி வெறியில் குண்டான் பலக்கச் சிரித்தான். அந்தச் சிரிப்பு, தோப்பு முழுவதும் எதிரொலித்தது.

குண்டான் சரேலென்று அந்தப் பெண்ணின் கையைப் பிடித்துக் கொண்டான். பிடிக்கவும் அந்தப் பெண் சிரித்தாள். எளிதாக நினைத்து லேசாகத் திமிறினாள். முடியவே இல்லை. அவ்வளவு இரும்பான பிடிப்பு அது.

குண்டான் முகத்தில் ஒரு தீவிரமும் காணவில்லை. அவன் லேசாகத்தான் பிடித்துக்கொண்டிருந்தான். அந்தப் பெண் பயந்து போனாள். கூவி மற்றப் பெண்களை அழைத்தாள். எல்லாரும் ஓடி வந்து அவனைத் தாக்கி அவளை விடுவிக்கப் பார்த்தனர். அத்தனை பேர் கூடியும் அவளை விடுவிக்க முடியவில்லை. அவன் அவர்களை லகுவாக விரட்டி அடித்துவிட்டான்.

இந்தச் சமயம் இரண்டு மூன்று ஆண்கள் வந்து சேர்ந்தார்கள்; சப்தத்தைக் கேட்டு அந்த இடத்திற்கு ஓடிவந்தார்கள். அருகில் நின்றுகொண்டு உடைந்த தமிழில் கோபத்துடன், "அவள் கையை விடுகிறாயா இல்லையா?" என்று குண்டானைப் பார்த்துக் கர்ஜித்தார்கள்.

குண்டான் சிரித்துக்கொண்டே, "என்னை அடிக்க இந்தச் சிறுக்கிக்கு அவ்வளவு தைரியமா?" என்று கூறிக்கொண்டே பிடித்திருந்த கையை வீசிவிட்டான். அந்த வேகத்தில் அவள் அந்தக் காபூலியர்மீது விழுந்து சாய்ந்தாள்.

காபூலியர்களுக்குக் குண்டானைப் பார்த்ததும் அவன்மீது கைபோடத் தைரியம் வரவில்லை. சிறிது தயங்கி நின்று கோபமாக விழித்தார்கள். குண்டான் அலக்ஷியமாக எதிர்த்துப் பார்த்தான்.

"தூ! பெண்பிள்ளை கிட்டப் போய்ச் சண்டை போடறே நீ! சோதாப்பயல்! எங்ககிட்ட வந்து பாரு" என்று மீசையை முறுக்கினன் ஒருவன்.

"என்ன செய்யணுங்கறே? ஒரு கை பார்க்கிறயா? தனித்தனியா வறியா? சேர்ந்து வறியா?" என்று கிருதாவில் கைபோட்டுக் கேட்டான் குண்டான்.

காபூலியர் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். அப்பொழுது இருட்டிக்கொண்டிருந்தது. "சரி; நாளைக்குச் சாயந்திரம் இங்கே வா. ஒரு கை பார்ப்போம். சத்தியமாக வறியா?" என்றான் ஒரு காபூலியன்.

"சத்தியமா வறேன்" என்று கையடித்துக் கொடுத்துவிட்டுக் கிராமக் கூட்டம் தன்னைப் பின் தொடர்ந்து வர, வீறுப்புப் பேசிக்கொண்டு அதை விட்டுப் புறப்பட்டான் குண்டான்.

காபூலியனோடு குண்டான் பந்தயம் போட்டிருக்கும் விஷயம் கிராமம் முழுவதும் பரவிவிட்டது. மறுநாள் சாயந்திரம் காபூலியர் முகாம் போட்டிருந்த தோப்பிலே

ஒரு பெருந் திரளான கூட்டம் கூடி இருந்தது. காபூலியர் ஒரு பக்கமாகவும் ஜனங்கள் ஒரு பக்கமாகவும் ஒதுங்கி நின்றுகொண்டிருந்தார்கள். காபூலியர் முன்னணியில் ஐந்தாறு பலிஷ்ட ஆடவர்களும், எதிரில் குண்டானும் அவனுடைய சகபாடிகள் சிலரும் நின்று கொண்டிருந்தார்கள்.

தன் வயிறு கொள்ளுமட்டும் நிறையக் குடித்து விட்டு வந்திருந்தான் குண்டான். அவன் கண்கள் ரத்தம்போல் சிவந்து கிடந்தன. 'நான் தயார்' என்று சொல்லும் பாவனையாக 'ஹூம்' என்று காபூலியரைப் பார்த்துத் தலையை அசைத்தான் அவன். என்ன நடக்கப் போகிறதோ என்று கூட்டம் வெகு ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்தது.

"நீதான் பந்தயம் வைக்கணும்" என்றான் காபூலியரில் ஒருவன், குண்டானின் முகத்தைப் பார்த்துக் கொண்டே.

"நீதானே கூப்பிட்டே? நீயே கூறேன். நான் எதுக்கும் சம்மதம்" என்றான் குண்டான் அலக்ஷியமான பார்வையுடன்.

தங்கள் பாஷையில் காபூலியர் ஒருவருக்கொருவர் ஏதோ ரகசியமாகப் பேசிக்கொண்டார்கள். அத் தருணம் குண்டான் அவர்களைத் திரும்பக் கூப்பிட்டது போல் இருந்தது. திரும்பிப் பார்த்தார்கள்.

கொஞ்ச தூரத்தில் ஒரு கூடாரத்தின் கயிறு இழுத்துச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த ஒரு பெரிய பாறாங் கல்லைச் சுட்டிக் காண்பித்து, "இந்தா, அதை இங்கே தூக்கிக்கிட்டு வந்து போடு" என்றான் குண்டான் அழுத்தமான குரலில்.

ஒரு காபூலியன் சென்று அதைத தூக்கிப் பார்த்தான். அதை அசைக்கவே முடியவில்லை. இன்னும் ஒருவனை உதவிக்குக் கூப்பிட்டான். இருவரும் சேர்ந்து முக்கி முனகிக்கொண்டு தூக்கமுடியாமல் தூக்கிக் கொணர்ந்து போட்டார்கள்.

அதன்மீது தன் ஒரு காலைத் தூக்கிவைத்துக் குண்டான், "ரெண்டுதரம் இந்தக் கல்லைத் தூக்கி ஆள் உசரம் வீசிப்போட்டு, தோள்ளே ஏந்திக் கீழே விடறேன். என்ன சொல்றே?" என்று அறை கூவிப் பேசினான்.

அதைக் கேட்ட காபூலியர்கள் திகைத்து நின்று விட்டார்கள். "முடியாது! ஒருதரங்கூட முடியவே முடியாது அவனால்" என்று அவர்கள் வாய் முணு முணுத்தது. இரண்டொருவர் வாய்விட்டும் சிரித் தார்கள்.

குண்டானுக்கு அந்தச் சிரிப்புப் பிரமாதமான கோபத்தை உண்டாக்கி விட்டது. திரும்பவும் "என்ன சொல்றே?" என்று கர்ஜித்தான்.

இதைக் கேட்டுக்கொண்டு முன்னால் நின்றிருந்த அந்தக் காபூலிப் பெண், குண்டானைக் கன்னத்தில் அடித்த அந்த அழகி, ஒரு வினாடி தீர்க்கமாயும் தீவிர மாயும் குண்டானைப் பார்த்துவிட்டுத் தன் பாஷையில் காபூலியரிடம் ஏதோ கூறிவிட்டுக் குண்டான் பக்கம் திரும்பினாள். அவள் கண்களில் ஓர் ஒளி வீசியது. அவள் முகத்தில் தீரத்தின் குறிகள் குறுக்கிட்டு ஓடின. குண்டானைப் பார்த்து மெதுவாகச் சிரித்துக்கொண் டாள். அவள் விழிகள் அவனையே உறுத்துப் பார்த்தன. காபூலியர் இன்னும் வெறுமனே இருப்பதைப் பார்த்து

அவர்கள் பக்கம் அவள் திரும்பி, "ஹூம்!" என்று தலையை அசைத்தாள். தான் சிறிது முன் கூறியதை அவனிடம் கூறுங்கள் என்று வற்புறுத்துவதுபோல் இருந்தது அந்த அசைப்பு.

திரும்பவும் அவள் கண்கள் குண்டானை உற்றுப் பார்க்கத் தொடங்கின. அதில் ஒரு சாந்தமும் அமைதியும் அன்பும் கலந்து தோன்றின.

காபூலியரில் ஒருவன் முன்னுக்கு வந்தான். "நீ சொன்னபடி ஒருதரம் செய்துட்டயானால், இதைத் தூக்கிப்போட்டுப் பிடிச்சுட்டேயானால், இதோ—" என்று சொல்லிக்கொண்டே அருகில் நின்ற அந்தக் காபூலிப் பெண்ணின் கையைப் பற்றிக்கொண்டு, "நீ கையைப் பிடிச்சு இழுத்த இந்தக் குட்டியை உனக்குக் கட்டிக் கொடுத்துடறேன். சம்மதமா?" என்று கம்பீரமான தொனியில் பந்தயம் கூறினான். அவன் கண்களில் ரோஷம் வழிந்தோடியது.

கூட்டமோ திகைத்து நின்றுகொண் டிருந்தது. இந்த விநோதமான பந்தயத்தைக் கேட்டுக் காபூலிப் பண்டையோ சிரித்துக் கெக்கலி கொட்டிக்கொண் டிருந்தது. அவனால் அதைத் தூக்கமுடியாதென்பதும், அவனை அவமானப்படுத்தி அனுப்பிவிடலாம் என்பதும் அவர்களுக்கு நிச்சயம். அந்தப் பெண்ணோ குண்டானையே இமை கொட்டாமல் பார்த்துக்கொண் டிருந்தாள்.

குண்டான் இதைக் காதுகொடுத்துக் கேட்டான். ஒரு முறை அந்தப் பெண்ணை ஏற இறங்கப் பார்த்தான். அவர்கள் கண்கள் சந்தித்தன; இருவரும் சிரித்துக் கொண்டார்கள்.

அடுத்த விநாடி குண்டான் கையில் இருந்த தடி தூரச் சென்று விழுந்தது. தலைக்கட்டை அவிழ்த்து எறிந்தான். கச்சத்தை இறுக்கிக் கட்டிக்கொண்டான். கல்லருகில் சென்று கீழே குனிந்து கல்லை வசம் பார்த்து வைத்துக்கொண்டான்.

கூட்டத்தின் பரபரப்பு அதிகரித்தது. எல்லாருடைய கண்களும் குண்டானையே பார்த்த வண்ணம் இருந்தன. எல்லோரும் விலகி நின்று கொண்டார்கள். குண்டான் தனக்கு வழிவிட்டு வெகு தொலைவில் தள்ளி நின்றுகொள்ளும்படி கூட்டத்தை எச்சரித்துவிட்டு, கல் இருக்கும் இடத்திலிருந்து சுமார் நூற்றைம்பது அடி பின் சென்று நின்றுகொண்டான்.

பரபரப்படைந்த கூட்டம் விலகி நின்று மௌனமாகப் பார்த்துக்கொண் டிருந்தது.

பாறை உருளுவதுபோல் அங்கிருந்து ஓட்டமாகக் கல்லை நோக்கி வந்தான் குண்டான். வந்த வேகத்திலேயே சரேலென்று கீழே குனிந்து கல்லைத் தூக்கி உயரே விட்டான். ஆள் உயரத்திற்குமேல் சென்றது அந்தக் கல்!

அடுத்த விநாடி விழும் கல்லிற்கு நேராக முண்டாவைப் பிடித்தான். கல் முண்டாவில் தாக்கி நின்றது. அருகில் நின்றுகொண் டிருந்தவன் ஒன்று இரண்டு என்று எண்ணினான், பன்னிரண்டுவரையில். அடுத்த எண்! கல்லை வீசிவிட்டான் குண்டான். தடாலென்ற சப்தத்துடன் பேரொலி செய்து கொண்டு தரையில் விழுந்து சிறிது பதிந்தது அந்தப் பாறுங்கல்!

கூட்டத்தினரின் திகைப்பும் வியப்பும் மாறி, அவர்கள் சுயப்பிரக்ஞைக்கு வரச் சில விநாடிகள்

சென்றன. சுய நினைவு வந்தவுடன் அவர்கள் பார்த்தது இதுதான்.

அந்தக் காபூலிப் பெண், எல்லோரையும்விட அதிக ஆவலோடு இந்த வீரச்செயலைப் பார்த்துக்கொண் டிருந்தவள், குண்டானுடைய கைப் பிடிக்கு நடுவில் நின்றுகொண்டாள். அவள் கரங்கள் அவன் தோள்மீது இருந்தன. நம்பக்கூடியதா?

காபூலியர் குண்டானை அப்படியே செண்டுபோல் தூக்கிக்கொண்டு ஆரவாரத்துடனே கூடாரத்தை நோக்கி ஓடினார்கள். அந்தச் சிறுமி குதூஹலமே ஓர் உருவெடுத்து வந்தவள்போன்று இருந்தாள். கூட்டத்தின் ஆர்ப்பரிப்புக்குக் கேட்க வேண்டுமா?

உடனே குடம் குடமாகக் கள் கொண்டு வரப்பட்டது. குண்டானுக்கும் வேண்டிய மட்டும் கொடுத்துத் தாங்களும் குடித்து வெற்றியைக் கொண்டாடினார்கள் காபூலியர். வீரனை வீரன்தானே மதிக்க முடியும்!

மேலே வளர்த்துக்கொண் டிருப்பானேன்? அந்த இடத்திலேயே, அப்பொழுதே அந்தக் காபூலிப் பெண்ணிற்குத் தன் சாதி வழக்கப்படி தாலி கட்டினான் குண்டான். அந்தப் பெண் அடைந்த பெருமைதான் என்ன? தன் உயிரையே அவனிடம் வைத்துவிட்டாள்.

காபூலியர் முகாம் மேற்கொண்டு ஒரு மாதம் அந்தக் கிராமத்திலேயே போட்டிருந்தது. குண்டான் முக்கால்வாசி நேரம் அந்தத் தோப்பிலேதான் கழிப் பான்; மிகுதி நேரத்திற்கு அந்தக் காபூலிப் பெண் குண்டான் வீட்டிற்கு வந்து விடுவாள். தன் இனத்தை விட்டு வந்த அவள் சமைத்துப்போடும் உணவைக்

குண்டான் ஆவலோடு சாப்பிடுவதைப் பார்க்க வேண்டுமே! உடைந்த தமிழில் அவள் உளறுவதைக் கேட்டு அவன் மகிழ்வதையும் காண வேண்டுமே!

ஒரு மாதம் கழிந்தது. காபூலியர் பட்டாளம் முகாமை வேறு இடத்திற்கு மாற்றும் நாளும் வந்து விட்டது. அன்று சாயங்காலம் கூடாரங்கள் எல்லாம் பிரிக்கப்பட்டு மூட்டை முடிச்சுக்கள் கழுதைகள் மீது ஏற்றப்பட்டுப் புறப்படத் தயாராக இருந்தன. தோப்பிலே திரளான கூட்டம் கூடி இருந்தது, அவர்களை வழி அனுப்புவதற்கு. காபூலியர் ஒவ்வொருவராகக் குண்டானிடமும் அவன் புதுக் காபூலி மனைவியிடமும் தனித்தனியே விடை பெற்றுக்கொண்டார்கள். தங்களோடு கூடவே புறப்பட்டு வரும்படி அழைத்ததற்கு அவள் வர மறுத்துவிட்டது கண்டு மிக்க வருத்தம் தெரிவித்தார்கள். அந்தக் காபூலிப் பெண் தன் இனம் பிரிந்துபோவதைப்பற்றிச் சிறிது வருத்தப்பட்டாள். ஆனால் குண்டானை விட்டுப் பிரிந்து அவர்களோடு வரக் கண்டிப்பாக மறுத்துவிட்டாள்.

காபூலியர் எல்லோரும் புறப்பட்டுவிட்டார்கள். குண்டானும் அவளும் தோப்பில் நின்று அவர்களை வழி அனுப்பிக் கண்ணுக்கு மறையும்வரை அந்தத் திசையையே பார்த்துக்கொண்டிருந்துவிட்டுத் திரும்பினார்கள்.

# ஞாபகம்

நாலு நாளைக்கு முந்தியே கல்யாண அழைப்புக் கடிதம் அவனுக்குக் கிடைத்துவிட்டது. அதோடு இருந்த கடிதத்தில், "உன்னை நிச்சயமாய் எதிர்பார்க்கிறேன்" என்று ஒரு தடவைக்கு இரண்டு மூன்று தரம் வற்புறுத்தி எழுதியிருந்தது.

கடிதம் திடுதிப்பென்று கிடைத்தபோதிலும், விஷயம் அவனைப் பிரமிக்க வைக்கவில்லை. சொல்லப் போனால் இந்தச் சம்பவத்தை இன்னும் வெகு சீக்கிரமாகவே அவன் எதிர்பார்த்திருந்தான். அது இயற்கையானதுங்கூட. வாழ்க்கையின் நீண்ட போக்குக்குத் தடையாக இருக்கும் ஓர் இக்கட்டான, சந்தேகாஸ்பதமான நிலையை ஒருவிதமாக நிவர்த்தி செய்து கொள்ளாமல் ஒருவன் எத்தனை காலம் இருக்கச் சாத்தியப்படும்?

ஆகவே அதுதான் புத்திசாலித்தனமான காரியமுங்கூட. முடிவில்லாத ஒரு துன்ப வேதனையை, வலியை, அது தணித்து ஏதோ ஆறுதல் கொஞ்சம் அளிக்கக்கூடியது என்ற நினைவில் அவன் அதைச் செய்யத் துணிந்துவிட்டதில், அவன்மீது கொஞ்சங் கூடக் கோபமோ ஆத்திரமோ படுவதற்கு இல்லை.

இந்த விதமான நினைவுகளே அந்த அழைப்பைப் படித்ததும் சந்திரன் மனத்தில் தோன்றின. உதடுகளை

அமிழ்த்திக் கிளம்பிய ஓர் அரைப்புன்னகையுடன், சுகமாக விட்டதென்றோ வெகுவாகத் தடுமாறிக் கிளம்பியதென்றோ சொல்லமுடியாத ஒரு சிறு பெரு மூச்சு விட்டுக்கொண்டு அந்த அழைப்புக் கடிதத்தை மடித்து வைத்தான். மறுபடியும் அந்தக் கடிதத்தின் வரிகளில் கண்ணைச் செலுத்தியபோது, "உன்னை நிச்சயமாக எதிர்பார்க்கிறேன்; அதற்குள் வந்து பார்க்கிறேன்" என்ற வரிகள் அவன் மனத்தில் இறுகப் பதிந்தன.

கல்யாணத்துக்கு முந்திய நாள் காலை, கடிதப் பிரகாரம் ராமசாமி சந்திரனை வந்து பார்த்தான். அழைப்போடு கடிதம் எழுதியிருந்தும், சந்திரன் வராமல் இருப்பதற்குச் சாதகமான காரணங்கள் தாம் வலுத்து இருக்கும் என்ற பயம் கடிதம் அனுப்பியபோதே ராமசாமிக்கு இருந்தது. இருவரிடையேயும் இருந்த பழக்கப்போக்கு ஸமீப ஸம்பவத்தின் பயனாக நெகிழ்ந்து போய்க் கிடந்த நிலைமையில், அவை போதாவென்று நிச்சயமாக நம்பினான். நேரில் சென்று அழைப்பது உசிதம், பொருத்தம் என்று அவனுக்குப் பட்டது.

"என் கடிதம் கிடைத்ததா?" என்று கேட்டான் ராமசாமி.

"கிடைத்தது. அது போதாதா எனக்கு? இதற்காக இந்த அவசரத்தில் நீ வரவேண்டுமா?" என்றான் சந்திரன்.

"நேற்றும், முந்தாநாளுங்கூட வந்திருந்தேன். அறை பூட்டி இருந்தது."

"தினமுமா வந்தாய்?" என்று அவனைக் கொஞ்சம் அதிசயத்தோடு பார்த்துக்கொண்டே, "இரண்டு

நாளும் 'லைப்ரெரி'க்குப் போயிருந்தேன்'' என்றான் சந்திரன்.

"எப்படியாவது பார்த்து அழைத்துவிட வேண்டும் என்று தீர்மானம்.''

சந்திரன் லேசாகச் சிரித்துக்கொண்டான்; "நீ வராவிட்டாலும் நான் வருவதாகத்தான் இருந்தேன்'' என்றான்.

வாஸ்தவம்! அவன் உதடுகள் வார்த்தைகளை வெளிக்கிளப்பின. ஆனால் மனப்பூர்வமாகச் சொல்லப் பட்டவைதாமா அவை? இல்லை—நிச்சயமாய் அவன் இருதயம் பேசவில்லை அப்போது. ஓர் அழைப்புக்கு அவன் பதில் சொல்லுகையில் ஒப்புக்கு அவனால் வேறு எவ்விதம் பதில் சொல்ல முடியும்? முகூர்த்தத்துக்குப் போவதைப்பற்றி அவன் யோசித்து யோசித்துப் பார்த்து இம்முடிவுக்கு வந்திருந்தான்: 'அவன் கல்யாணம் செய்துகொள்வதில் எனக்குச் சந்தோஷந் தான்; என் ஆசீர்வாதம் அவர்களுக்கு. ஆனால் நான் போகப்போவதில்லை.'

ஆகையால் நேரில் வந்து கூப்பிட்டாலும் ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லித் தட்டிக்கழித்து விடுவ தென்றுதான் யுக்தி பண்ணியிருந்தான். ஆனால் நேரில் வந்து கூப்பிட்டபோது அவன் மனம் கொஞ்சம் குழப்பம் அடைந்தது. போவதா, வேண்டாமா என்ற வேதனைக்கு இடையில் அலைந்தது. இரண்டுங்கெட்டான் நிலைமையில் படும் அவஸ்தையைப்போல வேறு ஒன்றும் இருக்க முடியாது; அவ்வளவு நரக வேதனை அது.

"இல்லை, சந்திரா! ஒப்புக்கு உன் பதிலை நான் எதிர்பார்க்கவில்லை. உன்னை நேரில் வந்து இப்போது

அழைத்துவிட்டதில் பாதி திருப்தி எனக்கு. இன்னும் பாதி நீ......"

இதைச் சொல்லும்போது அவன் குரலில் ஏற்பட்ட தழுதழுப்பைச் சந்திரன் கவனிக்காமல் இல்லை. அவன் குழப்பத்தை அதிகரிக்கச் செய்யும் ரீதியில் அவை வெளிவந்தன. ராமசாமி அவ்வாக்கியத்தைத் தயங்கி முடிக்குமுன் இடைமறித்து வேறு ஏதோ கேள்வி கேட்கப்போன சந்திரன், ராமசாமி மீண்டும் பேச வாயெடுப்பதைக் கண்டு அடக்கிக்கொண்டான்.

அவன் நினைத்த கேள்விக்குப் பதில் போல் அதே சமயம், "சந்திரா, இப்போது வரும் வண்டியில் அண்ணுவோடு ராதா வருகிருள்" என்ருன் ராமசாமி.

சந்திரன் கண்கள் அதைக் கேட்டதும் விரிந்து முகம் மலர்ந்தது. "வருகிருளா? பார்த்து ரொம்ப நாளாச்சு!" என்று ஆவலும் கவலையும் கலந்து தொனிக்கும் குரலில் கேட்டான்.

"நீ பார்க்கவேண்டாமா அவளை?"

"ஆமாம், பார்க்கணும்" என்று முனகிக்கொண்டான் சந்திரன். சில விநாடிகளுக்கு அவன் பார்வை கீழ்நோக்கி இருந்தது.

"அதற்குத்தான், இன்று சாயந்திரமே வந்துவிடு; நாளை முழுதும் இருக்கலாம்" என்று ஆசையைக் கொட்டி அழைத்தான் ராமசாமி. சந்திரன் வருகையைப்பற்றிய நம்பிக்கை கொஞ்சம் ராமசாமிக்கு ஏற்பட்டது.

சந்திரன் மனமோ ஒருவித நிர்ணயமும் செய்ய முடியாமல் அவதிப்பட்டுக்கொண்டிருந்தது. வெகு

நாளைக்குப் பிறகு ராதாவைப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. ஆனால்—? அவன் கண்களை மூடி ஒரு விநாடி யோசித்தான். என்ன செய்வது? உடனே ஒரு பதில் சொல்லியாக வேண்டும்; அதுவும் செய்யக் கூடியதாக இருக்கவேண்டும்.

சட்டென்று ராமசாமியின் பக்கம் திரும்பினான்; "ராமு, கட்டாயம் வருகிறேன் முகூர்த்தத்துக்கு— நிச்சயமாய்" என்றான். ஒரு ஹீனமான சிரிப்பு அவன் உதடுகளிலும், மனம் விட்டுச் சொன்ன நிச்சயக்குறி காட்டும் பார்வை அவன் கண்களிலும் உண்டாயின.

அந்த வார்த்தைகளைச் சந்திரன் வாயிலிருந்து கேட்பதற்கு எவ்வளவு திருப்தியாக இருந்தது ராமசாமிக்கு! அவனுக்கு அது போதும். தன் ஆசை நிறைவேறும் அமைதியுடன் மனப்பூர்வமாக எழுந்த அந்த வார்த்தைகளை ஏற்றுக்கொண்டான். ஆனாலும், "இன்று சாயந்திரம் வரமாட்டாயா?" என்று கேட்டான்.

"ராமு! கட்டாயம் முகூர்த்தத்துக்கு வருகிறேன், பாரேன்" என்று மறுபடியும் அழுத்தினான் சந்திரன். அவன் அழுத்திய மாதிரியில் தொனித்த அர்த்தத்தை ஊகித்த ராமசாமிக்கு அதற்குமேல் அவனை வற்புறுத்தத் தோன்றவில்லை. இவ்வளவு மனசு இணக்கம் அவன் கொள்வானென்றே ராமசாமி எதிர்பார்க்கவில்லை. இன்னும் கசக்கி மோந்து பார்க்கப்போனால்?— "சரி, சந்திரா. உன் இஷ்டம்! வற்புறுத்தவில்லை. முகூர்த்தம், சாப்பாடு இரண்டுக்குந்தான். சாக்குச் சொல்லக்கூடாது. மாட்டாயே?" என்று கூறி விஷம

மாகவும், உறுதி கேட்கும் ரீதியிலும் பார்த்துக் கொண்டே எழுந்தான்.

அவர்கள் உதடுகளுக்கு வெளியே கிளம்பின வார்த்தைகள், மனத்தில் அப்போது பாவி ஓடிக்கொண்டிருந்த உணர்ச்சி வேகத்தின் அளவை அப்படியே படம் பிடித்துக் காட்டவில்லை. ஒவ்வொரு வார்த்தை பேசும் போதும் ஒட்டிப்போய்க் கிடந்த நாக்கைப் பலவந்தமாக இழுத்துப் பேசும் உணர்ச்சிதான் அவர்களுக்கு இருந்தது. ஆனாலும் அவர்கள் பிரிந்தபோது, பரஸ்பரம் இருவர் மனநிலைகளையும் விண்டு ஒருவரை ஒருவர் அறிந்துகொண்டுவிட்ட ஒரு சோகப்புன்னகையின் அடையாளம் இருவர் முகத்திலும் தோன்றியது.

இப்போது கட்டாயம் தான் வருவதாக உறுதி கூறி விட்டதால் அதை நிறைவேற்றுவதற்காகவாவது அவன் போகவேண்டாமா? மறுபடியும் ஒரு சிறு யோசனைக்குப் பிறகு திடசித்தம் ஏற்பட்டது: "சரி, போய்விட்டுத்தான் வருகிறேனே. முக்கியமாக நான் அவளைப் பார்க்க முடியும்'' என்று தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டான். அதன் பிறகு அவன் குழம்பிக்கொண்டு இருக்கவில்லை. மன அலைப்புக்குத் தற்காலச் சாந்தி கிடைத்தது.

ஆனாலும் கல்யாண வீட்டை நோக்கி எடுத்து வைத்த ஒவ்வோர் எட்டும் கனத்து விழும்போது, அவன் ஹிருதய பாரத்தின் பிரதிபலிப்பாகத் தோற்றியது. அதைத் தணித்துக்கொள்ள அவன் வேகமாக எட்டு வைக்க வைக்க அந்தப் பாரமும் அதிகரித்தது போல் இருந்தது. அதற்கு இடையிலும் ஒரு முகம் அவனை முன்னுக்குத் தள்ளிச் சென்றது. அவன் அதை

ஆவலோடு எதிர்பார்த்தான்: அந்த ஆவல் அவனை விரட்டியது.

விலகி விலகிப் போவதுபோல் உணர்ச்சி ஊட்டிய நரம்புகளை இழுத்துச் சரிப்படுத்திக்கொண்டு ஒருவிதமாகச் சந்திரன் படியேறிவிட்டான். வாசல் திண்ணையில் நாதஸ்வரமும் தவிலின் சப்தமும் கொஞ்சம் அவன் மனத்தைத் தம்மிடம் திருப்பிக்கொண்டன. அவனுக்கு ஊக்கம் கொடுப்பதுபோல் அதே சமயம், "சந்திரா, வா வா" என்று சொல்லிக் கொண்டே ஒரு பழகின குரல் அவன் தோள்களை நெருக்கியதும், கவனம் வந்து திரும்பிப் பார்த்தான். அவனுக்கு மிகவும் அறிமுகமான உருவம்.

அந்த வரவேற்பை அங்கீகரிக்கும் ஒரு சிரிப்புடன் அவன் பேசுமுன், இன்னும் பல குரல்கள் அதேவிதப் பழக்கத்துடன் முன்வந்து அவனை வரவேற்று உள்ளே இழுத்தன. "நேற்றே வரக் கூடாதா, சந்திரா?" என்று ஒரு குரல் கேட்டது. பல குரல்கள் அதற்குப் பதில் எதிர்பார்த்தன.

"வேலை இருந்தது."

"சரி, முகூர்த்தத்துக்காவது வந்தாயே, ரொம்ப ஸந்தோஷம். ராமு! இதோ சந்துரு" என்று சொல்லிக் கைகளைப் பிடித்து அவனை முன்னுக்கு இழுத்துச் சென்றார்கள். சந்திரன் கைகளை இழுத்துக்கொண்டு நின்று, "இல்லை, இங்கேயே உட்கார்ந்து கொள்கிறேன். சௌகரியமாக இருக்கு" என்று மணைப்பக்கம் போகாமல் எட்டியே உட்கார்ந்துகொண்டான். சந்தனம், குங்குமம் அவன் முன்பு நீட்டப்பட்டன. மோதிர விரலைச் சந்தனக் குழம்பில் தோய்த்துக் குங்குமத்தைத்

தொட்டுக்கொண்டே தலையை நிமிர்த்திப் பார்த்தான்: மிகவும் அன்னியமாக இருந்தபோதிலும், பழக்கம் கொண்டாடிச் சிரித்து வரவேற்கும் ஒரு முகம்.

"இவர்தாம் நம் ராமுவின் மைத்துனர்" என்று சந்திரன் அருகில் உட்கார்ந்து இருந்த ஒரு பழக்கமான குரல் அவனுக்கு அறிமுகப்படுத்தியது: அதை ஏற்றுக் கொண்டு சந்திரன் குங்குமம் தீட்டிய விரலை நெற்றி மத்தியில் பதித்துக்கொண்டே கண்களை மணைப்பக்கம் திருப்பினான். அவன் திரும்புவதையே ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்த ராமு லேசாகச் சிரித்துத் தலையை அசைத்து அவனை வரவேற்றான். அவனைப் பார்க்க ராமுவுக்குத் திருப்தியாக இருந்தது.

எத்தனை குரல்கள் சந்திரனை வந்து சுற்றிச் சூழ்ந்து கொண்டு குசலப் பிரச்னம் வினவின! ஒரு வார்த்தையும் அரை வார்த்தையுமாக எல்லோருக்கும் பதில் கொடுத்துச் சம்பாஷணையில் கலந்து கொள்ளச் சந்திரன் முயற்சி செய்தான். வந்து விட்ட பிறகு ஒட்டாமல் ஒதுங்கி உட்கார்ந்து கொள்வதோ, சுபாவமாகவும் சகஜமாகவும் நடந்து கொள்ளாமல் இருப்பதோ, எல்லோருக்கும் - முக்கியமாகத் தனக்கு - எவ்வளவு உபாதையாக இருக்கும்? அப்படி இராமல் கூட்டத்தில் சேர்ந்து இருக்க நிச்சயித்துக் கொண்டான்.

முகூர்த்த கால அவசரத்தில் ராமு சந்திரனை மணைக்கு அழைத்துப் பேச முடியவில்லை. சந்திரன் சற்றுத் தள்ளியே உட்கார்ந்துகொண்டிருந்தான். அந்த அவசரத்திலும் ராமு ஒருவரைக் கூப்பிட்டு ஏதோ சொல்லிச் சந்திரன் பக்கம் திரும்பியபோது மறுபடியும் பார்வை கலந்தது. அப்படியே சந்திரன் கண்கள்

ராமுவுக்கு அடுத்தாற்போல் மாறின. ஒரு விநாடி உற்றுப் பார்த்தான்; பிறகு சாதாரணமாகக் கண்களைத் திருப்பிக்கொண்டான். ஒன்று, இரண்டு......பல முகங்கள் சந்திரன் முன் எழுந்து அவைகளுக்கும் ராமுவுக்கும் ஏற்பட்டுள்ள புது உறவை அழுத்தித் தெரிவிப்பனபோல் அவனையே பார்த்து விழித்தன. அவர்கள் ஏன் அப்படிப் பார்க்கவேண்டும்? ஆனால் அப்படிப் பார்த்ததில்தான் என்ன தப்பு? இம்மாதிரிக் குழப்ப நினைவுகள் தோன்றின. பரபரப்பு அடையாமல் இருக்க முடியவில்லை. சரேலென்று பார்வையைத் திருப்பி யாராரோ கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் ஒரு விதமாகப் பதில் சொல்ல முயன்றுகொண்டே குறிப்பு இல்லாமல் மேலும் கீழும் பார்த்துக்கொண் டிருந்தான்.

ஆனால் ராதா எங்கே? அவளைப் பார்க்கத்தானே அவன் வந்திருந்தான்! தலை குனிந்து இருந்தவன், சரேலென்று நிமிர்த்தி ஒரு குறிப்புடன் கண்களைச் சுழற்றிக் கூடத்தை ஆராயத் தொடங்கினான். மிகவும் பெரிய இடம் அது. தூணுக்குத் தூண் கட்டி, விரிந்து மறைத்து நின்ற வாழை மரங்கள் அவன் கண்களுக்குக் கொஞ்சம் வேலை கொடுத்தன. இன்னும் உற்றுப் பார்த்துக்கொண் டிருந்த சில புதிய முகங்களையெல்லாம் பார்வையிலிருந்து ஒதுக்கிக் கொண்டே வந்தான்; ஆனால் அவன் தேடிய பொருள் அங்கே இல்லை. ஏமாற்றத்துடன் தலையைத் தணிக்கப் போகும் சமயம், "ஐயோ, நான் வரமாட்டேன்! என்னை விட்டுவிடு!" என்ற கீச்சுக் குரல் சமீபத்தில் கேட்டது.

"சீ, அசடே! ஐயோ சொல்லாதே" என்று குழந்தையின் வாயைப் பொத்தினார்கள்.

"அதோ பாரு, உன் சந்துருமாமா" என்றன பல குரல்கள் சேர்ந்தாற்போல.

"இதோ இருக்காளே – ராதா – அவன் தேடின பொருள்."

சந்திரன் ஆசையின் வேகத்துடன் அந்தப் பக்கம் திரும்பினான். ஒரு விநாடி தயங்கி அவனை உற்றுப் பார்த்த ராதா, "என்னை விட்டுடேன். விளையாடப் போகணும்!" என்று தன்னைத் தூக்கி வந்த கைகளினின்று திமிறி நழுவிவிடப் போராடிக்கொண்டிருந்தாள். அவள் கையில் அரைகுறையாகச் செய்யப்பட்ட வாழையிலை ஊதுகுழல் கலைந்து தொங்கிக்கொண்டிருந்தது. நடுவில் அவளைத் தொந்தரவு பண்ணி மாமாவைக் காட்டுவதற்குத் தூக்கிவந்து விட்டார்கள். "இதோ பாரு! சந்துருமாமா" என்று தூக்கிவந்தவர் அவளை அவன் பக்கமாகத் தள்ளினார்.

"ராதா, வாடியம்மா இங்கே" என்று ஆவலோடு கைகளை நீட்டிச் சந்திரன் அவளைத் தன்னிடம் அழைத்தான். அவன் கைகள் அவளை வாங்கப் பறந்தன. குழந்தை முரணுவதைப் பார்த்துப் பலபேர் அவளை நெருங்கி, "போ அம்மா, மாமா கிட்டே. சந்துரு மாமா தெரியாதா உனக்கு?" என்று சிபார்சு செய்தனர்.

"ஊஹூம்! போகமாட்டேன் போ! விட்டுடு. என் ஊதல்" என்று அழுது கத்திக்கொண்டே சந்திரன் கையில் ராதா இறங்க மறுத்து வில்லாக வளைந்து கொடுத்தாள். சந்துரு சட்டெனக் கைகளைப் பின்னரித்துக்கொண்டு, "சரி! சரி! அழவிட இது சமயமல்ல. அவளை இஷ்டப்படி விட்டுவிடுங்கள். சரி!

போடியம்மா" என்று அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கூறினன்.

ராதா கீழே சுதந்திரமாக விடப்பட்டாள். அவள் பிடிவாதத்தைக் கண்டு கூட்டத்திலிருந்து ஒரே சிரிப்புக் கிளம்பியது. ருசியான வார்த்தை ஒன்றும் அப் போதைக்குப் பயன்படவில்லை. "தானே வராள் பாருங்கள், இன்னுங் கொஞ்ச நாழிகையில்", "குழந்தை குணம் அப்படித்தானே?", "அடையாளம் தெரியாமே என்ன அவளுக்கு?", "மாமா வரப்போகிறரென்று காலமேகூடச் சொல்லிக்கொண்டு இருந்தாளே?"— இந்த மாதிரிப் பல சமாதானங்கள் சந்திரன் காதருகில் கலகலத்தன.

சந்திரன் கொஞ்சம் சிரித்துவிட்டு மௌனமாக இருந்தான். ராதா தள்ளிப்போய் வாயைக் கோண வைத்துக்கொண்டு சிதைந்த ஊதுகுழலைச் சரிப் படுத்திக்கொண்டு இருந்தாள்; அடிக்கடி ஒரு கடைக் கண் பார்வைமட்டும் தன் பக்கம் திரும்பும்போது சந்திரன் பார்வையில் படும்.

மணையில் உட்கார்ந்து ஜாடையாக இதைக் கவனித்த ராமு ராதாவைக் கூப்பிட்டு, "ராதா, மாமா கிட்டப் போ" என்ருன், கொஞ்சம் அதட்டிய குரலில். சந்திரனிடம் ராதா போகவேண்டும் என்று அவன் மனம் ஆத்திரப்பட்டது.

இது சந்திரன் காதுகளில் விழுந்தது. "இல்லை, ராமு. அவளை அதட்டாதே, தானே வருவாள் பாரு" என்று தொனியை உயர்த்திப் பேசினன். இன்னும் சில குரல்களும் கலந்தன.

எட்டி நிற்கும் ராதாவையே சந்திரன் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் நன்றாக வளர்ந்து விட்டாள். ஒரு வருஷ வளர்ச்சி! கடைசியாகப் பார்த்தபோது இப்போது இருப்பதில் பாதியாக இருந்தாள். இப்போது அவள் தோற்றம், அவளை உற்றுப் பார்க்கப் பார்க்க அவனைக் கலவரப்படுத்தியது. அவள் மூக்கு, கன்னம், வாய் எல்லாம் சேர்ந்து அவனுக்கு எதை ஞாபகமூட்டின? அதேதான், தத்ரூபம்! க்ஷணமே வாய்திறந்து, "ராதா" என்று கூப்பிட்டான்.

போகிறதா வேண்டாமா என்ற நினைப்பிலோ என்னவோ ராதா அங்கேயே நின்றுகொண்டு இருந் தாள். பார்த்து நாளானபோதிலும் முதல் பார்வை யிலேயே மாமாவை அறிந்துகொண்டுவிட்டாள். மெது வாக ஓர் எட்டு முன்னால் கள்ள அடி எடுத்து வைக்கவும், அதுதான் சமயமென்று சந்திரன் தான் எழுந்து அவள் திரும்புமுன் அவளைத் தூக்கித் தன் இடத்துக்கு வந்தான். ராதா பாசாங்குக் கோபமாக, "போ மாமா, விடு மாமா!" என்று அவன் தோளை விரல்களால் தள்ளிக்கொடுத்தாள்.

சந்திரன் மனம் உற்சாகத்தால் துள்ளிக் குதித்தது. அவளை எல்லோருக்கும் தெரிய, "மாமா" என்று கூப்பிட்டுவிட்டாள் ராதா! இருவருக்கும் உள்ள உறவை ஸ்திரப்படுத்திக் காட்டிவிட்டாள். "அப்படி வா, மாமா கிட்டே" என்று கிளர்ந்த மனத்துடன் அவளை அணைத்து நெருக்கிக்கொண்டான்.

"பார்த்தாயா, மாமா வந்து தூக்கவேண்டுமாம் அவளை, போக்கிரி!"

ராதாவை அணைத்துக்கொண்டு என்னவெல்லாமோ? அவளுக்குக் கேள்விகள் போட்டான். தன்னைச்சுற்றி அவள் பார்க்கவேயில்லை. இதுவரை குறிப்பு இல்லாமல் பார்வை செலுத்தியது போக இப்போது ஒரு குறிப்புப் பொருள் கிடைத்து விட்டது. ஆனால் ராதாவை அவன் கேள்விகேட்டு நெருக்க நெருக்க அவன் கலவரம் அதிகரித்தது. தேகம் அவனை அறியாமல் நடுக்க மெடுத்தது. உள்ளூற அலைத்த பரபரப்புடன், 'நான் ஏன் இங்கே வந்தேன்? வந்தது பிசகு. என் முதல் தீர்மானப்படி நடத்தி இருக்கவேண்டும்' என்ற நொந்து கொண்டான். அதேசமயம் அவன் வேதனையைத் தூண்டி விடுவதுபோல் மாமாவைப்பற்றிப் பீத்திக் கொள்ளவோ என்னவோ ராதா எழுந்து வாசலுக்கு ஓடி விட்டாள்.

முகூர்த்தம் ஆகிவிட்டது. தாம்பூலம் கொடுப் பதில் ஏற்பட்ட தடபுடல், தன் மன நெகிழ்ச்சியைப் பிறர் அறியாமல் மறைத்துக் கொள்வதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததுபோல் இருந்தது. ஆனால் உள்ளூற எழுந்த ஒருவிதச் சித்திரவதை, அவன் எப்படி மறைக்க நினைத்தாலும் முடியாமல் எழுந்து, மன நிலையை எப்போது முகம் வெளிக்காட்டிவிடுமோ என்ற பயத்திடையே ஹிம்ஸை செய்துகொண் டிருந்தது. அவன் அங்கே வந்த பிசகை நினைத்து நினைத்து மனம் ஓயாது ஓலமிட்டது. ஆனால் இப்போது நினைத்துப் பிரயோஜனம்?

"சந்திரா, சந்தனம் பூசிக்கொள். ஷர்ட்டைக் கழற்று."

"இல்லை, வேண்டாம். உடம்பு சரியாக இல்லை."

"அதெல்லாம் முடியாது, பூசித்தான் ஆகணும்."

"ஸ்....விட்டு விடு; மல்லுக் கட்டாதே" என்று சாதக பாதகக் குரல்கள் எழுந்தன.

சந்திரன் சந்தனத்தைக் கையில் பூசிக்கொண்ட போது உண்டான தமாஷ்ப் பேச்சில், அவன் மன நெருக்கடி கொஞ்சம் தளர்ந்து கொடுக்க, பரிகாசங்களை ரஸித்துப் பதில் கொடுத்துக்கொண் டிருந்தான். முகூர்த்த அடையாளமாக வந்த தாம்பூலத்தை அமைதியாகப் பெற்றுக்கொண்டு கீழே வைக்கும்போது அவன் தோளில் ஒரு கை விழுந்தது; திரும்பிப் பார்த்தான்: ராமு!

"சந்திரா, எங்கே வரமாட்டாயோ என்ற பயந்தான் எனக்கு. நல்ல வேளை: வந்து விட்டாய்."

சந்திரன் லேசாகச் சிரித்துக் கொண்டான்; "இவ்வளவு சொன்ன பிறகு வராமல் இருப்பேனா?" என்றான் அமைதியாக.

"ராதாவைப் பார்த்தாயா?" என்று ராமு அடுத்த கேள்வி கேட்டான்.

"பார்த்தேன்; இப்போதான் அந்தப் பக்கம் போனாள்."

இருவரும் உணர்ச்சி வசப்பட்டுப் போய் இருந்த நிலைமையில், அவர்களுக்கு இடையே அந்தக் கேள்விக்கு மேல் ஏற்பட்ட மௌனம், மேலே என்ன பேசுவதெனத் தெரியாமல் அவர்கள் தவித்ததுபோல் இருந்தது. மாறி மாறி ஒருவரை ஒருவர் பார்ப்பதும் தள்ளி விழிப்பதுமாகக் கொஞ்ச நேரம் ஆயிற்று. ஆனால் ராமு அந்த

நிலையை நீடிக்க விடாமல் தவிர்த்துத் தன் புது உறவினர்களைச் சந்திரனுக்குக் காட்ட ஆரம்பித்தான்.

"இவர்தாம் மாமனார், மைத்துனர், மாமியார், மைத்துனி."

சந்திரன் கண்கள் இந்தப் பரிசயத்தை ஆவலுடன் ஏற்றுக்கொள்ளும் குறிப்பை அவ்வளவாகக் காட்டவில்லை என்றாலும், ராமு காட்டியவாறே ஊமையாகத் தொடர்ந்தன. எத்தனைப் புது முகங்கள் இன்னமும் அவனையே உற்றுப் பார்த்தன! மாப்பிள்ளை இவ்வளவு கருத்தாகப் பார்த்துப் பேசிக்கொண்டிருக்கும் ஓர் உருவம் எப்படி அந்த இடத்தில் கவனத்தை இழுக்காமல் இருக்க முடியும்? ஆனால் சந்திரனுக்கு அந்தப் பார்வைகள் உறுத்தின; முள் குத்தியதுபோல் இருந்தது. பதிலுக்கு உறுத்துப் பார்க்கவோ அவனுக்குத் தைரியம் வரவில்லை. 'உம்' கொடுத்துவிட்டுச் சரேலெனக் கண்களை மறுபுறம் திருப்பிக்கொண்டான்; மனக் குழப்பத்தை அவன் மறைக்கப் பட்ட பாடு!

வழி தெரியாமல் தவித்துக்கொண்டு இருக்கும் போது திடீரென அவன் மடியில் பொத்தென்று யாரோ விழும் சப்தம் கேட்டுத் திரும்பினான். ராதா ஓடி வந்து அவன் மடியில் உட்கார்ந்துகொண்டாள். அம்மா! அவளை அப்படியே அணைத்துக்கொண்டு சிரித்தான்.

"முந்திக்கு இப்போ ராதா ரொம்ப மாறி இருக்கிறாள்; இல்லையா?" என்று பேச்சைத் தொடர்ந்து கேட்டான் ராமு; "ராதா! என்ன, மாமா கிட்டவர இன்னுமா இவ்வளவு ஸங்கோசம்?" என்றான்.

"ஆமாம். அவள் முகபாவமே ரொம்ப மாறி இருக்கிறது" என்று சந்திரன் ராமு பக்கம் திரும்பினான். அடுத்து ஏதோ கேட்கப் போன ராமு அந்த முகத்தைப் பார்த்ததும் சட்டென்று அதை அடக்கிக் கொண்டு விட்டான். 'ஐயோ, அந்த நினைவெல்லாம் இப்போது கிளறிவிடாதேயேன்' என்று கெஞ்சி, உத்தேசக் கேள்விக்குத் தடை கட்டுவது போல் இருந்தது சந்திரன் முகத்தோற்றம். உடனே குனிந்து ராதாவிடம் பேச்சுக் கொடுக்க ஆரம்பித்தான். இடையிடையே ராமுவின் கேள்விகளுக்கு ஒன்றிரண்டு வார்த்தைகளிலே பதில் சுருக்கமாகச் சொல்லி விடுவான்.

ராமுவுக்கு அப்போது தள்ளி இருந்து ஓர் அழைப்பு வர, "இதோ வந்துவிட்டேன்" என்று போயிருந்தான்.

கொஞ்ச நேரத்தில் சந்திரன் காட்டிய அன்புப் போக்கில் ராதா மாமாவோடு பழைய உறவு கொண்டாடத் தொடங்கிவிட்டாள். இந்த இடைக் காலத்தில் அவள் தன்னை மறந்துவிடாதது சந்திரனுக்கு ஆறுதலாக இருந்தது. அவள் குழந்தைக் கேள்விகள் கொஞ்சம் சுற்றுணர்ச்சியை மறக்கச் செய்ய உதவி புரிந்தன. ஆனால் அதுவுங்கூட அதிக நேரம் நிலைக்கவில்லை.

திடீரென்று ராதா மாமாவின் முகத்தைத் தன் சிறு கைகளால் திருப்பி, "மாமா, எனக்கு அம்மா வந்திருக்காளே" என்று ஊது குழலை வாயில் திணித்துக்கொண்டே பேசினாள்.

மின்னல் வேகத்தில் பாய்ந்த அந்த வார்த்தைகள் அவனை ஒருதரம் உலுக்கி எடுத்தன. ராதாவுக்கு ஓர் அம்மா வந்திருக்கிறாள்; வாஸ்தவம்!

அப்போதுதான் வந்து சேர்ந்த ராமுவின் காதிலும் அது விழுந்தது. சந்திரன் முகத்திற்கு அவன் கண்கள் தாவின.

சந்திரன் வாயிலிருந்து ஒரு பலத்த சிரிப்புக் கிளம்பியது. "அப்படியா! அம்மாவா? எங்கே காட்டு?" என்று சொல்லிக்கொண்டே ராமுவின் பக்கம் திரும்பினான். அவன் உதடுகளிலும் ஒரு சிரிப்பு! என்ன நினைவுகள் அவர்கள் மனத்தில் அலறிப் புடைத்து ஓடின அப்போது!

"அதோ பாரு அம்மா" என்று ராதா கூடத்தோரம் காட்டினாள்.

அங்கிருந்தாள் அவள் அம்மா!

ஆனால் சந்திரன் அவள் காட்டிய பக்கம் பார்க்கவில்லை. ஏற்கனவே பார்த்திருந்தான். ராதாவின் கன்னத்தோடு கன்னமாகச் சேர்த்து, "நீ இனிமேல் அம்மா சொன்னபடி கேட்டுச் சமர்த்தாக இருப்பாய்; இல்லையா?" என்று கேட்டான். சந்திரன் முகத்தோற்றத்தை அப்போது ராமுவால் பார்க்க முடியவில்லை.

"இருப்பேன்" என்று கொஞ்சிக் குழறினாள் ராதா.

"அழுது தொந்தரவு பண்ணமாட்டாயே?"

"மாட்டேன். எங்கம்மா எனக்குப் புதுப் பாவாடை சட்டை எல்லாம் வாங்கிக் கொடுப்பாளே. பின்னிச்

சாதம் போடுவாளே" என்று ஒரு தாய் குழந்தைக்குச் செய்ய வேண்டிய கடமைகளை நிர்ணயித்துக் கூறினாள். குழந்தை பாவம்! எல்லோருக்கும் போல இப்போது தனக்கும் ஓர் அம்மா கிடைத்துவிட்டதாகப் பெருமை கொண்டாள்!

இதற்குமேல் சந்திரனால் சம்பாஷணையைத் தொடர முடியவில்லை; குழந்தையோடு பேச்சுக் கொடுக்கக்கூட அவனால் முடியவில்லை. இந்த ரீதியில் எவ்வளவு நாழிகைதான் அவன் பேசிக்கொண்டிருக்க முடியும்? அவன் மறைக்கப் பார்த்த நினைவுகள் எல்லாம் வேகமாக எழுந்து அவன் மனநிலையைக் குழப்பிவிட்டன. நிதானித்து, பொறுத்துச் சமாளிக்கும் எல்லையைக் கடந்துவிட்ட நினைவுதான் ஏற்பட்டது. திடீரெனக் கண்களை உயர்த்தி ராமுவின் பக்கம் திரும்பினான்.

"சந்திரா, ராத்திரியும் இங்கேதான் இருக்கணும் நீ."

"இல்லை ராமு, கட்டாயப்படுத்தாதே. நான்தான் சொன்னபடி முகூர்த்தத்துக்கு வந்துவிட்டேனே."

"அது போதுமா? கல்யாணம் முழுதும் இருக்க வேண்டியவன் நீ. சரி! இப்போதாவது சாப்பிட்டு விட்டுப் போ."

'இல்லை இல்லை! இந்தச் சித்திரவதையை இங்கிருந்து ஒவ்வொரு விநாடியும் அனுபவித்துக் கொண்டிருக்க முடியாது. நான் போய் விடுகிறேன்' என்று தனக்குள் சந்திரன் முணுமுணுத்துக் கொண்டான். ஆனால், "மணி என்ன இப்போது?" என்று வாய் கேட்டது.

"எட்டரை. பதினொரு மணிக்குச் சாப்பிட்டு விடலாம்."

இன்னும் மூன்று மணி நேரம்! அதுவரையில் என்ன செய்வது? இதற்குமேல் அவனால் சமாளிக்க முடியாது. அவன் திடம் இதுவரையில் நிலைத்து நின்றதே அபூர்வம். ஆனால் இப்போது எப்படித் தப்புவது? யோசித்தான். "ராமு! அதற்குள் அடுத்த தெருவுக்குப் போய்விட்டு வருகிறேன், நண்பரைப் பார்க்க" என்று சொல்லிக் கொண்டே எழுந்தான். ராமுவின் சந்தேகப் பார்வைக்கு உறுதி கூறுவதுபோல், "நான் வருகிறேன்" என்றான் மறுபடியும்.

என்னது இது? அந்த வார்த்தைகளையும், உறுதியையும் எப்படி எடுத்துக்கொள்வதென்று ராமுவுக்குப் புரியவில்லை. திகைத்துப் போய்விட்டான். "ராதா, மாமா வெளியே போய்விட்டு வரப்போகிறாராம், உன்னை விட்டுவிட்டு" என்று தனக்கே நிர்ணயம் இல்லாமல் பேசினான்.

"போய்விட்டு இதோ ஒரு நிமிஷத்தில் வந்து விடுகிறேன், ராதா" என்று அவளை இழுத்துக் கால்களில் அணைத்துச் சொன்னான்.

"போகக்கூடாது போ!" என்று அவன் வேஷ்டியைப் பிடித்து ராதா இழுத்தாள்.

சந்திரன் மனவமைதி ஏற்கனவே குலைந்து போய் விட்டது. தன் வேதனை நிலை, குழந்தையின் அழைப்பு இரண்டுக்கும் இடையில் ஒரு தவிப்பு உள்ளூறச் சில க்ஷணங்களுக்கு இருந்தது. வெளியே வாய்விட்ட சிரிப்பு; குறிப்பு, அர்த்தம், தெளிவு இல்லாமல் மேலெழுந்த ஒப்பு வார்த்தைகள்.

"சரி! சந்திரா, போய்விட்டுச் சீக்கிரம் வந்துவிடு. ராதா, விட்டுவிடு மாமாவை. போய்விட்டு வரட்டும்" என்று அவளைத் தன் கையில் இழுத்தான் ராமு; "சந்திரா, கட்டாயம் வந்துவிடு" என்றான். வெளியே விளக்க முடியாத ஒரு சந்தேகம் ராமுவின் மனத்தில் அலைத்தது. அவன் வருவானா மறுபடியும்? ஆனால் எப்படி அவனை வற்புறுத்துவது?

"என்ன, அதற்குள் புறப்பட்டுவிட்டாய்?"

"யாரோ சிநேகிதரைப் பார்த்துவிட்டு வருகிறானாம்."

"அப்பொ சரி! சீக்கிரம் வந்துவிடு" என்று பல குரல்கள் எதிரொலித்தன.

"ராதா, போய்விட்டு வரேன். வந்துவிடுகிறேன். இங்கேயே இரு" என்று குனிந்து அவள் கன்னத்தில் முத்தமிட்டான் சந்திரன்.

"நானும் வருவேன்."

"ஸ்......அசடு" என்று ராமு அவளை இழுத்துக் கொண்டான்.

சந்திரன் வாசலை நோக்கி இரண்டு மூன்று அடி எடுத்து வைத்துவிட்டான். அவனை அழுத்திக் கொண்டிருந்த ஒரு பாரம் குறைவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. இன்னும் படி இறங்கி மறைவதற்குச் சில எட்டுகளே இருந்தன.

"சந்திரா, சீக்கிரம் வா. உனக்காகக் காத்துக் கொண்டிருப்போம். ராதா, மாமாவைச் சுருக்க வரச் சொல்லு?"

"சுருக்க வந்துடு, மாமா."

சுரீரென்ற ஒரு வலியுடன் சந்திரன் திரும்பினன். "ஆகட்டும், ராதா" என்று வேகமாக அவன் கூறின போது ஒடும் சிரிப்பு ஒன்று உதடுகளில் தோன்றியது. 'எனக்கு இப்போது திருப்தி. அவளைப் பார்த்தாகி விட்டது' என்பதுபோல் ஓர் அர்த்தமுள்ள பார்வையை ராதாமீது மறுபடியும் செலுத்திவிட்டுத் திரும்பினன். அவன் ஆகட்டும் என்றதில் முன்போல அழுத்தம் இல்லை; உறுதி கூறும் தோரணை இல்லை. அவன் கால்கள் காற்றில் சுலபமாக கெட்டித் தள்ளிக் கொண்டு போவது போலச் சுளுவாக விரைந்து எட்டுப் போட்டன.

# கனவின் எதிரொலி

## 1

தேவியின் சிலம்பணியாத கால்களைப் பார்க்கும் போதெல்லாம் மாங்கல்யம் இழந்த கழுத்தின் ஞாபகந் தான் நெடுஞ்செழியனை உறுத்திக்கொண்டிருந்தது. அரசியின் கையில் ஒற்றைச் சிலம்பின் தொங்கணிகள் உராய்ந்து சப்திக்கும்போது அந்த ஒலி கணவனை இழந்து தவிக்கும் ஸதி அலறுவதுபோல் இருந்தது. சிலம்புக்காக வருந்தித் தன்னை ஏறிட்டுக்கூடப் பார்க்காமல் இருக்கும் அரசியின் ஒளி குன்றிய முகம் தன் அதிகார ஒளி மங்குவதற்கு ஸூசகமோ என்று கலங்கினான். பாண்டிய நீதி முறையில் நடந்த இந்த முதல் திருட்டைக் கண்டுபிடிக்க முடியவில்லையே என்று ஏங்கினான். தன் முகம் பார்த்து அரசி கூறும் ஓர் இன்ப வார்த்தைக்காகத் தவித்துக்கொண்டிருந்தது அவன் மனம்.

சிலம்பின் உருவத்தையே கண்முன் நிறுத்திக் கொண்டிருந்த அரசிக்கோ அரசனின் காதல் வார்த்தைகள்கூட இன்பம் தரவில்லை.

ஊடல் அலை மோதும் மனசுடன் பாண்டியன் அந்தப்புரம் வந்துகொண்டிருந்தான். தாபத்தால் அவன் அங்கங்கள் துடித்துக்கொண்டிருந்த நிலைமையில் வேறு ஒருவிதமான சிந்தனையும் இல்லாமல் பார்வை கீழ்நோக்கியே இருந்தது.

அந்தப்புரத்தை அடுத்து இருக்கும் நடைபாதையில் வந்துகொண்டிருக்கையில் சூரியனே அங்கே வந்து குதித்ததுபோன்ற ஒரு பிரகாசம் பளீரென அந்த இடத்தில் திடீரென்று தோன்றியது. அரசன் கண்கள் கூசிப் பின் வாங்கின. மறு விநாடி அந்த ஒளி என்ன வென்று ஆராய அவன் கண்கள் சுற்றி விழித்தன. தனக்குச் சமீபத்தில் அரண்மனைத் தட்டான் பவ்யமாக நின்றுகொண்டிருப்பதை அரசன் பார்த்தான். அதே சமயம் அவன் கைவிரல்களுக்கு இடையே பிடித்திருந்த ஒரு சிலம்பின் ஒளி மறுபடியும் அரசன் முகத்தில் பட்டது. அது பாண்டியனின் மங்கிய கண்களுக்குச் சோபை தந்ததுபோல் இருந்தது.

"சிலம்பா!" என்று வாய்விட்டுக் கூவிக்கொண்டே வெடுக்கெனத் தட்டான் கையிலிருந்து சிலம்பைப் பிடுங்கினான் அரசன். பிடுங்கிய வேகத்தில் தொங்கு கணிகள் பலமாகச் சப்தித்தன. பாண்டிய சிம்மாசனமே ஆடிக் கலகலத்துச் சப்தித்ததுபோல் இருந்தது அந்த ஒலி.

"ஏது இது? எங்கிருந்தது? சீக்கிரம் சொல்லு" என்று அவனை அவசரப்படுத்தி அரசன் கேட்டான். எல்லை மீறிய வியப்பும் சந்தோஷமும் அவன் குரலில் தொனித்தன.

தட்டானுக்கு வார்த்தைகள் வேகமாக வரவில்லை. அவசரத்திலோ அல்லது தன் மனச் சாக்ஷியின் தவிப்பிலோ சிதறின வார்த்தைகளைத் திரட்டிக் குவித்துக் கூறலானான்:

"அரசே, சிலம்பைத் திருடியவன் என் வீட்டில் வந்திருக்கிறான் விற்பதற்கு..."

"என்ன! பாண்டிய நாட்டில் திருடி அங்கேயே விலைபேசத் துணிந்தாி?"

தட்டான் மௌனமாகத் தலை அசைத்தான். பின், "'இந்தச் சிலம்பு அரசிக்குத்தான் தகும்; பொருத்த மானது; காட்டி வருகிறேன்!' என்று ஒரு போக்குக் காட்டி வந்திருக்கிறேன்" என்றான்.

அரசியின் பிரஸ்தாபம் மன்னனுக்கு அந்தப் புரத்தை ஞாபக மூட்டியது. கண்கள் அந்தப்புரத்தை ஒருதரம் பார்க்கும்; கைச்சிலம்பின்மேல் ஒரு பார்வை; மறபடி அந்தப்புரம் ஒரு பார்வை. ஒரு க்ஷணம் அவனால் அங்கே நிற்க முடியவில்லை.

தட்டான் ஏதோ சொல்ல வாயெடுத்தான். அரசன் அந்தப்புரம் நோக்கி இரண்டு எட்டு எடுத்து வைத்துவிட்டான். "சரி, சரி. இந்தக் காவலாளியை அழைத்துப் போய் அவனைக் கொன்றுவிடு. அதுதான் தண்டனை" என்ற வார்த்தைகளே சுருக்கமாக அரசன் வாயிலிருந்து எழுந்தவை. தட்டானுக்கு அது போதும்.

அரசன் அந்தப்புரம் போய்விட்டான்.

## 2

"தேவி, பாண்டிய நீதி நிலைத்துவிட்டது. இந்தா சிலம்பு!" கூறிப் பலக்கக் கூவிக்கொண்டு அரசியின் படுக்கையில் தாவினான் அரசன்.

அதே சமயம், "ஐயோ! வேண்டாம்! வேண்டாம்!" என்று அலறிப் புடைத்துக் கோப்பெருந் தேவி படுக்கையிலிருந்து பதறி எழுந்து தடுமாறினாள். அரசன் திடுக்கிட்டுப் போனான். அரசி கீழே விழுந்து

விடாமல் அவளைச் சட்டென ஏந்திப் பிடித்துக்கொண்டு, "தேவி, ஸ்வப்னம் கண்டாயா? நான் இதோ இருக்கிறேன். பயப்படாதே. இந்தா சிலம்பு. கண்ணை விழித்துக்கொள்" என்று அணைத்துக்கொண்டே சிலம்பைத் தேவியின் கைகளில் வைத்தான்.

தேவியின் ஸ்வப்ன மயக்கமும் பீதியும் இன்னும் கலையவில்லை. சிலம்பு என்ற வார்த்தையைக் கேட்டுக் கண்ணைத் திறந்து பார்த்தாள். ஒரே பிரகாசமாக இருந்தது அறை. கையில் ஏதோ கனப்பதுபோல் இருந்தது. உண்மையை அறியும் நிதானம் இன்னும் ஏற்படவில்லை அவளுக்கு. "ஐயோ, நெருப்பா! எனக்கு வேண்டாம்" என்று கூவிக் கையிலிருந்த சிலம்பை நழுவ விட்டுவிட்டாள். சிலம்பு படுக்கையில் பொத்தென் விழுந்தது.

அரசன் பதறி, "தேவி, நெருப்பு அல்ல. உன் சிலம்பின் பிரகாசந்தான். பயப்படாதே! கண்களைத் திறந்து பார்" என்று தேவியின் கண்களைத் துடைத்தான். அரசி பயத்தினால் அரசனை இறுகப் பற்றிக்கொண்டாள்.

தேவிக்குத் தெளிந்த நினைவு வந்ததும், "அம்ம! என்ன பயங்கரமான கனவு! நினைக்கவே பயமாக இருக்கிறதே! என்ன கோரம்!" என்று கூறினாள். அப்போது அவள் தேகம் நடுங்கியது. "சிலம்பு கிடைத்து விட்டதா?" என்று அரசன் முகம் பார்த்துக் கேட்டாள். அவள் குரலும் நடுங்கியது.

"அசடே, கனவுக்கா இவ்வளவு பயம்! கனவு காண்பது சகஜந்தானே! சிலம்பு இந்தா" என்று மறுபடியும் அதைக் கையில் எடுத்துக் கொடுத்தான்

அதைப் பார்க்கும்போதே அரசிக்குப் பயமாக இருந்தது. நடுங்கிக்கொண்டே கையில் பிடித்துப் புரட்டிப் பார்த்தாள். அதன் ஜ்வலிப்பினால் கையில் சுடுவதுபோன்ற உணர்ச்சி ஏற்பட்டது அரசிக்கு.

அரசன் வார்த்தைகள் தேவியின் மனத்தில் அவ்வளவாகப் பதியவில்லை. தான் கண்ட பயங்கர ஸ்வப்னத்தையே நினைத்துக்கொண்டிருந்தாள். போதாததற்குக் கையில் இருந்த சிலம்பு திகிலை அதிகரிக்கச் செய்தது. மறுபடியும் அரசனிடம் அந்தக் கனவைப்பற்றிப் பிரஸ்தாபிக்க வாயெடுத்தாள். சிலம்பினிடத்தில் முன் இருந்த ஆசையின் தீவிரம் அப்போது அரசிக்கு இல்லை.

அரசன் தேவியை இடைமறித்து, "தேவி, திரும்பத் திரும்ப அதையே நினைத்து நினைத்து வீண் பயம் கொள்ளாதே. திரும்பக் கிடைத்த இந்தச் சிலம்பைக் காலில் போட்டுக்கொள்" என்று கண்களில் காதல் ததும்ப, ஊடல் உறுத்தக் கூறினான்.

தேவி கொஞ்சம் அதிருப்தியுடன் அரசனைப் பார்த்தாள். "மன்ன, அதை நான் எப்படி மறக்க முடியும்? என் கண்முன் சித்திரம் போல் நின்று உறுத்திக்கொண்டே இருக்கிறதே! என் மனம் அமைதியே கொள்ளவில்லை. பீதி தணியவாவது உங்களிடம் சொல்லித்தான் ஆகவேண்டும்" என்றாள்.

அரசன் சிரித்துக்கொண்டே தேவியின் கனவைக் கேட்டான்.

"தேவ, நான் எந்த இடத்தில் இருந்தேன் என்பதே தெரியவில்லை. 'சிலம்பு, சிலம்பு' என்று பைத்தியத்தைப்போல் போய்க்கொண்டிருந்தேன். எனக்குச்

சற்றுத் தூரத்தில் சிலம்பு உருவமான பிரகாசம் தெரியவே ஓடினேன். ஆசையோடு அதை எடுப்பதற்காகக் கிட்ட நெருங்கவும் அங்கே பெரிய ஜ்வாலை ஒன்று கிளம்பிக்கொண்டிருந்தது. பயந்து பின் வாங்கினேன். நான் பார்த்துக்கொண்டிருக்கும் போதே ஜ்வாலை மளமளவெனக் குறைந்துகொண்டே வந்து ஓர் அனல் வளையமாகிவிட்டது'' என்று சொல்லிக்கொண்டே வந்த போது அரசியின் முகம் விகாரம் அடைவதைக் கண்டு அவளைத் தேற்றினான் அரசன்.

தேவி ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு மேலும் கூறினாள்:

"யாரோ அதைக் கையில் எடுத்துக்காட்டி, 'இந்தா உன் சிலம்பு' என்று கையில் வைக்க வருவதுபோல் இருந்தது; கனல் வளையந்தான் என் கண்களுக்குத் தெரிந்தது; உருவம் தெரியவில்லை. ஆனால் குரல்மட்டும் ஒரு பெண்ணின் தீர்க்கமான குரலாக இருந்தது. இப்போதுகூட என் காதுகளில் அந்தச் சப்தம் ஒலித்துக்கொண்டிருக்கிறது. நான் பயந்து பின் வாங்கிக்கொண்டிருக்கையிலேயே அனல் வளையம் என்மீது மோதிவிட்டது.

" 'ஐயோ, சிலம்பு வேண்டாம், வேண்டாம்' என்று அலறித் துடித்தேன். கண்விழித்துப் பார்த்த போது அறை பிரகாசமாக இருந்தது. உங்களைப் பார்க்க முடியவில்லை. அறை தீப்பிடித்துவிட்டது என்று பட்டது. பயத்தினால் அலறிக் கையில் இருந்த சிலம்பையும் அனல் வளையம் என்று கீழே போட்டு விட்டேன் போல் இருக்கிறது'' என்று கூறி முடித்தாள். மறுபடியும் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

அந்த ஸ்வப்னம் பாண்டியனுக்கு வேடிக்கையாக இருந்தது. சிரித்துக்கொண்டு, "தேவி, சிலம்புப் பிரமையின் விளைவு இந்தக் கனவு. நீ விழிக்கவும் அதே சமயம் சிலம்பின் பிரகாசம் தோன்றவும் நீ பயந்து விட்டாய். அவ்வளவுதான்" என்றான்.

இந்த விளக்கம் அரசிக்குச் சரியாகப் படவில்லை. "அரசே, இவ்வளவு கோரக் கனவு இதுவரை நான் கண்டதே இல்லை. பகலில் காணும் கனவு - அதுவும் தீக்கனா, ஏதோ கெடுதலுக்கு அறிகுறி என்று என் மனசுக்குத் தோன்றுகிறது. ஐயோ! அந்தப் பெண் குரல்!" என்று சஞ்சலத்துடன் கூறினாள்.

அரசன் ஸ்வப்னத்தில் கொஞ்சமும் நம்பிக்கை வைக்கவில்லை. பேச்சை மாற்றி அரசியின் பீதியைத் தெளிவிக்க நினைத்து, "தேவி, நெடுநாளாகக் காணமற் போயிருந்த சிலம்பு கிடைத்திருக்கிறது. அதைப் போட்டுக்கொள்ள வேண்டாமா? நானே போட்டு விடுகிறேன்" என்று முதலில் பழைய சிலம்பைப் போட்டு விட்டுப் புதுச் சிலம்பையும் போடப்போனான்.

அரசி சிலம்பை உற்றுக் கவனித்தாள். என்ன தோன்றியதோ: பாண்டியன் கையைத் தடுத்து, "அரசே; எனக்கே புரியாத வகையில் மனசு என்னவோ போல் இருக்கிறது. இன்று வேண்டாமே இந்தச் சிலம்பு" என்று சொல்லிக்கொண்டே சிலம்பை அவனிடம் நீட்டினாள். அரசன் அந்த வார்த்தைகளை ஏற்கவில்லை. அரசியின் பயம் தெளிய அதை அணிவதுதான் சரியென நினைத்துப் பலவந்தமாகப் போட்டுவிட்டான். அரசியின் தேகம் ஒரு தரம்

நடுக்கமுற்றது. அந்த ஸ்வப்ன நினைவுடன் இரண்டையும் மாறி மாறிப் பார்த்துக்கொண் டிருந்தாள்.

இரண்டிற்கும் எவ்வளவு வித்தியாசம்! புதுச் சிலம்பு கனிந்து எரியும் தழல் போல் ஜ்வலித்துக்கொண் டிருந்தது. பழைய சிலம்போ அவிந்துபோன சாம்பல் நிறம் கொண்டிருந்தது.

## 3

பகல் சாய்ந்து மாலை நேரம் நெருங்கியது. நெடுஞ்செழியன் தேவியுடன் அந்தப்புரமாடியின் வெளிமுற்றத்திலே வந்து நின்றுகொண் டிருந்தான். இளம் வெயில் அவர்கள்மீது சோபிதம் இன்றி விழுந்து கொண்டிருந்தது. இன்னும் அந்த ஸ்வப்ன ஞாபகமாகவே அரசி இருந்தாள் என்பதை அவள் அமைதியற்ற முகக்குறி காட்டியது. அரசனின் மனமும் ஏதோ ராஜாங்க யோசனையில் ஆழ்ந்திருந்தது.

திடீரெனக் கிளம்பிய ஓர் அதிர்ச்சியொலி அவர்கள் இருவரையும் ஏக காலத்தில் தூக்கிவாரிப் போட்டது. "ஐயோ, ஆராய்ச்சிமணி!" என்று அரசி வாய் விட்டுக் கத்திவிட்டாள். அரசன் ஒரு விநாடிகூடத் தாமதிக்கவில்லை. "இதென்ன விபரீதம்? இதுவரை கேட்டதில்லையே!" என்று பதறிக் கொலுவை நோக்கி ஓடினான். அரசியும் அவனைப் பின் தொடர்ந்து ஓடினாள். அரண்மனைச் சேவகர், தாதிகள் எல்லோரும் ஆராய்ச்சி மணியின் சப்தத்தைக் கேட்டு மருண்டு போய் விட்டார்கள்.

அரசன் பாதிதூரம் போகு முன்னரே ஆராய்ச்சி மணியைக் காப்போன் ஓட்டம் ஓட்டமாக வந்தான்.

"அரசே! யாரோ தெரியவில்லை. தலைவிரி கோலமாக ஒரு பெண் அரண்மனை வாசலுக்கு வந்து, 'பாண்டியன் எங்கே? எங்கே?' என்று கத்திக்கொண்டு வந்தாள். ஆராய்ச்சி மணி அவள் கண்களில் நேராகப் பட்டது. அதை நோக்கி ஓடினாள். 'சீ, நியாயம் வழங்கத் தெரியாத அரசனுக்கு ஆராய்ச்சிமணி வேறு?' என்று ஓங்கி அதை இழுத்து வீசிவிட்டாள் கயிற்றோடு. மணி பளிங்குச் சுவரில் தாக்கிப் பொடிப்பொடியாகச் சிதறிப்போய் விட்டது" என்று பதற்றத்துடன் கூறினான்.

அரசன் ஒரு க்ஷணம் ஸ்தம்பித்து நின்றான். "என்ன! ஆராய்ச்சி மணி நொறுங்கி விட்டதா? அப்படி என்ன விபரீதம் வந்துவிட்டது அவளுக்கு?" என்று துடித்துக்கொண்டே கொலுவுக்கு ஓடினான்.

அரசன் சிம்மாசனத்துக்கு நேராகச் சற்றுத் தள்ளி அந்தப் பெண் நின்றுகொண்டிருந்தாள். மோஹினியின் அழகில் துர்க்கையின் உக்ரம் கலந்தது போலத் தோன்றினாள் அவள். தன்னை மதியாத தகப்பனின் யாகாக்னியின் முன் நின்ற ஸதியின் கண்கள்போல் அவள் விழிகள் அனல் கக்கின. ரத்தம் பூசியதுபோல் முகம் சிவப்பேறிக் கிடந்தது. நெருப்பிலிருந்து கிளம்பி அடர்ந்து சுருண்டு சுருண்டு செல்லும் புகைச் சுழல்கள் போல் பரந்து விரிந்து சுருள் சுருளாகக் காற்றில் மிதந்துகொண்டிருந்த அவள் கூந்தல் அந்தச் சித்திரத்துக்குப் பகைப்புலமாக அமைந்து இருந்தது. அந்த உருவத்தைப் பார்த்த பாண்டியன் மலைத்து நின்று விட்டான்.

"பாண்டிய! தன் மகனென்றும் பாராமல் நீதிக்குப் பலியிட்ட மனுச்சோழன் நாட்டிலிருந்து வருகிறேன்

நான்'' என்று ஓங்கிய திடமான குரலில் அந்தப் பெண்மணி கூறினாள், அவனைப் பார்த்ததும்.

அந்த வார்த்தைகள் அரசனுக்குச் சுரீலெனப் பட்டன. தன் மலைப்பைச் சமாளித்துக்கொண்டு, “அப்படியா! தன் சிறு பிழைக்குத் தண்டனையாகக் கையைத் துண்டித்துக்கொண்ட பொற்கைப் பாண்டியன் நாட்டுக்குத்தான் நீ வந்திருக்கிறாய். நீதிக்குப் பங்கம் ஏற்படாது'' என்று பாண்டியகுலப் பெருமையை விட்டுக் கொடுக்காமல் பதில் அளித்தான்.

அதற்கு அந்தப் பெண் ஒரு பயங்கரச் சிரிப்புச் சிரித்தாள். “அநீதி என்னைப் பூரணமாக விழுங்கி விட்ட பிறகு இனி நீதிபங்கம் வேறு என்ன இருக்கிறது?'' என்று அந்தச் சிரிப்பிடையே கூறினாள்.

“நீ குறிப்பது எனக்கு விளங்கவில்லையே!'' என்றான் அரசன்.

“பாண்டிய, அரசியின் சிலம்பைத் திருடியதாக நீ கொலை செய்துவிட்ட கோவலன் மனைவி கண்ணகி நான்.''

அச்சமயம் கொலுவுக்கு வந்த கோப்பெருந்தேவி அந்தக் குரலைக் கேட்டு ஸ்தம்பித்துப் போனாள். கனவில் கேட்ட அதே பயங்கரக் குரல். “இந்தா உன் சிலம்பு'' என்ற தீர்க்கமான பெண் குரல்!

கண்ணகியின் வார்த்தைகள் அரசனுக்குக் கொஞ்சம் துணிவு தந்தன. “நீ அந்தக் கள்வன் மனைவியா? மனுச்சோழன் பிரஜைகள் இங்கே திருடிப் பிழைக்கவா வந்தீர்கள்? பாண்டிய நாட்டில் அதற்கு அனுமதி கிடையாதே. என்ன செய்வது?'' என்று ஏளனமாகச் சிரித்தான்.

கண்ணகி அவனை ஒரு தரம் வெறிக்கப் பார்த்தாள். அரசன் சிரிப்பு அதில் மறைந்துவிட்டது. "என்ன சொன்னாய்? நாங்கள் திருடர்கள் என்றா? பிரஜைகள் சொத்தையெல்லாம் தனதெனப் பொய் சொல்லிப் பஹிரங்கமாகப் பிடுங்கிவிடும் நீயா, நாங்களா? யார் திருடர்கள்? பாண்டிய! புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது" என்று ஆங்காரத்துடன் சீறினாள்.

"மீனைத்தான் கவ்வியதாக்கும்!" என்று அரசன் மறுபடியும் ஏளனமாகக் கேட்டான்.

"நிச்சயமாக!"

"ஏன், மீன் உருவம் செதுக்கிய அந்தச் சிலம்பு என் அரசியுடையதுதானே?"

"விசாரணையில் ருசுவுடன் ஏற்பட்ட முடிவுதானே அது?"

அரசனுக்குத் திடுக்கென்றது அந்தக் கேள்வி. தன் தவறு அப்போது எடுத்துக் காட்டிய பிறகுதான் அவன் ஞாபகத்துக்கு வந்தது. மனத்தில் எழுந்த கலக்கத்தை மறைத்துக்கொண்டு, "நிச்சயமெனத் தெரிந்த பிறகு விசாரணை எதற்கு?" என்றான்.

ஒரு ராக்ஷஸச் சிரிப்புச் சிரித்தாள் கண்ணகி. அரண்மனையையே கலகலக்கச் செய்தது அந்தச் சிரிப்பு. அரசனுடன் தர்க்கித்துக்கொண்டிருக்கும் பொறுமையை மீறிவிட்டது அவள் ஆத்திரம். "பாண்டிய! புதுச் சிலம்பில் மீன்உருவம் செதுக்கி இருந்ததா? புலிக்கும் மீனுக்கும் வித்தியாசம் தெரியவில்லை உனக்கு, அரசி மீதுள்ள மயக்கத்தில்" என்று தன் இடையில் செருகியிருந்த சிலம்பை உருவி எடுத்தாள். அந்த இடம் முழுவதும் பிரகாசமடைந்தது.

அரசனும் அரசியும் திகைத்து விட்டார்கள். கண்டு பிடிக்கப்பட்டதெனத் தாங்கள் கருதிய அந்தச் சிலம்பைப் போன்ற பிரகாசம்! அதே விதத் தொங்கணிகள் உராயும் நாதம்! கண்களைப் பறிக்கும் அதே ஜ்வலிப்பு!

அரசன், அரசி இவர்களின் வியப்பு அடங்கு முன்னமேயே கண்ணகி, "பாண்டிய! உன் அரசியின் ஒரு சிலம்புதானா காணாமற்போனது? ஆசை அவ்வளவு தானா? இந்தச் சிலம்பையும் அதோடு ஜோடி சேர்த்து உன் அரசிக்குப் போட்டு அழகு பார்!" என்று கத்திக்கொண்டே தான் நின்ற இடத்திலிருந்தே சிலம்பை வீசி எறிந்தாள். சிலம்பு உயர்ந்து விழுந்து அதற்குள் இருந்த மாணிக்கப் பரல்கள் தூள் தூளாகச் சிதறின, எரிமலைகள் வெடித்து அனற் கற்கள் சிந்துவதுபோல்.

"ஐயோ, நம் சிலம்பில் இருப்பவை முத்துப் பரல்களல்லவா?" என்று பாண்டியனை உலுக்கிக் கிலிபிடித்த முகத்துடன் கேட்டாள் அரசி. மாணிக் கங்கள் சிதறும்போதே அரசன் ஓடிப்போய் நொறுங்கிய சிலம்பைக் கையில் எடுத்துப் பார்த்தான். "ஆ!" என்று அலறிப் பின்பாய்ந்தான் பாண்டியன். அரசியும் குனிந்து தன் கால் புதுச்சிலம்பைப் பார்த்தாள். அதிலும் புலி உருவங்கள்! அரசன் ஊடல் மயக்கத் திலும் அரசி ஸ்வப்ன மயக்கத்திலும் கண்ணைப் பறிக்கும் சிலம்பின் பிரகாசத்திடையே புலி உருவத்தைக் கவனிக்க மறந்துவிட்டனர்.

அரசன் பதில் சொல்லவில்லை. காளிஸ்வரூப மாகத் தோற்றும் கண்ணகியையே கண் கொட்டாமல்

பார்த்துக்கொண்டிருந்தான். அவன் சித்தம் கலங்கிப் போய்விட்டது.

"அரசி, அதுவும் உன் சிலம்புதான். எடுத்துக் கொள்!" என்று மறுபடியும் கோரச்சிரிப்பிடையே கண்ணகி கத்தினாள். கோப்பெருந்தேவி அலறினாள். ஸ்வப்னத்தில் கேட்ட அதே வார்த்தைகள்! தன்னைச் சுற்றிச் சிதறிக் கிடந்த மாணிக்கங்கள், காற் சிலம்பு ஒவ்வொன்றும் ஜ்வாலை கிளம்பி எரிந்து தகிப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது அரசிக்கு. காற் சிலம்பைக் கழற்றிக் கற்களை மிதிக்காமல் பயந்து கண்ணகியின் பக்கமாகப் பாய்ந்தாள்.

"தேவி! தப்புச் செய்துவிட்டோம். உன் கணவனைக் கொன்று நீதியையும் கொன்றுவிட்டோம்'' என்று கதறிக் கண்ணகியின் காலடியில் வீழ்ந்தாள். கண்ணகியின் வெறிப்பார்வை புருஷனைக் கொன்ற கொலைகாரன் மீதே பதிந்து இருந்தது. "நீதி அறியாத உனக்கு இனி இங்கே வேலை இல்லை!" என்று ஆத்திரத்துடன் கர்ஜித்தாள்.

நின்ற இடத்திலிருந்தே அரசன் ஏதோ பேச வாயெடுத்தான். வார்த்தை கிளம்பவில்லை. அவன் முகம் கறுத்து விகாரம் அடைந்தது. அரசி அதைக் கவனித்துவிட்டாள். பாய்ந்து வந்து கணவனைத் தாங்கிக் கொண்டாள். அரசனைக் கூப்பிட்டாள். அரசன் பேசவே இல்லை. 'அவன் கண்கள் நிலையாகக் கண்ணகியையே பார்த்தன. குபீரென்று அவன் நாசியிலிருந்தும் தொண்டையிலிருந்தும் ரத்தம் கொப்புளித்து வெளியேறியது. அவன் அரசியின் கைகளிலிருந்து நழுவிக் கீழே சாய்ந்தான், ரத்தம் பீறிட்டு. அரசன்மீது

மூர்ச்சித்து விழுந்த அரசியின் உடை அதனால் நனைந்து விட்டது.

கண்ணகியின் உதடுகளில் மீண்டும் ஒரு கோர நகை கிளம்பியது. நீலக் கம்பளத்தில் படிந்திருந்த ரத்தத் தேக்கத்தைப் பார்த்துவிட்டுப் பார்வையை ஜன்னலுக்கு வெளியே திருப்பினாள். அந்தி வானத்தின் செந்நிறம் அவள் கண்களை இழுத்தது. "என் ஆத்திரம் தீர மதுரையைச் செந்நிறமாக்குவேன்" என்று புலியின் கர்ஜனை செய்துகொண்டே ஸம்ஹார தேவதை போல் திரும்பி வெளியே பாய்ந்து சென்றாள்.

# கம்பெனி கௌரவம்

"இது என் நாய் அல்ல, நிச்சயமாய்!"

"புக் பண்ணின ரசீது இருக்கு. உங்களுடையது அல்லவா? உங்களுடையதுதான்!"

இரண்டாம் வகுப்பு வெள்ளைக்காரப் பிரயாணியின் கோபம் அதிகமாயிற்று. "நான்ஸென்ஸ்! என் நாய் எனக்கு அடையாளம் தெரியவில்லை என்று சொல்ல என்ன தைரியம்! எங்கே என் நாய்?" என்று அடி வயிற்றிலிருந்து கத்தினான்.

மெயில் கார்டு திருஞானம் சாந்தமாக, "அதோ, உங்கள் நாய்" என்று வண்டியில் கட்டியிருந்த நாயைச் சுட்டிக்காட்டினான் மறுபடியும்.

வெள்ளைக்காரப் பிரயாணி ஆத்திரத்துடன், "அது என் நாய் அல்ல. என் நாய் முழுக்கறுப்பு. இன்னும் உயரம், வளர்த்தி. இந்தத் திராபையான எச்சிற்கலை நாயல்ல. கொண்டுவா என் நாயை!" என்றான்.

"ஸார்! இந்த வண்டியில் வேறு ஒரு நாயும் புக் பண்ணவில்லை. கிடையாது. மாறிப்போவதற்கு இடமில்லை. பார்த்துக் கொள்ளுங்கள்" என்றான் கார்டு திருஞானம் மறுபடியும்.

வெள்ளைக்காரப் பிரயாணிக்கு வந்த கோபத்துக்குக் கங்கு கரையில்லை. ஆத்திரத்துடன் கார்டையும் ரெயில்வே கம்பெனியையும் வைது அவன் போட்ட

சப்தத்தில் ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் ஒரு கூட்டம் கூடிவிட்டது.

விஷயம் இதுதான். கார்டுவாளுேடு இணைத்திருந்த சாமான் வண்டியில் கட்டியிருந்த ஒரு நாயைத்தான் 'புக்' பண்ணின நாய் அல்ல என்கிறுன் அந்த வெள்ளைக்காரப் பிரயாணி. "இல்லை, அதேதான்" என்று சாதிக்கிறுன் கார்டு.

இருவருடைய வாதமும் இந்த ரீதியில் வளர்ந்து கொண்டுபோயினவே தவிர ஒரு முடிவும் ஏற்படவில்லை. கூடியிருந்த கூட்டத்துக்கு ஒன்றுமே புரியவில்லை. 'புக் பண்ணியிருந்தால் அந்த நாய் எங்கே போய்விடும்? ரெயிலில் கட்டிப்போட்டது எங்கே? இந்த நாய் புக் பண்ணினது அல்ல என்பதற்கு என்ன ருசு, அடையாளம், ரெயிலில் கட்டியிருக்கும்போது?' என்று ஒவ்வொருவரும் ஒன்றும் நினைக்க முடியாமல் நினைத்துக் கொண்டு போனுர்கள்.

கார்டு ஒரே உறுதியாக இருந்துவிட்டதைக் கண்டதும் அந்த வெள்ளைக்கார அதிகாரி விஷயத்தை 'ரிபோர்ட்' செய்து நடவடிக்கை எடுத்துக்கொள்ளப் போவதாகக் கூறி அந்த எச்சில் இலை நாயை ஓர் உதை கொடுத்துவிட்டுப் போய்விட்டான். கார்டு திருஞானமும் அதைப் பொருட்படுத்தினவன் போல் காணப்படவில்லை.

* * * *

இரண்டு நாள் கழித்து ரெயில்வே கம்பெனி தலைமைக் காரியாலயத்துக்குக் கிடைத்த ரிஜிஸ்டர் நோட்டீஸ்:—

"சென்ற ஞாயிற்றுக்கிழமை...யிலிருந்து புறப்பட்டு வரும் நெ. 5 மெயிலில் என்னுடைய கக்ஷிக்காரரும்,

இரண்டாம் வகுப்புப் பிரயாணியுமான மிஸ்டர் வாட்கில், தம்மோடு கொண்டுவந்த ஒரு வருஷ வயதும் நல்ல கறுப்பு நிறமும் வாய்ந்த 'கிரே ஹவுண்டு' வேட்டை நாயைச் சௌகரியத்தை உத்தேசித்துக் கார்டு வானோடு இணைத்துள்ள சாமான் வானில் ரசீது பெற்றுக்கொண்டு விட்டிருந்தார்.

"ஆனால் அவர் இறங்கவேண்டிய இடமான.... யில் வண்டி நின்றதும் நாயைப் பெற்றுக்கொள்ள ரசீதுடன் வானில் போய்ப் பார்த்து, அவருடைய நாய்க்குப் பதிலாக ஒரு சொத்தலான வெள்ளையும் சிவப்பும் கலந்த நாய் கட்டப்பட்டிருந்ததைப் பிரஸ்தாப வண்டியின் கார்டு திருஞானத்திடம் சொல்ல, சாமான்களுக்குப் பொறுப்பாளியான ஷை நபர் பிரஸ்தாப நாய்க்குட்டி தான் புக் பண்ணப்பட்ட நாய் என்று பிடிவாதமாகச் சொல்லி, என் கக்ஷிக்காரர் மறுத்ததையும் லக்ஷியம் செய்யாமல் வற்புறுத்தினார். தம் நாய் இல்லாததால் என் கக்ஷிக்காரர் அதைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

"ஆகையால் இந்த நோட்டீஸ் மூலம் ஒன்று, உடனே பிரஸ்தாப நாயைச் செலவுத் தொகையுடன் அவரிடம் கொண்டுவந்து சேர்க்கவேண்டியது. அல்லது சொன்ன அடையாளமுள்ள நாய் அகப்படா விட்டால் வாதியின் சாமானைப் பொறுப்புடன் ஒப்படைக்கத் தவறியதற்காகவும், பிரஸ்தாப நாய் விலை பெறுமானத்திற்கும் சேர்த்து ரூ. ஆயிரம் நஷ்ட ஈடு இந்த நோட்டீஸ் கண்ட இரண்டு வாரங்களுக்குள் ரெயில்வே கம்பெனி கொடுக்க வேண்டும் என்று அறிவிப்பதுடன் தவறும் பக்ஷத்தில் மேற்படி விஷயத்தை நியாயமான முறையில்

தீர்த்துக்கொள்ள என்னுடைய கக்ஷிக்காரர் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படும் என்பதும் வற்புறுத்திக் கூறப்படுகிறது.

(வக்கீல்) ராமநாதம் (பாரட்லா)
(வக்காலத்து — ஈ. வாட்கில்)"

* * * *

இதற்கு ரெயில்வே கம்பெனி ஸி. கே. கில்டர் மிஸ்டர் ஈ. வாட்கிலுக்கு எழுதிய கடிதம்:—

"உங்கள் வக்கீல் நோட்டீஸ் கிடைத்தது. பிரஸ்தாப விஷயம்பற்றித் தலைமை ஆபீஸுக்கு இதுவரையில் தகவல் கிடையாது. தங்கள் வக்கீல் நோட்டீஸின்மீது உடனே நடவடிக்கை எடுத்து இது பற்றிய ஓர் இலாகா விசாரணை நடைபெற்று வருகிறது. கூடிய சீக்கிரம் அதன் முடிவைத் தங்களுக்குத் தெரியப்படுத்த முடியுமென நம்புகிறோம். அதுவரையில் மேற்கொண்டு நடவடிக்கை எடுப்பதை நிறுத்தி வைத்துக்கொள்வீர்கள் என எதிர்பார்க்கிறோம்."

அதே தபாலில் மெயில் கார்டு திருஞானத்துக்கும் அனுப்பப்பட்ட உத்தரவு:—

"சென்ற ஞாயிற்றுக்கிழமை நீங்கள் டியூடியில் இருந்த நெ. 5 மெயிலில் கார்டு வானோடு இணைத்திருந்த சாமான் வானில் புக் பண்ணி இருந்த, இரண்டாம் வகுப்புப் பிரயாணியான மிஸ்டர் வாட்கில் என்பவருடைய கறுப்புக் 'கிரே ஹவுண்டை' அவரிடம் ஒப்பிக்கத் தவறியது சம்பந்தமாகக் கூறப்படும் புகாருக்கு, ஏன் அந்தமாதிரி நடந்தது, வேறு நாய் ஒன்று அதன் இடத்தில் இருந்ததாகக் கூறப்படுவதற்குக் காரணம் என்ன என்ற விஷயங்களை விவரம்

கொடுத்து, இருபத்துநாலு மணி நேரத்திற்குள் ஸ்டேட்மெண்ட் அனுப்பும்படி கேட்கப்படுகிறது. விஷயம் அவசரமென எச்சரிக்கை செய்யப்படுகிறது.

ஸி. கே. கில்டர்

(மானேஜர், . . . . ரெயில்வே கம்பெனி)"

*        *        *        *

மெயில் கார்டு திருஞானம் சம்பவத்தை விளக்கித் தலைமை ஆபிஸுக்கு அனுப்பிய 'ஸ்டேட்மெண்ட்' :—

"ஸார்,

நான் சொல்லப்போவது அன்று நடந்த பிரஸ்தாப நாய் ஸம்பவத்தின் முழு உண்மை. இரண்டாம் வகுப்புப் பிரயாணியான மிஸ்டர் வாட்கில் ஒரு முழுக் கறுப்புக் 'கிரே ஹவுண்டை'ச் சாமான் வானில் புக் பண்ணி ஒப்பித்து ரசீது வாங்கினது உண்மையே. . . . . லிருந்து புறப்பட்ட வண்டி வழியில் . . . . ஜங்ஷனில் வந்து நின்றதும் அங்கு இறக்கவேண்டியிருந்த சாமான்களுக்காக ரெயில்வே ஸ்டேஷன் சிப்பந்திகள் போய்த் திறக்க, தற்செயலாக அவிழ்த்துக்கொண்டிருந்த பிரஸ்தாப நாய் திடீரென இடுக்கு வழியே பாய்ந்து, பிடிக்கப்போன எங்களைப் பார்த்து உறுமிவிட்டு ஒரே ஓட்டமாக ஓடிவிட்டது. எங்களால் ஆனமட்டும் அதை விரட்டிப் பிடிக்க முயன்றும் முடியாமல் பிரஸ்தாப நாய் ஓடியே போய் மறைந்து விட்டது, கண்ணுக்கு அகப்படாமல்.

"இந்த அசட்டுத்தனத்துக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. நாயின் சொந்தக்காரரிடம் போய்த் தெரியப்படுத்துவதற்கும் லஜ்ஜையாக இருந்தது. இந்த அசட்டுச் சம்பவத்தைப்பற்றி

ரெயில்வே கம்பெனிமீது என்னவிதமான கேலி கூறப் படும், அஜாக்கிரதைக்கு என்ன கண்டனம் கிளம்பும் என்றெல்லாம் நினைத்துப் பார்த்தேன். ரெயில் ஸ்டேஷனை விட்டுக் கிளம்பவேண்டிய நேரமும் நெருங்கிக்கொண்டிருந்தது. ஒரு சின்ன நாய் விஷயமாக ஒரு பெரிய கம்பெனியின் அந்தஸ்தே பாதிக்கப்படு வதைக் காண வெட்கமாக இருந்தது.

"நல்ல வேளையாக ஒரு யோசனை தோன்றியது. எது வந்தாலும் சரி என்று கம்பெனியின் கௌரவத் தையே முக்கியமாக மனத்தில் கொண்டு செய்துமுடித்து விட்டேன். அது என்ன என்பதை நீங்களே இதற்குள் ஊகித்திருப்பீர்கள். கறுப்புக் 'கிரே ஹவுண்டு'க்குப் பதில் வேறு ஒரு சொத்தல் நாய் அங்கே எப்படி வந்தது என்று நான் சொல்லவேண்டுமா? அந்தப் பிரயாணி இறங்கும் இடமான...யைச் சேர்ந்ததும் மிஸ்டர் வாட்கில் வந்து பார்த்தபோது இருந்த நாய் அதுதான். ரெயில்வே சிப்பந்தி ஒருவன் முயற்சியால் பிரஸ்தாப நாய் ஓடிப்போன அதே ஸ்டேஷனில் கட்டப் பட்ட எச்சிற்கலை நாய் அது.

"மிஸ்டர் வாட்கில் தம் நாய்க்குப் பதில் வேறு நாய் தம்முடையதெனக் கூறப்பட்டதைக் கண்டு ஆத்திரங்கொண்டு நடவடிக்கை எடுத்துக்கொண்டது சகஜமே. ஆனால் கம்பெனியின் கௌரவத்துக்கு முன் - என் தப்பு வேறு இருந்தபோதிலும் சரி - அவர் கோபங் கூட எனக்குப் பெரிதாகத் தோற்றவில்லை. அது அவருடைய நாய்தான் என்று ஒரேயடியாய் அடித்துப் பேசி விட்டேன். புக் பண்ணின ரசீதிலோ நாய் அடையாளம் ஒன்றும் விவரமாக இல்லை. என் துணிவும்

இதனால் வலுப்பட்டது. மிஸ்டர் வாட்கில் ஸ்டேஷனில் ஒரு களேபரம் செய்துவிட்டுப் போய்விட்டார். கோபத்துடன் நடவடிக்கை எடுத்துக்கொள்வதாகப் பயமுறுத்தி விட்டும் போனார்.

"நான் அந்த நாயையும் ரசீதையும் அந்த ஸ்டேஷனில் ஒப்பித்துவிட்டுப் போய்விட்டேன். இதுதான் நடந்த விஷயம். இந்த மாதிரி செய்தது சரியல்ல என்பதையும் அஜாக்கிரதையாக நாயை ஓடவிட்டது தப்புத்தான் என்பதையும் ஒப்புக்கொள்கிறேன். ஆனாலும் நடந்து விட்ட பிறகு என்ன செய்வது? கம்பெனியின் பெயருக்கு இழுக்கு ஏற்படக்கூடாதென்ற நினைப்பில் இதைச் செய்து விட்டேன். ஓர் உண்மையான நல்ல எண்ணத்துடன் செய்த இந்தப் பிழையை மன்னித்து விடுவீர்கள் என எதிர்பார்க்கிறேன்.

தங்களுக்குக் கீழ்ப்படியும்,

திருஞானம்

(மெயில் கார்டு)"

* * * *

இந்த 'ஸ்டேட்மெண்டை' ஒட்டித் தலைமை ஆபீஸிலிருந்து மிஸ்டர் ஈ. வாட்கிலுக்குத் தயாரான பதில்:—

"உங்கள் நோட்டீஸ் மீது கம்பெனி நடத்திய இலாகா விசாரணை மூலம் கம்பெனி கார்டு கூறும் விஷயம் சரியானதுதான் என்று ஊர்ஜிதப்படுகிறது. தாங்கள் புக் பண்ணிய ரசீதில் நாய் என்று மட்டும் குறிப்பிட்டிருக்கிறதே அன்றி, விவரங்கள் ஒன்றும் காணப்படவில்லை......ஸ்டேஷனில் நீங்கள் பெற்றுக்

கொள்ளப் போனபோது இந்த நாய் தங்களுடையது தான் எனக் கம்பெனி அபிப்பிராயப்படுகிறது.

ஸி. கே. கில்டர்

(மானேஜர், ...ரெயில்வே கம்பெனி)"

ஆனால் அது அனுப்பப்படுவதற்கு முந்தியே மிஸ்டர் வாட்கிலிடமிருந்து வந்த கடிதம்:—

"நான் எதிர்பாராத வகையில் திடீரென என் கறுப்புக் 'கிரே ஹவுண்டு' — ரெயிலில் காணாமற்போன அது — என்னிடம் இப்போதுதான் வந்து சேர்ந்தது. ஆகவே மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கும் உத்தேசம் எனக்கு இல்லை. ஆனாலும் இந்த மாதிரிச் சில்லரைச் சம்பவங்கள் இனி ஏற்பட்டுப் பிரயாணிகளுக்குத் தொல்லை ஏற்பட ஹேது இல்லாமல், கம்பெனி தக்க முன் ஏற்பாடுகளை, இந்தச் சம்பவத்தை எச்சரிக்கையாகக் கொண்டு செய்யுமென்று எதிர்பார்க்கிறேன்.

உங்கள்,

ஈ. வாட்கில்."

இந்தக் கடிதம் கண்டதும் மிஸ்டர் வாட்கிலுக்குத் தயாரான பதிலை உடனே கிழித்து எறிந்துவிட்டுத் தலைமை ஆபீஸிலிருந்து மெயில் கார்டு திருஞானத்துக்கு அனுப்பப்பட்ட குறிப்பு:

"கம்பெனியின் கௌரவத்தைக் காப்பாற்றுவதற்கு நீங்கள் எடுத்துக்கொண்ட சிரமத்தையும், அது விஷயமாகக் கையாண்ட சமயோசித யுக்தியையும் கம்பெனி பாராட்டுகிறது. ஆனாலும் பொறுப்பான

விஷயத்தில் கொஞ்சம் அஜாக்கிரதையாக இருந்து விட்டதைப்பற்றியும் பின்னும் அதிகமாக இந்த மாதிரிச் சந்தர்ப்பங்கள் ஏற்படாமல் இருப்பதற்கு ஓர் எச்சரிக்கை யாகவும் உங்கள் தவறுக்காக நடப்பு வருஷத்துக்குச் சம்பள உயர்வு நிறுத்தப்பட்டிருக்கிறது.

ஸி. கே. கில்டர்

(மானேஜர்...ரெயில்வே கம்பெனி)"

# ஆறுதல்

அவன் வாழ்க்கை செக்குமாடுகள் சுற்றிச்சுற்றி வருவதுபோல் ஆகிவிட்டது. காலை முதல் அஸ்தமனம் வரையில், ஒரு கை போய் இணைப்பு விட்டுத் தள்ளாடிக் கொண்டிருந்த அந்த நாற்காலியில், மூட்டைக் கடியைச் சகித்துக் கொண்டிருப்பது அவனுக்குச் சுபாவமாகி விட்டது. ஆனால் அதிலும் அவனுக்குப் பரிபூரண திருப்திதான் இருந்தது; ஏனென்றால் அவன் முழு வயிற்றுக்கு - குடும்பத்துக்கு - அந்த நாற்காலி சோறு போட்டது. அவனுடைய அந்தஸ்துக்கு ஏற்காது போனாலும், வந்த கடிதங்களைமட்டும் தான் முழுதும் பதிவு செய்யும் வேலையை ருசித்தோ ருசியாமலோ முறையாக அவன் செய்துகொண்டு வந்ததில் ஆச்சரியம் இல்லை.

ஆனால் அன்று வேறுவிதமாக இருந்தது. ஆபீஸ் கடிகாரம் மணி ஆறு அடித்த சப்தம் கேட்டுத்தான் திடீரென யோசனை கலைந்து நாற்காலியிலிருந்து பரம சிவம் எழுந்தான். ஆபீஸ் நேரம் ஐந்து மணியோடு முடிந்துவிட்டது. அவசரம் அவசரமாகக் கொத்துச் சாவி கலகலக்க, மேஜை அறைகளைப் பூட்டிவிட்டு, நாற்காலி முதுகில் தொங்கிய கோட்டை எடுத்துத் தன் முதுகை மறைத்துக்கொண்டு படியிறங்கிச் சாலையில் நடக்கலானான்.

நேர் எதிரே கடலில் இருந்து ஊதிவரும் காற்றுக் குளிரெடுத்தது — அவனுடைய அன்றைத் தொல்லைகளுக்கு ஊதிக்கொடுப்பதுபோல். மணிச் சப்தத்தால் ஆபீஸ் அறையில் கலைந்த யோசனை ஒன்றுகூடும் நுரை போல் மறுபடியும் மனத்தோடு கலந்து கொண்டது. தன் சட்டைப் பையில் கைவிட்டுச் சந்தேக நிவர்த்திக்காக மறுபடியும் அந்தக் கடுதாசியை எடுத்து அதில் இருந்த இரண்டொரு வரிகளைப் படித்து விட்டுப் போட்டுக்கொண்டான். அந்தக் கடிதம் மேல் ஆபீஸிலிருந்து கடிதப் போக்குவரத்துகளைக் காலா காலத்தில் அனுப்பத் தவறியதற்காக அவனுக்கு ஒரு 'ஷொட்டு' வைத்து வந்திருந்த குறிப்பு. பல வருஷ 'ஸர்வீஸ்' காலத்தில் இந்த மாதிரி 'ஷொட்டு'கள் வருவது உத்தியோகஸ்தர்களுக்கு இயல்பான போதிலுங்கூடப் பரமசிவத்துக்கு அந்த முதல் 'ஷொட்டு' மிகவும் உறுத்தியது. இதற்குச் சந்தர்ப்பமே ஏற்படாமல் போயிருந்திருக்க வேண்டுமே என்ற நினைப்புத்தான் வழிநெடுக அவனைத் தொடர்ந்தது.

அதே மனநிலைதான் அவன் வீட்டுப்படி ஏறி நடையைக் கடந்து கூடத்துக்குச் சென்றபோதும். அந்த மாதிரி அவன் வருவதே ரொம்ப அபூர்வம். தினமும் கூடத்திற்கு வந்ததும் அவன் கண்கள், அழகான மூக்கும் முழியும் பதிந்து, மலர்ந்த புஷ்பம் போன்ற உதடுகளுடனும், காது மடல்களோடும்கூடிய அந்தச் சின்ன உருண்ட முகமான தன் மகிழ்ச்சிப் பொருளைப் பாய்ந்து தேடும். அலை தள்ளி அலை சுழிப்பதுபோல் மிருதுவான கை கால்களை இழுத்துச் சுழித்துத் தவழ்ந்து சலங்கை கலகலக்க நப்புக் கொட்டிவரும் தன்

கற்பகப் பொருளை அப்படியே வாரி எடுத்துக்கொள்வான்.

ஆனால் இன்று...? மனத்துக்குக் கண்களைப் பறிகொடுத்துவிட்டுக் குறிப்பற்ற பார்வையுடன் கோட்டைக் கழற்றி 'ஸ்டாண்டி'ல் மாட்டப்போனான். அவன் செல்வம் அங்கேதான் இருந்தது. அவன் கண்கள் தேடவில்லை. அடுத்த க்ஷணம் ஒன்றும் புரியாத புண்பட்ட அந்தக் குழந்தை பரக்கப் பரக்கக் காலை வாரிப் போட்டுக் கெக்கலித்து வருவதையுங்கூட அவன் காதுகள் உணரவில்லை. கோட்டை மாட்டிவிட்டு 'ஷர்ட்'டை மாட்டிக்கொண்டிருந்தான்.

ஏதோ குளுமையாகவும் சுருசுருப்பாகவும் அவன் கால்களில் ஊரும் உணர்ச்சிதான் அவனுக்கு அப்போது உண்டாயிற்று. அந்த 'ஷொட்டு'த்தான் அவன் ஞாபகத்தில். விவரமில்லாத ஓர் அருவருப்புத்தான் அந்த ஊர்தலில்.

"ஸ்ஸ்..." என்று முகத்தைச் சுளித்து ஓசை செய்துகொண்டே காலை ஏதோ நினைவில் லேசாகப் பின்னால் தள்ளிவிட்டான். தான் செய்தது இன்னதென்பதே அவனுக்குத் தெளிவில்லை. அப்போது காலில் மிருதுவாக ஏதோ தள்ளப்படவும் திடுக்கிட்டுப் போய், "அடடா!" என்று சொல்லிக்கொண்டே திரும்பினான். - குழந்தை கற்பகம்! முழங்கால்களைத் தரையில் பதித்து அவன் கால்களைக் கட்டித் தொத்திய குழந்தை அந்த க்ஷணம் மல்லாந்து சாய்ந்தது.

பதறிப்போய்க் குழந்தையை அப்படியே தூக்கித் தோள்மீது தாங்கித் தலையைத் தடவிக் கொடுத்தான்.

"ஐயையோ! குழந்தையின் மண்டை உடைந்து போச்சு!" என்று குழந்தையின் வீரிட்ட அலறலைக் கேட்டுத் துடிதுடித்து ஓடிவந்தாள் கனகம், கூடத்துக்கு.

"இங்கே கொடுங்கள் குழந்தையை! எங்கே காயம் பட்டதோ? வேண்டாண்டி அம்மா கற்பகம்!" என்று பதற்றத்துடன் குழந்தையைத் தன் கையில் வாங்கினுள். மின்வெட்டு நேரத்தில் அவள் கண்கள் குழந்தையின் உடல் முழுவதையும் ஆராய்ந்து விட்டன.

"ஒன்றும் காயமில்லை; நல்ல வேளை" என்று நடுங்கிய குரலில் சொன்னுன் பரமசிவம்.

அலறிய குழந்தையின் முகம் சிவந்துவிட்டது. வீரிட்டுக் கத்திக் கோணிய வாய் முழுதும் விரிந்து இழுத்துக்கொண்டு போய்விட்டது போல் துடித்தது. நிலைக்குத்தியதுபோலக் கண்கள் விரிந்து உறுத்துப் பார்த்தன. கண்ணீர் குப்பென்று துளித்தது. அழுகை கொஞ்சநேரத்துக்கு வெளியே வரவில்லை. முக நரம்புகள் வெடவெடத்தன. தாயும் தந்தையும் குழந்தையின் கண்ணராவி நிலையைப் பார்த்துத் தவியாய்த் தவித்தார்கள். அவர்கள் கண்களில் நீர்மல்கி விட்டது. குழந்தையின் அழுகை எப்போது வெளிவரும் என்று இரு விநாடிகளில் அவர்கள் பட்ட அவஸ்தை!— குழந்தையைத் தேற்றும் வார்த்தைகள்கூட வெளிக் கிளம்பவில்லை.

அம்ம! ஒரு மட்டுக்கு அடித்தொண்டையிலிருந்து சன்னமாக ஆரம்பித்த அழுகை லேசாக வெளியே வந்து பலத்துக் கிளம்பியது. தாயும் தந்தையும் ஒரு பெருமூச்சு விட்டார்கள். உயிர் வந்தது குழந்தைக்கும் அவர்களுக்கும்.

"ஐயோ! நாயனு தள்ளிவிட்டாரா? இப்படியா தள்ளுகிறது குழந்தையை? காலில் ஒரு கண் இல்லாமல் போச்சே உங்களுக்கு!" என்று கோபப் பாவனையுடன் கனகம் பரமசிவத்தைப் பார்த்துக் கொண்டே குழந்தையை மார்போடு சேர்த்துக் கொண்டாள். குழந்தை அலறல் தணியவில்லை.

"இல்லே கனகம்! எனக்கு ஏதோ நினைப்பு. காலில் ஏதோ ஊர்ந்ததுபோல இருந்தது. சலிப்புடன் காலால் தள்ளிவிட்டேன். குழந்தையைப் பார்க்கவில்லை. வேணு மென்று தள்ளுவேனு? இங்கே கொண்டா. நான் சமாதானப் படுத்துகிறேன்" என்று குழந்தையை இழுத்துத் தன் கையில் வாங்கினுன். தான் செய்த தப்புக்குக் குழந்தையைத் தானே சமாதானப்படுத்த வேண்டுமென்று அவன் மனம் துடித்தது.

குழந்தையை வாங்கியதுதான் தாமதம். அவன் முகத்தை ஒருதரம் ஏறிட்டுப் பார்த்துவிட்டு வீரிட்டுக் கத்தியது. முன்னேவிட அதிகமாக அவன் கைப் பிடிக்கு நழுவி அம்மாவிடம் போகக் கை கால்களைப் போட்டுப் பிய்த்துக்கொண்டது. அவனைப் பார்க்கவே பயப்பட்டதுபோல் இருந்தது. கனகம்மா வாய்விட்டுச் சிரித்தாள்.

"கொடுங்களேன் குழந்தையை இங்கே! போதும் நீங்க சமாதானப் படுத்துகிற அழகு! உங்களைப் பார்க்கவே அது பயப்படுகிறது. பொல்லாத நாயனு! அதுங் கிட்டப் போகாதேடீ கண்ணு!" என்று சொல்லிக்கொண்டே குழந்தையைத் திரும்பவும் தன் கையில் வாங்கிக் கொண்டாள். தன்னுல் சமாதானப் படுத்த முடியாதென்று பரமசிவமும் அவளிடமே

அந்தப் பொறுப்பைக் கட்டி விட்டான். குழந்தையுடன் கனகம்மா சமையலறைக்குப் போய்விட்டாள்.

ஆபீஸ் தொல்லையைப்பற்றித் தன் மனம் கவலைப் பட்ட நிலைமையில் குழந்தையை உதறிவிட்டதை நினைக்கும்போது அவன் மனம் வேதனைப் பட்டது. கன்றிப்போய் ரத்தம் சுரந்து நடுங்கிய முகம் இன்னும் அவன் கண்முன் சித்திரமாக நின்றது. கடைசியாக அவனிடம் வர மறுத்து அது காட்டிய பீதிப் பார்வையும் முகக்குறியும் அவனை உறுத்தின.

கொஞ்சநேரம் சென்றது. சமையலறையில் கற்பகத்தின் அழுகை தாயின் ஆறுதல்களுக்கு இடையே குறைந்து மறைந்து விட்டது. அதற்குள் பரமசிவத்துக்குப் பொறுக்கவில்லை. குழந்தையின் அமைதி முகத்தை உடனே பார்த்துவிட வேண்டுமென்று, "கற்பகம், நாயனு தள்ளிவிட்டேனு?" என்று அர்த்தமில்லாமல் கேட்டுக்கொண்டே சமையலறைக்குள் எட்டு எடுத்து வைத்தான்.

"போதும் அழவிட்ட லக்ஷணம்!" என்று புடைவைத்தலைப்பு மறைவிலிருந்து குழந்தையை எடுத்துக்கொண்டு எழுந்து சென்றாள் கனகம். பரமசிவம் அசட்டுச் சிரிப்புடன் குழந்தையை நெருங்கி, "வலிக்கிறதா கண்ணு? எங்கே பட்டது?" என்று சொல்லிக்கொண்டே அதன் கன்னத்தில் கை வைத்துத் திருப்பினான்.

அவனைப் பார்த்ததும் குழந்தையின் கண்கள் மாறிய விதத்தைக் கண்டு அவன் பிரமித்துப்போனான். பீதிகலந்த ஒரு விழி விழித்தது அவனைக் கண்ட குழந்தை. "ஐயோ! என்னது, என்னது?" என்று

இருவரும் வாய்திறக்கு முன்னமே குழந்தை வீரிட்டது. தாயின் தோள்களில் முகத்தைப் பதித்துக்கொண்டது.

"நீங்கள் கிட்ட வராதேயுங்களேன். கீழேயும் தள்ளிவிட்டு, அதுங்கிட்டப்போய் கொஞ்சினுமட்டும் அது மறந்துவிடுமா என்ன?" என்று கனகம்மாள் குழந்தையைக் கூடத்துக்கு மறுபுறம் கொண்டு போனாள். "நீ நாயனாவைப் பார்க்கவேண்டாண்டி கண்ணு; என்ன நாயனா வேண்டிக்கிடக்கு!" என்று தேற்றிக்கொண்டே பரமசிவத்தை விஷமத்துடன் பார்த்தாள்.

பரமசிவத்தின் முகத்தில் சிரிப்புத் தோன்றியது என்றாலும் அது திருப்தியான, சாந்தமான சிரிப்பல்ல; வேதனை கலந்த சிரிப்பு. குழந்தை ஏன் தன்னைக் கண்டு இப்படி அலறவேண்டும்? யாரிடம் சதா ஓடிவந்து விழுந்து மேலே தவைத்துக் கொஞ்சிக் குலாவிக்கொண்டிருக்குமோ அப்படிப்பட்ட தன்னைக் கண்டு! தனக்கு உயிரான குழந்தை தன்னை வெறுத்துத் தள்ளுவது இதுதான் முதல் தடவை. இதைத்தான் அவனால் சகிக்க முடியவில்லை. கற்பகத்தின் கசப்பு முகத்தை இதுவரையில் அவன் கண்டதில்லை.

"ஹூம்! கீழே தெரியாமல் தள்ளிவிட்டால் இவ்வளவு வர்மமா அதற்கு? அடேயப்பா! உங்கம்மா கிட்டவே இரு. நாயனா ரொம்பப் பொல்லாதவன் தான்!" என்று சொல்லிக் குழந்தையின் மனோபாவத்தைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே பரமசிவம் நகர்ந்து சென்றான்.

"என் கற்பகக் கண்ணுக்கு ரோஷம் இல்லையென்று நினைத்தேளா? இப்போ தெரிந்ததா? கும்பிடணும்

என் தங்க விக்ரகத்தே" என்று கனகம ஒரு தாயின் கர்வத்துடன் பீத்திக்கொண்டாள். அவள் தோள்மீது குழந்தை பட்டுப்போல் துவண்டு கழுத்தைக் கட்டிக் கொண்டு, அம்மா ஒருவேளை நாயனுவிடம் தள்ளி விடுவாளோ என்ற பயத்துடன் கண்களைத் திருப்பாமல் மூடித் திறந்துகொண் டிருந்தது.

கொஞ்சநேரம் ஆயிற்று. சற்று எட்டி நின்றே பரமசிவம் கற்பகத்தைக் கவனித்துக்கொண் டிருந்தான். கிட்டப்போய் நின்று மறுபடியும் சோதனை செய்து பார்க்க அவன் மனம் இடங் கொடுக்கவில்லை. ஆதலால் கொஞ்சநேரம் அப்படியே இருக்கச் செய்து விட்டால் மனம் கொஞ்சங் கொஞ்சமாக மாறிய பிறகு சாந்தப் படுத்திக் கொள்ளலாம் என்று இருந்தான். குழந்தையைச் சீக்கிரமாகவே தன் கையில் எடுத்துக் கொஞ்சவேண்டுமென்று ஆவல் அதிகரித்தது. ஆனல் குழந்தையோ பிடிவாதமாக இருந்தது. அவனுக்குக் கிட்ட நெருங்கவே இடங்கொடுக்கவில்லை.

குழந்தையின் மன நிலையே ரொம்ப மிருதுவானது. அன்பு அழைப்புக்கும் அணைப்புக்குந்தான் அதன் மனத்திலும் உடலிலும் இடம் உண்டு. அதற்குப் புண் உண்டாக்கியவர்கள், அதன் மனசு க்சக்க இடம் தேடிய வர்கள் யாராக இருந்தாலும் சரி, அதன் தாய் தந்தை யரைக்கூட, அது மன்னிக்காது. விருப்புக்குத்தான் அதன் ஹிருதயத்தில் இடம்; வெறுப்புக்கு இல்லை!

இதை நினைத்து நினைத்துப் பார்த்துக்கொண்ட போது பரமசிவத்தின் மனத்தில் வேதனை அதிகரித்தது. குழந்தை ஆவலோடு எப்போதும்போல் தன்னிடம் தாவி வரவேண்டும் என்ற ஆவல் அவனை வாட்டியது.

குழந்தையைச் சமாதானப்படுத்துவதைப் பற்றியே யோசனை செய்துகொண்டிருந்தான்.

அவனுக்கு வெளியே போகத் தோன்றவில்லை. கூடத்தைச் சுற்றிச் சுற்றி நடந்துகொண்டிருந்தான். கனகம் மற்றொரு மூலையில் இருந்து கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லிக்கொண்டு இருந்தாள். ஒரு யோசனை தோன்றியது. மேஜைமீது கிடந்த கலர் கிலுகிலுப்பையை எடுத்துக்கொண்டு மெதுவாகக் குழந்தை கிட்டப் போனான். குழந்தை முகம் அவன் பக்கம் இருந்தது. கனகம் சுவரிலுள்ள படங்களைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

அவள் தோள் ஓரம் போய் நின்று குழந்தையைப் பார்த்தான்; அது தூங்கவில்லை. விழித்துக் கொண்டிருந்தது. "இந்தா கற்பகம், கிலுகிலுப்பை! சமத்துக் கண்ணு" என்று சொல்லிக்கொண்டே அதை மெதுவாக அதன் கைகளில் வைத்து அமுக்கினான். குழந்தை ஒரு முனகலுடன் தலையைத் தோளிலிருந்து உயர்த்தி உலுக்கிக்கொண்டு அதைக் கையில் வாங்கிக் கொண்டது. பரமசிவத்தின் கண்கள் மகிழ்ச்சியால் பிரகாசமடைந்தன. அடுத்த விநாடி கிலுகிலுப்பை குழந்தையின் கைகளிலிருந்து பாய்ந்து ஒரு மூலையில் போய் விழுந்தது.

"அப்படிப் போடு!" என்று கனகம் ஒரு குதி போட்டுச் சிரித்தாள். குழந்தையின் பிடிவாதமும் பரமசிவத்தின் தோல்வியும் அவளுக்கு உற்சாகமாக இருந்தன. கற்பகம் மீண்டும் அழ ஆரம்பிக்கவும் கனகம் கணவனிடம் பொய்க்கோபத்தைக் காட்டிக் குழந்தையுடன் ஒருபுறம் தள்ளிப் போய்விட்டாள். குழந்தை

யைத் தூங்கச்செய்யப் பரமசிவம் இப்போதும் தோல்வி அடைந்தான். நேரம் சென்றது.

தன் பிடிவாதம் அத்தனையையும் கண் இமைகளுக்குப் பின் மறைத்து வைத்திருப்பதுபோல் கண்களை மூடிக்கொண்டு தொட்டிலில் மிருதுவாக மூச்சு விட்டுக்கொண் டிருந்தாள் குழந்தை கற்பகம். தொட்டில் போய்த் திரும்பும்போதெல்லாம் குழந்தை நெற்றியில் உரசிக்கொண் டிருந்த மயிர் நிமிர்ந்து படிந்துகொண் டிருந்தது. கனகம் சங்கிலிகளைப் பிடித்துக்கொண் டிருந்தாள். பரமசிவம் மெதுவாக வந்து தொட்டில் ஆட்டத்தை நிறுத்தினான்.

"ஐயோ, அவள் தூங்கப்பட்ட பாடு — போதும்; எழுப்பிவிடாதீர்கள்" என்று அவன் கையைப் பிடித்து இழுத்தாள் கனகம்.

"இல்லை, பேசாமல் இரேன்" என்று புன் சிரிப்புடன் மெதுவாகத் தொட்டிலுக்குள் தலையைத் தாழ்த்திப் பரமசிவம் குழந்தையையே பார்த்துக்கொண் டிருந்தான். உணர்வு அயர்ந்திருந்த அந்த நிலையில்தான் கற்பகத்தை நெருங்க அவனுக்குத் துணிவு வந்தது. "இப்போ என்ன செய்வாய்?" என்று சொல்லிக்கொண்டே மிருதுவாக அதன் கன்னத்தில் பட்டதும் படாததுமாக குற்றமுள்ள மனத்துடன் ஒரு முத்தம் கொடுத்துவிட்டு ஒருவித ஆறுதலுடன் படுக்கச் சென்றான் பரமசிவம்.

# குருவிக் குஞ்சு

வெகு நாட்களுக்குப் பிறகு கதை எழுத உட்கார்ந்தேன். சிந்தனை திரளாமல் நழுவி ஓடிக்கொண்டிருந்தது, பதம் பெறாத பாகுபோல். வெப்பத்தின் கோரம் மன அமைதியைக் குலைத்துக் கற்பனையைச் சிதற அடித்துக்கொண்டிருந்தது. "அண்ணா, அண்ணா! சீக்கிரம் ஓடி வா, குருவிக்குஞ்சு!" என்று கொல்லையிலிருந்து சீதா கத்திக்கொண்டு ஓடி வந்தாள். நான் அவளைப் பாதி வழியிலேயே சந்தித்தேன். இருவரும் அந்த இடத்திற்கு ஓடினோம். சீதா குறிப்பிட்ட இடத்தில் வெந்நீர்ப் பானைக்கு அடுத்தாற் போல் அடுப்போடு பதுங்கி ஒடுங்கிக் கிடந்தது அந்தக் குஞ்சு. அதன் பக்க இறக்கைகள்கூடப் பரவலாக வளர்ந்திருக்கவில்லை. உடலிலும் தலையிலும் சொட்டையான இடங்கள் அதன் செந்நிறத் தோலை வெளிக்குக் காட்டி நின்றன. வால் சிறகு இருக்கவேண்டிய இடத்தில் மொட்டையாக இருந்தது. முட்டையிலிருந்து வெடித்துக் கிளம்பிச் சில தினங்களே ஆகியிருக்கும்.

எப்படியோ கூட்டிலிருந்து வெளியேறிவிட்டது அந்தக் குஞ்சு — தாய்க் குருவியின் பாதுகாப்பிலிருந்து. குஞ்சுக்குச் சற்றுத்தூரத்தில் நின்று நான் பார்த்துக்கொண்டிருந்தேன். என்னைச் சுற்றிக் 'கிரீச் கிரீச்' என்று சப்தம் கேட்கவே சுற்று முற்றும் பார்த்தேன்.

பல குருவிகள் மரங்கள்மீதும், கொடிகள்மீதும், மண் சுவர்கள் மீதும், உட்கார்ந்து கிரீச்சிட்டுக் கொண்டிருந்தன இடைவிடாமல், வழிதவறிய குஞ்சை எடுத்துச் செல்லும் ஆசையுடன். அதற்குள்தான் நான் போய் விட்டேனே அதற்கு எமனாக!

"அண்ணா! எனக்கு அதைப் பிடித்துக்கொடேன்" என்று கெஞ்சிக் குழறிச் சீதா கேட்டாள். என் கதை ஞாபகம் எல்லாம் மறந்து போய்விட்டது. அந்தக் குஞ்சைப் பிடிப்பதில் முனைந்துவிட்டேன். பதுங்கிப் பதுங்கிச் சென்று கையை அதன் வாலோரம் கொண்டு போவேன். குஞ்சின் மின் மினிக் கண்களுக்கு நிழல் தட்டிவிடும். மனித எமனிடமிருந்து தப்ப எண்ணி ஒரு விசை கொடுத்துத் தாவிப் பறக்க முயலும். பலஹீனமான அதன் இறக்கை சிறிது தூரத்துக்கு மேல் அதைத் தூக்கிச் செல்ல முடியாமல் ஓய்ந்து தாழ்ந்துவிடக் குஞ்சு கீழே விழுந்து தடுமாறும்.

மறுபடியும் நான் கையைக் கிட்டக் கொண்டு போவேன். குஞ்சு மறுபடி சிறகு விரித்துப் பறக்க முயலும். இந்த வேடிக்கையைப் பார்த்துச் சீதா சிரிப்பாள், கை தட்டுவாள். "விட்டுடாதே, அண்ணா" என்று கோபிப்பாள். அதே சமயம் குருவிகளின் அலறல் அதிகமாகும்.

எவ்வளவு நேரந்தான் இறக்கை வளராத அந்தப் பேதைக் குஞ்சால் எனக்குப் போக்குக் காட்ட முடியும்? முடிவில் எனக்குத்தான் ஜயம். அதை நான் பிடித்து விட்டேன். கைப்பிடிக்குள் 'கிரீச் கிரீச்' எனக் கத்தியது அபலைக் குஞ்சு. தன் சிறு அலகுகளால் விரலில் கொத்தியும் நீண்டு ஒல்லியான விரல்களால்

பிறுண்டியும் தப்பியோடப் பார்த்தது. சுதந்திரத்தை இழப்பதற்கு அதற்குக்கூட மனசில்லை!

குஞ்சை உள்ளே கொண்டுபோகும்போது குருவிகள் பலமாகக் கத்தின. இது எனக்கு விளையாட்டாக இருந்தது. கதவுக்கு உட்புறம் வரத் தைரியம் இல்லாமல் குருவிகள் மரத்துக்குத் திரும்பிப் போய்விட்டன. இரண்டே இரண்டு குருவிகள் மட்டும் கதவின்மேல் உட்காருவதும் பறந்து போவதுமாகக் கத்திக்கொண்டிருந்தன. ஒன்று ஆண்; மற்றொன்று பெண்.

சீதா ஓடிப்போய் ஒரு மெல்லிய பட்டுநூலைக் கொண்டு வந்தாள். குஞ்சின் கால் ஒன்றில் அதைச் சுருக்குப் போட்டுக் கட்டிக் கீழேவிட்டு, மற்றொரு நுனியைப் பிடித்துக்கொண்டேன். குஞ்சு சுற்றிச் சுற்றி, கயிறு இடம் கொடுக்கும் அளவு வரை பறந்து பார்க்கும். கயிற்றின் சுருக்கானது காலில் இறுகி இழுக்கவே தலைகீழாகக் கீழே வந்து விழும். குஞ்சின் சிறகடிப்பு, சீதாவுக்குப் பயமூட்டும். எட்டி நின்று கைதட்டி ஆர்ப்பரித்துக்கொண்டிருப்பாள். குஞ்சை அவள் பக்கம் பறக்கும்படி விடுவேன்: அலறிப் புடைத்துக்கொண்டு சமையல் அறைப் பக்கம் ஓடி அம்மாவை கட்டிக் கொள்வாள்.

கொஞ்சங் கொஞ்சமாகச் சீதாவின் பீதி குறைந்து கொண்டு வந்தது. என் தைரிய வார்த்தைகளை நம்பி என் முதுகுக்குப் பின்னால் வந்து நின்று கயிற்று நுனியைத் தொட்டதும் தொடாததுமாகப் பிடித்துக் கொள்வாள். குருவியை என் கையில் பிடித்துக் கொள்ளச் சொல்லி மெதுவாக அதன் முதுகைத்

தடவிக்கொடுத்துவிட்டு, கடித்துவிடுமோ என்ற பயத்தில் சட்டென்று கையைப் பின் வாங்கி மார்பில் புதைத்துக் கொள்வாள்.

அடிக்கடி என் கண்கள் கொல்லைப் பக்கம் பார்த்துக் கொண்டே இருக்கும், பெரிய குருவிகள் என்ன என்ன செய்துகொண்டிருக்கின்றன என்பதை ஆராய.

நான் குஞ்சை என் தலைமீதும் தோள்மீதும் விட்டுக் காண்பித்து, "பார்த்தாயா, சீதா, என்னைக் கடிக்கவில்லை" என்பேன். தன் கையில் விடச் சொல்வாள் அவள். விடுவதற்கு முன் பயந்து பின்வாங்கிக் கொள்வாள். பிறகு பயம் தெளிந்து மெதுவாகக் குஞ்சைக் கையில் ஏந்துவாள். குஞ்சு அவள் கையை இறுகப் பிடித்துக் கொண்டு சிறகைப் படபடவென அடிக்க ஆரம்பிக்கும். அந்தக் குறுகுறுப்பு, சீதாவுக்குப் பீதியை உண்டாக்கும். "ஐயோ எடுத்துடேன்" என்று கத்த ஆரம்பிப்பாள். எங்களுக்குச் சிரிப்பு வரும். கொஞ்சம் பேசாமல் இருப்பேன். குஞ்சு அவள் கையில் நடந்து தோளுக்குப் போக ஆரம்பிக்கும்.

சீதா அலறிக்கொண்டே கையை உதறுவாள். குஞ்சு பிடியையும் விடாமல் நிற்கவும் முடியாமல் தவிக்கும். குஞ்சை இறுகப்பற்றி நான் எடுத்து விடுவேன். சீதாவின் அழுகை மறுபடி சிரிப்பாக மாறிவிடும். கிட்ட வந்து குஞ்சைத் தடவிக் கொடுப்பாள்.

கொஞ்ச நேரம் ஆனது. சீதாவின் தைரியத்தைக் கண்டு எல்லோருமே திகைத்துப் போனோம். குஞ்சைத் தானே கையில் தூக்க ஆரம்பித்து விட்டாள்! அதன் மென்னியைச் சேர்த்து இறுக்கிவிட்டாள். குஞ்சு வீரிட்டுக் கத்தியது.

"ஐயையோ! செத்துப் போச்சு; அதை விட்டுடடா, பாவத்தைக் கட்டிக்காதே!" என்று அம்மா சப்தம் போட்டாள்.

அதைப் பிடித்துவிட்ட சந்தோஷத்தில் சீதா கூச்சலிடுவாள். சந்தோஷக் குரலில், "அம்மா பாரேன்" என்று ஓடுவாள். குருவியை அவள் கையினின்று சாவதானமாக வாங்கி மறுபடியும் கீழே விடுவேன். சின்னக் குஞ்சு தன் 'இம்மணி'க் கண்களை மூடிமூடித் திறந்து குன்றிப்போய் நிற்கும். பயத்தில் அசையாமல் கண்ணை மூடிக்கொண்டு அயர்ந்திருக்கும். அதன் சிறு மனசு என்ன வேதனைப் பட்டதோ! பெரு வேதனைப் பட அதைக் கட்டிப்போட்டு விட்டேன், சுதந்திரத்தைப் பறித்து. சின்ன வேதனையான சீதாவின் பிடிப்பினின்று அதைத் தப்பவைக்க முயன்றேன் நான்!

திடீரென்று சீதா சமையலறைக்கு ஓடினாள். அம்மா கொடுத்த காப்பியைக் குடித்துவிட்டு, "இன்னும் கொஞ்சம்" என்று கேட்டாள்.

"ஏதுக்கடி?" என்று அம்மாவின் கேள்வி.

"குருவிக் குஞ்சுக்கு!" என்று பதில்.

"குருவிக் குஞ்சுக்குக் காப்பிதான் குறைச்சல். போடி போ!"

அதற்கு மேல் சீதாவின் அழுகைக் குரல் கூடத்தில் கேட்டது. அம்மா வந்து புகார் சொன்னாள். "எல்லாம் நீ பண்ணுகிற கூத்தடா" என்று என்னைக் கண்டித்தாள். அடுத்த விநாடி மன்னி கொடுத்த காப்பியுடன் வந்து சீதா காப்பியை நீட்டினாள்.

ஒரு தட்டில் காப்பியை விட்டுக் குஞ்சின் அலகை அதன் சமீபம் கொண்டுபோனேன். முதலில் வாயைப்

பிடிவாதமாகத் திறக்க மறுத்துவிட்டது, அந்தக் குஞ்சு. பிறகு மெதுவாக வாயை வைத்து எடுத்தது. இன்னும் கொஞ்ச நேரம் கழிந்ததும் பயம் தெளிந்து குடிக்கவும் ஆரம்பித்தது. குடித்துவிட்டு அலகை உதறும்போது காப்பித்துளிகள் பக்கங்களில் தெறிக்கும். "தூ, சனியன்!" என்று குஞ்சை வைவாள் சீதா! "குருவி, குடி! குருவி" என்று தன் பாஷையில் அதோடு பேசுவாள்.

வேதனைப்பட்ட குஞ்சின் போக்கைக் கண்டு சீதா சந்தோஷப்பட்டுக்கொண் டிருந்தாள். இரண்டும் சேர்ந்து எனக்குப் பொழுது போக்கு, வெயில் நேரத்திற்கு.

நேரம் ஆக ஆகச் சீதாவின் உற்சாகமும் என் விளையாட்டு ஆவலும் தணிந்தன. பலவிதம் சொல்லிச் சமாதானப்படுத்திய பிறகுதான் ஒருவாறாகக் குஞ்சை விட்டுவிடச் சீதா சம்மதித்தாள். "அது அம்மாகிட்டப் போகட்டும்" என்று இரக்கமாகச் சிபார்சு செய்து விட்டது அவள் குழந்தை மனசு. இவ்வளவு நேரம் குஞ்சை உபத்திரவப் படுத்தி விட்டோமே என்ற எண்ணம் என் மனத்தில் தோன்ற ஆரம்பித்தது, விளையாட்டு ஆவல் தணிந்ததும்.

பட்டுக் கயிற்றை அவிழ்த்துவிட்டுக் கையில் குஞ்சுடன் பின்பக்கம் போனேன். குருவிகள் எல்லாம் இன்னும் இடைவிடாமல் கத்திக்கொண் டிருந்தன. அந்த இரண்டு குருவிகள் மட்டும், ஓர் இடத்திலும் நிலையாக இல்லாமல், சுற்றிச் சுற்றிக் கதவு வரை வந்து கத்திவிட்டுத் திரும்பும், உள்ளேவரத் தைரியம் இல்லாமல். அவைகளின் குஞ்சுதானே என் கையில்

இருந்தது. அவைகள் கத்தியது அலறியது போல் இருந்தது.

திரும்பக் குஞ்சைப் பார்த்ததும் குருவிகளின் அலறல் அதிகமாயிற்று. சுற்றிச் சுற்றிப் பறந்து இடம் மாறி மாறி உட்கார்ந்தன. நான் நெருங்கிப் போனால் தள்ளிப் பறந்து கத்தும். இந்த இரண்டு மட்டும் என் தலைக்கு மேலாகப் பறந்து கத்திக்கொண்டே இருந்தன.

இவ்வளவு நேர விளையாட்டும் எனக்கு அப்போது கசக்க ஆரம்பித்தது. குருவிகளின் பலத்த அலறல் என் ஹிருதயத்தைத் தாக்கிப் புண்படுத்தியது. என்ன அற்பமான விளையாட்டு இது என்று மனசு ஏசிக் கொண்டது. விளையாட்டின் உற்சாகத்தில் அப்போது ஒன்றும் தோன்றவில்லை. நிதானத்தில் எழுந்தது இந்தச் சிந்தனை.

குஞ்சைக் கூட்டில் விடுவதற்காக அந்த இடம் முழுதும் தேடிப் பார்த்தேன். கண்டுபிடிக்க முடிய வில்லை. பெரிய குருவிகளின் அலறல்தான் காதைத் துளைத்தது. பாவி, இப்போதாவது குஞ்சை நம்மிடம் விடமாட்டானா என்று அவை சாபமிட்டன போலும்!

ஒரு வழி செய்தேன். பெரிய குருவிகள் இரண்டின் கண்ணிலும் படும்படி காட்டிச் சென்று கூரை மூடிய சுவரின்மீது கொண்டுபோய்க் குஞ்சை வைத்துவிட்டு அப்புறம் போய்விட்டேன். வெளியே வைப்பதற்குப் பயம்! காக்கை கழுகு ஏதாவது தூக்கிப் போய் விட்டால்?

குஞ்சைப் பத்திரமாக வைத்த பிறகு சீதா வேறு விளையாட்டு விளையாடப் போய்விட்டாள். குஞ்சுடன்

அவள் விளையாட்டு முடிந்தது. சீதாவின் விளையாட்டு முடிந்த இடத்தில் என் கவலை ஆரம்பித்தது. குருவிகள் குஞ்சிடம் போகின்றனவா என்பதை ஒளிந்து பார்க்க ஆரம்பித்தேன். குஞ்சை அதன் தாயிடம் சேர்த்துவிட வேண்டும் என்று மனசு எவ்வளவு ஆத்திரப்பட்டது! சில நிமிஷங்கள் சென்றன. என் மனசு ஏமாற்றந்தான் அடைந்தது. குருவிகள் கூரைக்கு வெளியில் சுற்றிச் சுற்றிப் பறந்துகொண் டிருந்தனவே யொழிய உள்ளே நுழைய முயலவேயில்லை. எங்கே தங்களையும் பிடிக்கச் சூழ்ச்சி செய்யப்பட் டிருக்கிறதோ என்று பயந்தனவோ என்னவோ!

குஞ்சின் சப்தமும் கேட்கவில்லை. எனக்குச் சந்தேகம் ஏற்பட்டது. போய்ப் பார்த்தேன். குஞ்சு நான் வைத்த இடத்திலேயே அசையாமல் இருந்தது. மனசுக்குக் கொஞ்சம் ஆறுதல் ஏற்பட்டது. குருவி கத்துவதுபோல் மெதுவாகக் கிரீச்சிட்டேன். குஞ்சு தலை தூக்கிச் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு அமைதியாயிற்று. பதிலுக்குக் கத்தவேயில்லை. கத்தினால் குரலைக் கேட்டுக் குருவிகள் அங்கு ஓடிவருமென்பது என் நினைப்பு. மறுபடியும் என் ஒளிவிடத்துக்குச் சென்று கவனித்துக்கொண் டிருந்தேன்.

வெளியே பறந்துகொண் டிருந்த குருவிகள் இரண்டும் இப்போது கூரைமீது வந்து உட்கார்ந்தன, கொஞ்சம் தைரியத்துடன். பக்ஷிகளுள் குருவிகளுக்குத் தான் என்ன பயந்த ஸ்வபாவம்!

குருவிகள் பறந்து போகும்; வந்து உட்காரும்; மறுபடி பறந்து போய்விடும். இப்படியே கழிந்தது. அவை குஞ்சை நெருங்கவேயில்லை. என் மனத்தின்

வேதனைப்பாரமும் குறையவில்லை; அதிகரிக்கத்தான் செய்தது. மறுபடியும் குஞ்சு அங்கேயே பத்திரமாக இருக்கிறதா, இல்லை செத்து விட்டதா என்று பார்க்கப் போனேன். நல்ல வேளை, அதே இடத்தில்தான் இருந்தது. கிரீச்சல் சப்தம் செய்து அதன் கவனத்தை இழுத்தேன். குஞ்சும் வாய் திறந்து பதிலுக்குக் கிரீச்சிட்டது, இரண்டு மூன்று தரம். எனக்கும் நம்பிக்கை ஏற்பட்டது. என் ஒளிவிடத்துக்குச் சென்று விட்டேன். குஞ்சின் சப்தத்தைக் கேட்டுக் குருவிகள் சுவரோரமாய் — கூரைக்குச் சமீபமாக நெருங்கிப் பறந்தன.

குருவிப் பிரச்னையின் முடிவை அறியாமல் அந்த இடத்தை விட்டு நகருவதில்லை என்று நான் அங்கேயே பழிகிடந்தேன். கூடத்தில் மற்றவர்கள் கேலி செய்ததையும் பொருட்படுத்தவில்லை.

கூரையின் கழை ஒன்றில் தாய்க் குருவி உட்காரப் போகும் சமயம். எங்கிருந்தோ வந்துவிட்டது அந்த ராக்ஷஸ ஜந்து 'கா, கா' என்று கத்திக்கொண்டு. ஒரு 'விஸ்ஸ்' சப்தத்துடன் கூரைமீது வந்து உட்கார்ந்தது. என் வயிற்றில் பகீர் என்றது. அந்தக் குருவிகளுக்கும் அப்படித்தானே இருக்கும்! குருவிகள் அலறிக்கொண்டு சுற்றிச் சுற்றிப் பறந்தன. அதே சமயம் உள்ளே இருந்த குஞ்சும் வாய்விட்டுச் சேர்ந்தாற்போல் கத்தியது, ராக்ஷஸ ஜந்துவுக்குத் தன் இருப்பிடத்தைத் தெரிவிப்பதுபோல். என்ன பயங்கர சோதனை! ஒரு கண்டம் என் கையில் ஒருவாறு தப்பிவிட்டது. இப்போது இன்னும் ஒரு கண்டம். இதற்கும் நான்தானே காரணம்!

தாமதிக்கவில்லை. ஒரே பாய்ச்சலில் கல்லெறிந்து அதை விரட்டிவிட்டேன். பாவம்! அதோடு அந்தக் குருவிகளும் பறந்து போய்விட்டன, தங்களையும் விரட்டு வதாக எண்ணி. 'அட கஷ்டமே!' என்று என்வாய் முணுமுணுத்து ஏமாற்றத்தை வெளிக் காட்டியது. காகத்தைத்தான் நான் விரட்டினேன் என்பது பேதைக் குருவிகளுக்கு எப்படித் தெரியும்?

காகத்தைக் கண்ணுக்குத் தெரியாமல் விரட்டிவிட்டு என் இடத்தில் இருந்தேன். அமைதி கலைந்து குழம்பி இருந்த நிலைமை. குருவிகளும் பீதி கலைந்து அந்த இடத்தில் திரும்பக் கூடச் சிறிது நேரம் பிடித்தது. என் கண்கள் குருவிகளைப் பார்ப்பதைவிட வான வெளியைப் பார்ப்பதிலேயே அதிகக் கவனம் செலுத்தின. திடீர் திடீரெனக் காகாசுரனின் சப்தம் கேட்கும்போது உஷாராகி அவ்வரக்கனை விரட்டுவதில் ஈடுபட்டிருப்பேன். இப்படி எத்தனை தரம்!

காகத்தின் வாயில் குஞ்சு கதறும் காட்சியைக் கற்பனை செய்து பார்த்தபோது மயிர்க்கூச் செறிந்தது. அதன் சாவுக்கு நான் காரணமாக இருப்பேனோ என்ற பயத்தில் என் பொறுப்பு அதிகரித்துவிட்டது. குஞ்சு தாயிடம் உயிரோடு சேரும் வரை சத்துரு ஜந்து விடம் அகப்படாமல் காப்பாற்ற வேண்டியது என் கடமை எனப் பட்டது. சற்று முன் குஞ்சை வைத்து விளையாடும் போது இருந்த என் மன நிலை என்ன? இப்போது படும் வேதனை என்ன?

'குஞ்சின் வழிக்கு நீ போயிருக்கக்கூடாது' என்று ஒருபுறம் இடித்துக் காட்டியது மனசு. மறுபுறம், 'ஒரு சின்னக் குஞ்சுக்காக எந்த முட்டாளாவது

இவ்வளவு வேதனைப்படுவானா? உன்னைப்போல் பைத்தியம் ஒருவரும் இல்லை' என்று கேலி செய்தது.

எது முட்டாள்தனம்? நான் குஞ்சைப் பிடித்ததா அல்லது குஞ்சுக்காக இப்போது கவலைப்படுவதா? அல்லது இரண்டுந்தானா? எனக்கு ஒன்றும் புரியவில்லை.

மறுபடியும் தாய்க் குருவி கிளையில் போய் உட்கார்ந்தது. குஞ்சுக்கும் அதற்கும் இடையே கீற்று மறைவுதான். குருவிகள் அந்த இடத்தை விட்டு நகராததால் குஞ்சின் இடத்தைக் குறிப்பாகக் கண்டு விட்டன என்று தீர்மானமாகத் தெரிந்தது. என் மனக் கிளர்ச்சி அதிகரித்தது. இன்னும் இரண்டு தத்துகள் கீற்று இடுக்குகள் வழியே வாய்க் குருவி தத்திவிட்டால் குஞ்சைத் தொட்டுவிடும். என் பாரமும் நீங்கிவிடும். அதன் சாவுக்கு நான் காரணமாக இருக்கமாட்டேன்.

ஆனால் தாய்க் குருவி உடனே உள்ளே போகவில்லை. தயங்கி அமைதியாக வெளியே இருந்து மெதுவாகக் கிரீச்சிட்டது. ஆண் குருவியும் வந்து சேர்ந்து கொண்டது. இரண்டும் கிரீச்சிட்டன. கண் கொட்டாமல் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண் டிருந்தேன். அதே சமயம் உள்ளிருந்து குஞ்சும் கிரீச்சிட்டது பதிலுக்கு.

மறு விநாடி இரண்டு குருவிகளும் உள்ளே தத்திப் போய்விட்டன. கவலை விட்டது என்று நான் நினைக்கும் போதே திடீரென இரண்டும் மறுபடியும் வெளியே வந்துவிட்டன. எனக்குத் திடுக்கென்றது. ஆனாலும் இனிப் பயமில்லை என்ற திருப்தி. இப்படி இரண்டு மூன்று தரம். இனி என்ன செய்வதென யோசித்தன போலும்!

கூரைக்கு உட்புறத்திலே மறுபடியும் குருவிகள் போனதும் கிரீச் சப்தம் பலமாகக் கேட்டது. குஞ்சு உயிர் தப்பிய சந்தோஷத்தைத் தன் பாஷையில் காட்டிக் கொண்டதோ என்னவோ! வியப்புடன் கூர்ந்து பார்த்தேன். பெரிய குருவிகள் இரண்டும், குஞ்சின் சிறு சிறகுகளை மூக்கால் கொத்தி, கூரை இடுக்கு ஒன்றினுள்ளே இழுத்துப் போய்க்கொண்டிருந்தன. வெகு நேரமாக மூச்சு விடாததுபோல், ஒரு நீண்ட பெருமூச்சு என் ஹிருதயத்திலிருந்து கிளம்பியது.

# பாத்தியதை

## 1

"அண்ணா, இன்னும் எத்தனை மையில் தூரம் இருக்கிறது பட்டணம்?"

"கையில் 'கெய்டை' வைத்துக்கொண்டு என்னையா கேட்கிறாய்?"

"இல்லை, அண்ணா! நீ கொடுத்த பக்கம் தவறி விட்டது. புரட்டினால் புதிசு புதிசா எதெல்லாமோ வருகிறது. எடுத்துக் கொடேன்" என்று கெஞ்சுதலாக என் பக்கம் 'கெய்டை' நீட்டினாள் ஜானகி. பக்கத்தையும் எடுத்துக் கொடுத்து, சிறு குழந்தைகளுக்கு மணி பார்க்கக் கற்றுக்கொடுப்பது போல், 'கெய்ட்' பார்க்கச் சொல்லிக் கொடுத்தேன்.

ஜானகியை முதல் முதலாகப் புருஷன் வீட்டுக்கு அழைத்துச் சென்றுகொண் டிருந்தேன். புறப்பட்ட இடத்திலிருந்து எழும்பூர் வரையில் உள்ள எல்லா ஸ்டேஷன்களையும் பார்த்துக்கொண்டு வரும் ஸ்வாரஸ்யத்தில் ஜானகி ஈடுபட்டிருந்தாள். முதல் முதல் செய்யும் நீண்ட தூரத்துப் பிரயாணத்தின் உற்சாகம் அவளுக்கு அதிகம் இருந்தது.

எனக்கும் தூக்கம் வராமல், ஜன்னல் கதவுக்கு வெளியே விளிம்பில் முகத்தை அமிழ்த்திக்கொண்டு, எதிரே தோன்றிய இருள் சித்திரத்தைப் பார்த்துக்

கொண்டிருந்தேன். கவிந்த இருளில் கண் ஒளியே இருளடைந்தது. குளிர்ந்த காற்று முகத்தில் குத்தி மூச்சுத் தடுமாற வைத்தது. வந்து போய்க்கொண் டிருந்த ஸ்டேஷன்களெல்லாம் ஜானகியின் மனத்தில் 'தாக்கல்'.

நான் ரொம்ப நேரமாக மௌனமாய் இருந் திருப்பேன்போல் இருக்கிறது. ஜானகி தன் ஜன்னலுக்கு வெளியே தலை நீட்டி மௌனத்தைப் போக்கினாள்; "என்ன அண்ணா, யோசனை பிரமாதமாக? பேசவே யில்லையே! மன்னி ஞாபகம்—" என்று குறும்புச் சிரிப்புக் கலந்த குரலில் கேட்டாள்.

"ஆமாம். நீ ராஜம் ஞாபகமாக இருப்பதுபோல்" என்று பளிச்சென்று சொல்லிவிட்டேன்.

ஜானகியின் புருவம் சுருங்கி உதடு பிதுங்கியது.

"போ அண்ணா!" என்று வெடுக்கென விழுந்து, நத்தை போல் தலையை உள்ளே இழுத்துக்கொண்டு, தன் இடத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள். அடுத்த க்ஷணம் அதை மறந்துவிட்டு, "ஊதக் காற்று அடிக்கிறது; கதவை மூடிவிடு" என்றாள்.

சிரித்துக்கொண்டே நான் ஜன்னலை மூடினேன். "ஜானகி! மன்னி ஞாபகமா என்று கேட்டாயே, அதில்லை...." என்று இழுத்தேன்.

"பின்னே வேலையைப்பற்றியா?"

"இல்லை, உன்னைப்பற்றித்தான்."

"என்னைப்பற்றியா?" என்று ஜானகி ஆச்சரியப் பட்டுக் கேட்டாள். நான், "ஆம்" என்று தலையை அசைத்தேன்.

"அங்கச்சியைப் பிரியணுமே என்று இருக்கோ?"

பாதி உண்மையை வெளிப்படுத்தி விட்டது ஜானகியின் அந்தச் சூக்ஷ்மக் கேள்வி.

"அது ஒரு காரணம். இன்னும் ஒன்று: புருஷன் வீட்டில் நீ எவ்வளவு சமத்தாக இருக்கப் போகிறாயோ என்பது."

ஜானகி சிறிது கோபங் கொள்ளுகின்ற பாவனையைக் காட்டினாள். "பார்த்தாயா, எனக்கு அசட்டுப் பட்டம் கட்டுகிறாயே!" என்று கேட்டாள்.

"அதல்ல, ஜானகி. நீ நம்ம வீட்டில் சமத்தாக இருப்பதற்கும் புருஷன் வீட்டில் இருப்பதற்கும் வித்தியாசம் எவ்வளவோ உண்டு."

"எப்படி?" என்று கேட்டாள் ஜானகி.

"நம் வீட்டில் உன் குணம் எல்லோருக்கும் தெரியும். அனுசரித்துப் போவார்கள். அங்கேயோ புது உறவுக்காரர்களிடம் நீ அனுசரித்துப் போக வேண்டும். அது கொஞ்சங் கஷ்டந்தானே?" என்று விளக்கினேன்.

ஜானகி கொஞ்சம் யோசனை செய்தாள். நான் சொன்னது அவளுக்குச் சரியாகப் பட்டது. "அண்ணா, நான் என்ன சின்னக் குழந்தையா இன்னும்? இது தெரியாதா?" என்று அலக்ஷியமாகவும், அனுபவமான பெண்ணின் கர்வத்துடனும் கூறினாள் — சாந்தி ஆகி ஒரு வாரத்தில் புருஷன் வீடு போகும் பெண்!

நான் சிரித்து விட்டேன். அது ஏளனமாகப் பட்டது ஜானகிக்கு. "நீயே பாரு. நான் எவ்வளவு சமத்தாக இருக்கப் போகிறேன், பாரேன்!" என்று கடகடவென்று வார்த்தைகளை உதிர்த்தாள், கூடை திறந்து புஷ்பங்கள் உதிர்வது போல.

"குருடனுக்குக் கண்தானே வேண்டும்!" என்பது தான் அதற்கு என் சுருக்கமான பதில்.

ஜங்ஷனுக்குள் வண்டி ஒய்ந்து வந்து நின்றது. "திருச்சிராப்பள்ளி!" என்று ஜன்னலுக்குத் தாவி ஓடினாள். ஜன்னல் கதவுகள் கீழே விழவும் மின்சார விளக்குகள் கண்ணைப் பறித்தன. பலவிதச் சப்தங்கள் உருப்படி இல்லாமல் காதுகளில் ஒரே சமயத்தில் தாக்கின. ஜானகி உற்சாகத்தில் இடுப்பு வரை ஜன்னலுக்கு வெளியே நீட்டி, செயற்கை விநோதங்களை ரஸித்து, என்னையும் அதில் ஈடுபட இழுத்தாள்—முந்திய சம்பாஷணையை முழுதும் மறந்துவிட்டு. என் தேகம் ஈடுபட்டதே தவிர மனசு மறுத்து விட்டது.

## 2

"நான் என்ன சின்னக் குழந்தையா?" என்ற வார்த்தைகளைத் திரும்பத் திரும்ப மனசு ஞாபகப் படுத்திக்கொண்டிருந்தது. கொஞ்ச நேரத்திற்கெல்லாம் ஸ்டேஷனை விட்டுப் புறப்பட்ட ரெயில் இருட்டில் வகிடு எடுத்துக்கொண்டு சென்றது. அதே சமயம் இருள்நுரையை அலையடித்து ஒதுக்கிக் கொண்டு நிலவொளி ஆகாசத்தில் பரவ ஆரம்பித்தது. என் மனத்திலும் பழைய நினைவுகள் பரவலாயின.

அன்று வரை ஜானகியோடு கேலி, வம்பு செய்வதே என் பொழுது போக்காக இருந்திருக்கிறது. அவளை அழவிட்டு ஒன்றுக்குப் பத்தாக வார்த்தைகள் வாங்கிக் கட்டிக்கொள்வதில் எனக்குப் பிரியம் அதிகம்.

ஒரு நாள் சம்பவம்: சமையல் பொறுப்பு அவளிடம் விடப்பட்டிருந்தது. சாதம் பதமாகும் சமயம். வாசலில்

வம்பு வளர்த்துக்கொண்டிருந்த எங்களோடு பேச்சு ஸ்வாரஸ்யத்தில் ஈடுபட்டிருந்தாள், சமையல் ஞாபகம் கொஞ்சமும் இல்லாமல். எத்தனையோ தரம் எச்சரித்திருந்தும் மறந்து விட்டாள்.

யாரோ எனக்கு ஞாபக மூட்டி விட்டார்கள். ஜானகி பயத்துடன் சிரித்துக்கொண்டு உள்ளே ஓடி விட்டாள். நான் கூட வருவதைக் கண்டதும், "தப்பு, தப்பு, இனிமேல் இல்லை" என்று கெஞ்சினாள். கண்டிக்கும் பாவனையில், "அறையட்டுமா?" என்று தலைக்குமேல் கையை ஓங்கி விட்டேன். அடிக்கும் உத்தேசம் அப்போது இல்லை எனக்கு.

கையை ஓங்கியது அவளுக்குத் துடுக்காகப் பட்டது போல் இருக்கிறது. தற்காப்புக்காக உயர்ந்த கை தணிந்தது. தொட்டு அடிக்க மாட்டேன் என்ற தைரியம் வந்தது. "இதோ, எனக்குக் கல்யாணம் ஆச்சு. தொடாதே!" என்று ஜயப் பார்வையுடன் எதிர்த்தாள்.

"ஹூம்! அப்படி வேறு நினைப்பா?" என்று சொல்லிக்கொண்டே லேசாக இரண்டுதரம் தட்டி விட்டேன். அவள் வார்த்தைகளில் தொனித்த அந்த அந்நிய பாவம் எனக்குச் சரியாகப் படவில்லை. இத்தனை நாள் இருந்த உரிமை திடீரென இன்று இல்லையா என்று பட்டது.

ஜானகியின் கண்களில் ரோஷத்தினால் நீர் கூடி விட்டது. "இன்னும் அடியேன்!" என்று கசந்து கூறிக்கொண்டே கீழே உட்கார்ந்து அணைந்த அடுப்பில் ஊதத் தொடங்கினாள்.

என் அதிகாரத்தைச் செலுத்திவிட்டேன் என்று ஒருபுறம் திருப்தி. ஜானகி அதை விளையாட்டாக

எடுத்துக் கொள்ளாமல் கண் கலங்கியதைப் பார்த்த பின் என் மனசும் கலங்கிவிட்டது. மௌனமாக நின்று அவள் வேலையைக் கொஞ்சம் கவனித்தேன். 'ஏன் அடித்தோம்?' என்று தோன்றியது.

ஜானகி வைத்திருந்த கைக்கரண்டி பலமாகப் பாத்திரத்தடியில் பட்டது. அது அவள் மன நிலையைக் காட்டியது. "மெள்ளக் கிண்டு. பாத்திரம் ஓட்டையாகப் போகிறது!" என்று கேலியாக அவள் கோபத்தை மாற்றப் பேசினேன். "நீ என்கூடப் பேசவேண்டாம், போ!" என்று ஜானகி கடுமையாக எச்சரித்தாள்.

"பின்னே ஏன் என்னிடம் சம்பிரதாயம் போட்டாய்?"

பதில் பேசவில்லை ஜானகி. இரண்டு உசிதமான வார்த்தைகள் பெறுமல் அந்த இடம் விட்டுப் போக மனம் வரவில்லை. "அடேயப்பா, பேசமாட்டாயோ?" என்று கேட்டேன், மனக் கலக்கத்தை மறைத்துக் கொண்டு. முரட்டுச் செய்கை மனத்தில் உறுத்தியது.

அதற்கும் பதில் இல்லை. அவளைச் சமாதானப் படுத்தவும் வேறு வழி தெரியவில்லை. கோபம் வந்தது. "சரி, எனக்கும் வைராக்கியம் செலுத்தத் தெரியும்!" என்று சொல்லிக் கொண்டே சட்டெனத் திரும்பிப் புறப்பட்டேன்.

"எப்பவும் பேச மாட்டேன்னு சொன்னேனா?" என்று உடனே வாய் திறந்தாள் ஜானகி, எங்கே இனிப் பேசாமல் இருந்துவிடுவேனோ என்ற பயத்தில். நான் திரும்பிப் பார்க்கவும் அவள் திரும்பவும் சரியாக இருந்தது. "கோபம் ஓடிப் போச்சு" என்று பலமாகச் சிரித்துக் கத்தினேன். லேசாகச் சிரித்துவிட்டு, ஜானகி

முகத்தைத் திருப்பிக்கொண்டாள். என் அதிகார கர்வத்தை அவள் அன்பு வார்த்தைகள் மட்டம் தட்டி விட்டன.

3

ஜானகியின் சிரிப்புக் கலந்த விளையாட்டு வீட்டில் சதா எதிரொலித்துக்கொண் டிருக்கும். அவள் கல கலத்த சிரிப்பு, பெண்மையின் அடக்கத்தையும் மீறிச் செல்வதுபோல் தோன்றும். அவ்வளவு கட்டுப் பாடற்ற உற்சாகம்!

"சாயந்திரத்திற்குள் பத்துப் பட்டை பஞ்சு பன்னித் தரவேண்டும், ஜானகி!" என்பேன். "என்னாலே முடியாது!" என்று கண்டிப்பாக ஜானகி மறுத்து விடுவாள். தப்பி ஓட வழி பார்ப்பாள். நான் வழி மறிப்பேன். சுதந்திரத்தைத் தடை செய்வது அவளுக்குக் கோப மூட்டும். "அடித்தாலும் மாட்டேன்!" என்று பிடிவாத மாகக் கீழே உட்கார்ந்து விடுவாள். என் முரட்டு அதிகார ஆயுதம் பலஹீனப்பட்டுவிடும். மனசு சங் கடத்தில் ஆழும்.

"சரி, நானே பஞ்சு பன்னிக் கொள்கிறேன்" என்று வெறுத்துக் கூறிவிட்டுத் தனியே உட்காருவேன். கொஞ்ச நேரம் ஜானகி யோசனை செய்வாள். பலவிதம் அவள் மனசில் அலை மோதும். என் மனசு கசிவது அவளுக்குப் பொறுக்காது. கோபத்தை மாற்ற முயலு வாள், நான் முயலுவது போலவே.

மெதுவாகக் கிட்ட வருவாள். நான் தனியே பஞ்சு பன்னுவது கண்களில் உறுத்தும். "ஐந்து பட்டைதான் பன்னித் தருவேன்!" என்று பேரம் ஆரம்பிப்பாள்.

"ஒரு பட்டைகூட வேண்டாம்!" என்று எடுத்தெறிந்து உதாசீனமாகப் பேசுவேன்.

என் கோபத்தைத் தணிக்க உறுதி கொண்ட மனசு அதை லக்ஷியம் செய்யாது. சட்டென்று ஒப்புக்கொள்ளவும் மாட்டாள். என் பிடிவாதத்தைக் கண்டு தொனி கொஞ்சம் குறையும். தாவி உட்கார்ந்து பஞ்சைக் கையில் எடுத்துக் கொண்டு, "சின்னப்பட்டையாகப் பத்துப் பன்னுவேன். பெரிய பட்டை போடக் கூடாது" என்று மறுபடியும் பேரம்.

"உன் இஷ்டம்; சம்மதமானால் செய்."

"பார்த்தாயா? ஒரு வழிக்கும் வரமாட்டேன் என்கிறாய்" என்று சிணுங்கிக் குறும்பாக முகத்தைப் பார்ப்பாள். நான் சிரிப்பை மறைக்க முயலுவேன்.

"பெரிய பட்டை போட்டால் உனக்குத்தானே கஷ்டம்! நன்றாக நூற்க வராது. எனக்கென்ன!" என்று என்னைக் கட்டுப்படுத்திவிட்ட வெற்றியுடன் பார்ப்பாள்.

"பின் ஏன் பேரம் பேசுகிறாய்?"

இருவரும் போட்டி போட்டுப் பஞ்சு பன்ன ஆரம்பிப்போம். "அவன்தான் உன்னைச் சதா வைகிறானே, அவனுக்குப் போய்ப் பஞ்சு பன்னிக்கொண்டு இருக்கிறாயே!" என்று வீட்டில் யாராவது கேட்டால், "பின்னே வேறு யார் பன்னித் தருவார்கள், நான் தரா விட்டால்? ஐயோ பாவமாய் இருக்கிறது!" என்று அனுதாபமாகவும் கேலியாகவும் சொல்வாள். இப்படி எத்தனையோ சம்பவங்கள்!

## 4

இன்று ஜானகி புருஷன் வீடு போகிறாள். சென்று போன நாட்களைப்போல் நாங்கள் இனி எப்போதும்

சேர்ந்து இருக்க முடியாது. அந்தப் பாத்தியதை புதிதாக முளைத்த கணவன் என்பவனுக்கு மாற்றப்பட்டு விட்டது.

ஒரே கூட்டில் வளர்ந்து வந்த ஒரு தாய்க் குஞ்சு களிடையே அதுதான் முதல் பிரிவு — வேதனையின் எழுச்சி!

பதினைந்து வயது நெருங்கியும் இன்னும் அவள் பிஞ்சு மனசு முதிரவில்லை. உற்சாகத்துடன் அடித் தொண்டையிலிருந்து வார்த்தைகள் பீறிட்டுக் கிளம்பும், புருஷத் தொனியில். பாடிக்கொண்டே அலக்ஷியமாகப் பாத்திரத்தைத் தூக்கும்போது வழுக்கி உடைந்த பாத்திரங்கள் எத்தனை! "எனக்கு என்ன பேர் வாங்கித் தரப் போகிறாளோ, புருஷன் வீட்டில்!" என்று அம்மா அடிக்கடி அங்கலாய்ப்பாள்.

இந்த விளையாட்டு மனசு எப்படிக் கட்டுப்படப் போகிறது என்பதைப்பற்றித்தான் என் மன வெழுச்சி. நான் ரஸித்தேன், அவள் விளையாட்டையும் கேலியையும். துடுக்குப் பேச்சைப் பொருட்படுத்த மாட்டேன். புருஷன் வீட்டில்....? அவன் எப்படிப்பட்டவனோ? துடுக்கையும் விளையாட்டையும் தப்பாக அர்த்தம் செய்துகொண்டு விட்டானானால்? இந்த நினைப்பிலேயே கண்ணயர்ந்து விட்டேன், கதவில் சாய்ந்துகொண்டு.

"விடிந்து போச்சு. எழும்பூர், அண்ணா!" என்று ஜானகி எழுப்பினாள்.

மெல்லிய திரை மூடி மங்கலாகத் தெரியும் ஓவியம் போல் இருந்தது வானவெளி. நீலமும் கருமையும் காணாத சாம்பல் நிற ஒளி எங்கும் பாவி நின்றது. கோதியிராத ஜானகியின் தலையும், நித்திரை காணமல்

புகைபட்டுக் கறுத்துச் சிறிக் கிடந்த அவள் முகமும் அந்த மங்கலான சித்திரத்துக்கு உவமை தந்தன. ஜானகி முகம் கழுவிப் பளிச்சென்று ஆனபோது வான வெளியும் சாம்பல் நிறம் மாறிச் சூரிய ஒளியில் பிரகாசம் அடைந்தது. ஜானகியைப்பற்றிய நினைப்புத் தான் என் மனத்தில் இடைவிடாமல் சுழன்றுகொண்டிருந்தது.

# மார்கழி மலர்

சூரியன் இன்னும் முழுதும் உதிக்கவில்லை. மார்கழிப் பனியின் மூட்டம் இன்னும் அடர்ந்து பரவிக் கிடந்தது. தெரு முழுவதும் பனிபெய்து தரை. ஈரம் அடைந்து ஜலம் தெளித்தது போல் இருந்தது. கிராமாந்தரக் குழந்தைகளுக்கு உள்ள இயல்பில் சச்சி வெகு சீக்கிரம் படுக்கையிலிருந்து எழுந்துவிட்டாள். தூக்கக் கண்களைத் துடைத்துக் கொண்டு பனிக்குப் பாதுகாப்பாகப் பாவாடை முனையைத் தோள்மீது போர்த்திக்கொண்டு வாசற் பக்கத்துக்கு வழக்கம்போல் வந்தாள். இரட்டை வரிசையாக அமைந்த சிறு தெருவின் இரண்டு கோடிகளையும் அவள் ஒரு தடவை பார்த்ததும் அவளுக்கு வியப்பு ஏற்பட்டது.

ஒவ்வொரு வீட்டு வாசலிலும் விதவிதமான கோலங்கள் போட்டுப் பூசினி, பரங்கி மலர்களை வெகு நேர்த்தியாகவும் ஒழுங்காகவும் பரப்பி இருந்தார்கள். அந்தக் காட்சி குழந்தை உள்ளத்தைப் பறித்தது. அப்படியே பார்வையைத் தன் வாசலுக்குத் திருப்பினாள். புஷ்ப அலங்காரம் ஒன்றும் இல்லாமல் வெறும் கோலத்துடன் இருந்த வாசல்தான் அவள் கண்களில் உறுத்தி மனத்தில் எழுச்சியை உண்டாக்கியது.

ஸரஸ்வதி என்று அவளுக்கு அம்மா அழகான பெயர் இட்டிருந்தாள். ஆனால் எளிமை அவளுக்குச்

சச்சி என்ற ஊர்ப்பெயரைக் கொடுத்திருந்தது. வீட்டு வாசலில் நின்றுகொண் டிருந்தபடியே முற்றத்தில் பாத்திரம் துலக்கிக்கொண் டிருந்த தன் தாய்க்கு வாசலில் தான் கண்ட அதிசயத்தைப் பலத்த குரலில் வர்ணித்தாள்.

"அம்மா! பூ அம்மா! ஒவ்வொரு வீட்டு வாசலிலும் நிறைய நிறைய வச்சிருக்கா அம்மா! பெரிசு பெரிசாப் பூ, அம்மா" என்று கையளவு காட்டிக் கத்தினாள்.

குழந்தையின் வார்த்தைகள் முற்றத்தில் இருந்த தாயின் காதுகளில் தெளிவாக விழுந்தன. அங்கிருந்தே சச்சிக்குப் பதில் கூறினாள்: "இப்போது மார்கழி மாசம் இல்லையா? ஊரெல்லாம் வருஷா வருஷம் பூமாதேவிக்கு இப்படித்தான் அலங்காரம் பண்ணுவா. கோலம் போட்டு, பூவச்சு....."

அத்தனை வீட்டு வாசல்களும் புஷ்பங்களோடு கொஞ்சிக்கொண்டு இருந்தபோது தன் வாசல் வெறிச் சென்று இருந்தது சச்சிக்கு என்னவோபோல் இருந்தது. உள்ளே போய் அம்மாவைப் பூ வைக்கச் சொல்லவேண்டும் என்ற ஆசை வேகமாகத் தூண்டியது. "ஏன் அம்மா, நம்ம வாசலில் ஒன்றும் வைக்கல்லே நீ?" என்று ஏமாற்றமும், ஆசையும் கலந்த குரலில் கேட்டுக் கொண்டே கால்கள் தரையில் பாவாமல் அம்மாவை நோக்கி ஓடிவந்தாள்.

அம்மா பதில் கூறினாள்: "அவா வீடுகளில் பூக் கொண்டுவரப் பண்ணையாள் உண்டு. தோட்டங்கள் நிறைய இருக்கு; பறித்துக்கொண்டு வந்து வைக்கிறு. நமக்கு யார் இருக்கா? என்ன இருக்கு, ஸரஸ்வதி?" என்று தன் ஏழைமையை விளக்கிக் கூறியபோது,

தாயின் குரல் வரவரக் கம்மியது. அம்மா ஏதோ வருத்தப் படுவது போன்ற எண்ணம் குழந்தையின் மனத்தில் பட்டது. நெருங்கிச் சென்று அம்மாவின் தோள்களில் கையைக் கொடுத்துக் கழுத்தைக் கட்டிக்கொண்டு இரக்க மாக முகத்தைப் பார்த்துக்கொண்டு, "அம்மா, வாசல்லெ பூ வருமோ இல்லையோ? வந்தால் கூப்பிடட்டுமா? வாங்கி வைக்கிறயா?" என்று கொஞ்சிக் குழறிக் கேட்டாள். பூ ஜோடிப்பும் அதன் வர்ணங்களும் அவ்வளவு அவள் உள்ளத்தைக் கவர்ந்திருந்தன. குழந்தை கொஞ்சிய கொஞ்சல் தாயின் ஹிருதயத்தைத் தொட்டுவிட்டது.

'குழந்தையின் இந்தச் சிறிய ஆசையைக்கூடப் பூர்த்திசெய்ய முடியாதா?' என்று ஒரு விநாடி யோசித் தாள். "சரி, ஸரஸ்வதி. வாசல்லே போய்பாரு. யாராவது பூசினிப்பூ வித்துண்டு போனுல் கூப்பிடு; வாங்கி நம்ம ஆத்திலும் வைக்கலாம்" என்று போக்குச் சொல்லி அனுப்பினுள். கிராமத்தில் அப்படி எங்கே பூ விற்றுக்கொண்டு போகப் போகிறுர்கள் என்பது மரகதத் தம்மாளின் எண்ணம்.

குழந்தை சச்சி வாசலுக்குக் குதி போட்டுக்கொண்டு ஓடிப்போய்விட்டாள், பூக்காரன் வருகையை எதிர் பார்த்து.

அவள் போகவும் மரகதத்தம்மாள் மனத்தில் தன் வறுமை நிலையைப்பற்றிய சிந்தனை எழுந்தது. தன்னை யும், குழந்தையையும் அனுதரவாக விட்டு விட்டு அகால மரணமடைந்த கணவனது ஞாபகம் வந்தது. கிராமத்தில் சில பெரிய வீடுகளுக்கு ஆற்று ஜலம் கொண்டு வந்து கொடுத்து, இதரச் சில்லறை ஏவல் வேலைகள் செய்து

கொடுத்துத் தன் வயிற்றுப் பிழைப்பு நடத்தும் வாழ்க்கையை நினைத்து அங்கலாய்த்துக் கொண்டாள். குழந்தைக்குப் போக்குக் காட்டி விட்டாள். ஆனால் வாசலில் பூ வந்துவிட்டால் வாங்குவதற்கு ஒரு சல்லி கூட அன்று இல்லையே, என்ன செய்வது என்று மனத்தில் எண்ணித் தவித்துக்கொண்டிருந்தாள்.

அந்தத் தவிப்பில் இருக்கும்போதே, "அம்மா! அம்மா! பூக்காரன் வரான். சீக்கிரம் வா அம்மா. அடே பூக்காரா!" என்று கைதட்டி உற்சாகத்துடன் குதிக்கும் குழந்தையின் குரல் காதுகளில் விழுந்தது.

ஒரு பெருமூச்சுவிட்டுத் தன் கைகளை அலம்பி முன்றானையில் துடைத்துக்கொண்டே மரகதத்தம்மாள் வாசலுக்கு வந்தாள். அதற்குள் பூக்காரனும், "பூசினிப் பூ!" என்று கூவிக்கொண்டே திண்ணையில் கூடையை இறக்கி மூடி இருந்த ஈரத்துணியை விலக்கினான். காலைச் சூரியனில் செந்நிறப் பூசினி மலர்கள் விரிவான இதழ்களுடன் சச்சியின் கண்களில் ஒளிவீசிப் பிரதிபலித்தன. அவளே கூடையிலிருந்து புஷ்பங்களை ஆத்திரத்துடன் எடுக்கப் போனாள். இதழ்களைச் சிதறச் செய்யாமல் அவளை அடக்கித் தடுத்துப் பெரிதாகவும் நல்லதாகவும் உள்ள மூன்று புஷ்பங்களைக் கூடையிலிருந்து மரகதத் தம்மாள் எடுத்தாள். பூரணமாக மலர்ந்திருந்த அந்த மலர்களைப் போலவே சச்சியின் முகமும் மகிழ்ச்சியால் மலர்ந்து விளங்கியது.

"அடேயப்பா பூக்காரா! நாளைக்குக்கூட மூன்று பூ வேணும். மொத்தம் ஆறு பூவுக்கும் என்ன விலை? சேர்த்து வாங்கிக்கொள்ளேன்" என்று சாதுரியமாகக் கேட்டாள் மரகதத்தம்மாள்.

"அம்மா, இந்த மூன்று பூவுக்கும் இப்போதே துட்டுக் கொடுத்துடுங்க. காலணுத்தான்! இதுக்குக் கூடவா கடனுங்க? நாளைக்கு இந்தப் பக்கம் வருவேனே வரமாட்டேனே சொல்லமுடியாதுங்க" என்று பூக்காரன் கறாராகப் பேசினன்.

"இல்லையப்பா, குழந்தை கேட்குது. நாளைக்குக் கட்டாயம் வாங்கிக்கொள்ளேன்" என்று மரகதத் தம்மாள் எவ்வளவோ நயமாகவும் கெஞ்சிக்கேட்டும், "காலையில் போணி ஆகாமல் கடன் கிடையாது!" என்று கண்டிப்பாகக் கூறிக்கொண்டே கூடையைத் தூக்கப்போனன்.

மரகதத்தம்மாளின் முகம் அப்போது இறங்கி விட்டது. ஸரஸ்வதியின் கண்களும் ஏமாற்றமடைந்து அம்மாவையே பார்த்துக்கொண் டிருந்தன. என்ன செய்யப் போகிருளோ என்று திடீரென்று அம்மா முன்றானையைப் பிடித்துக் கொண்டே, "பூக்காரன் போப்போருன், அம்மா. வாங்கு அம்மா" என்று இழுத்துக் கெஞ்சினள். அம்மா மனநிலை அந்தச் சிறு உள்ளத்துக்கு எப்படிப் புரியும்?

மரகதத்தம்மாள் ஒரு விநாடி ஆலோசனை செய்தாள். பூக்காரன் கூடையைத் தூக்குவதற்குள் சரேலென்று அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. பூக்காரனைக் கொஞ்சம் பொறுக்கச் சொல்லிவிட்டுப் படி இறங்கி அடுத்த வீட்டுப் படியேறி உள்ளே சென்ருள். தனது லஜ்ஜையைக் கட்டி வைத்துவிட்டு அந்த வீட்டுத் தங்கம்மாளைக் கூப்பிட்டு, "பூ வந்திருக்கு வாசல்லே. சச்சி என்னை நச்சரிக்கிருள். காலணு இருந்தால் கொடுங்கோ. நாளைக்குத் தந்து விடுகிறேன். காலையில்

அவன் கடன் தரமாட்டேன் என்கிறான்'' என்று வாய் விட்டுக் கேட்டாள்.

''ஐயோ! மரகதம்; என்ன செய்கிறது! சில்லறையே இல்லையே. ஒரு ரூபாயாகத்தான் இருக்கும்மா'' என்று சொல்லிவிட்டு உள்ளே சமையலறைக்குப் போய் விட்டாள் தங்கம்மாள். ''ஆமாம்; வேலை என்ன இவளுக்கு! பொழுது விடிந்தால் கடன்தான், உப்பும் புளியும்; என்றைக்குத்தான் தரித்திரம் விடப்போகிறது இவளை!'' என்று சமையலறையில் முணு முணுத்துக் கொண்டது மரகதத்தம்மாள் காதில் விழுந்திருக்க முடியாது.

மரகதத்தம்மாள் ஏமாற்றத்துடன் வீடு திரும்பி ஞள். முதல் தடைக்குப் பிறகு வேறு ஒருவரிடமும் சென்று கடன் கேட்க மனம் வரவில்லை. எங்கும் இதே பதிலைத்தான் அவள் மனசு எதிர்பார்த்தது. அவளுக்கு வந்த வெறுப்பில் கசப்படைந்தாள். பூசினிப்பூக்களைத் திரும்பக் கூடையில் கொண்டு போட்டு விட்டான். சச்சியின் பார்வையிலிருந்து மறைக்க விரும்பியவன் போலவும், அவள் ஏமாற்றத்தைத் தூண்டுபவன் போலவும் பூக்காரன் புஷ்பங்களை ஈரத் துணியால் மூடிக் கூடையைத் தூக்கிக்கொண்டு கிளம்பிஞன். பூக்கள் வெயிலில் வாடாமல் இருக்க அந்த ஈரத் துணி பாது காப்பாய் இருந்தது. ஆனால் சச்சியின் முகம் வாடாமல் குளுமையாக இருக்கவைக்க மரகதத்தம்மாளால் முடிய வில்லை.

''போனல் போகிறது, ஸரஸ்வதி! நாளைக்கு வாங்கி வைப்போம். அதோ அவர்கள் வீட்டில் எல்லாம் வைக்கிறு பாரு. அதைப் பார்த்துக்கொண் டிரேன்.

நம் ஆத்தில் வைத்தது மாதிரிதானேடி, அம்மா'' என்று ஆதரவாக அணைத்துக் கூறிய தேறுதல் மொழிகள்கூட அவள் காதுகளில் படவில்லை. அவள் பார்வை அந்தப் பூக்கூடையோடேயே பிரயாணம் செய்யத் தொடங் கியது. தன் மனத்தை அந்தக் கூடையில் புஷ்பங் களுக்கு இடையில் வைத்து அனுப்பி விட்டாள்போல் இருந்தது. அல்லது கூடை இடுக்குகள் வழியாகப் புஷ்பங்கள் அவளைப் பார்த்து ஏளனமாகச் சிரித்த னவோ என்னவோ!

பூக்காரன் கூவிய குரல் தெருக்கோடி வரையில் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே சென்று கூடையோடு சேர்ந்த அவன் உருவமும் சச்சியின் பார்வையிலிருந்து பூரணமாக மறைந்து விட்டது. பூரண ஏமாற்றத்தை வெளிக்காட்டிய சச்சியின் கண்கள் அப் புறந்தான் திசை திரும்பின. வீட்டு வேலையைக் கவனிக்க அம்மா உள்ளே போய் விட்டாள். குழந்தை சச்சி மட்டும் திண்ணையில் குந்தி உட்கார்ந்துகொண் டிருந் தாள்.

சச்சியைப் போலச் சீக்கிரமே எழுந்துவிட்ட இதரக் குழந்தைகளும் தத்தம் வீட்டு வாசலில் பாட்டி, அம்மா, அத்தை போடும் கோலங்களில் சாணி உருண்டைகளை வைத்துப் பூசினி பரங்கிப் பூக்களைப்பதித்துக்கொண் டிருந்தன, தட்டான் கற்களைக் கூட்டில் பதிப்பதுபோல். ஒரு குழந்தை பூவின் காம்பை முழுதும் கிள்ளிவிடும். பூ உருண்டையில் பதியாமல் சாய்ந்துகொண்டே இருக்கும். தேவைக்கு அதிக நீளமான காம்பினால் சில சாய்ந்து போகும். பதிக்கும் வேகத்தில் சில பூக்களின் இதழ் கிழியும். உருண்டைகள் நெகிழ்ந்து போகும்

அடிக்கடி. இந்த விதமான சிறு சிறு இடைஞ்சல்களுக்கு இடையே பதித்து வைக்கப்பட்ட பூக்களைக் கண்டு குழந்தைகள் பெருமிதங்கொண் டிருந்தன. தத்தம் வீட்டில்தான் அதிகப் பூக்கள் என்று ஒன்றுக்கொன்று பீத்திக்கொள்வதைக் கேட்க வேடிக்கையாக இருக்கும்.

வாசல் வாசலாக வைக்கப்பட் டிருந்த பூக்களின் கவர்ச்சி சச்சியைத் திண்ணையில் உட்கார விடவில்லை. 'நம் வீட்டில்தான் அது வைக்கவில்லை; மற்ற வீடுகளில் வைத்திருப்பதையாவது போய்ப் பார்த்துவிட்டு வாயேன்' என்று மனசு அவளைத் தூண்டியது. மெதுவாக எழுந்து அம்மாவுக்குத் தெரியாமல் ஒதுங்கி ஒதுங்கி நடந்து கொண்டே பக்கத்து வீட்டு வாசல் பக்கம் சென்றாள்.

பக்கத்து வீட்டு வாசலில் நின்றுகொண் டிருந்த சிறுமிகள் சச்சியின் வருகையைக் கவனித்து விட்டன. "அடி அடி! சச்சி வாராள். அவள் வீட்டு வாசலிலே பூ வைக்கல்லேடி!" என்று ஒரு சிறுமி தன் சகாக்களிடம் கூறினாள். இந்தச் சொற்கள் சச்சியின் காதைத் தைத்தன.

"அவ இங்கேயிருந்து ஏதாவது பூவைத்தாண்டி திருட வந்திருப்பாள். திருட்டுப் பிணம்டி அது!" என்றாள் மற்றொரு சிறுமி வாய்த்துடுக்காக.

"ஆமடி, ஜாக்கிரதையாகத்தான் இருக்கணும்" என்று மற்றொரு சிறுமி உஷார்ப் படுத்தினாள். இந்தச் சம்பாஷணைகளையெல்லாம் கேட்டுக்கொண்டே சச்சி அந்த இடத்தில் கோலத்தின் விளிம்பில் போய் நின்று பார்த்துக்கொண் டிருந்தாள்.

கீழே பாரிஜாதக்கொடி மாதிரி கோலம் போட்டு அதன்மீது பூசினி, பரங்கி, ஊமத்தம்பூ இவ்வாறு

பதினைந்து புஷ்பங்கள் வெகு அழகாக மூலைக்கு மூலையும், நேருக்கு நேராயும் வைக்கப்பட்டிருந்தன. வெண்ணிறக் கோட்டுக் கோலப்பொடிகளைத் தின்ன எறும்புகள் சாரி சாரியாகப் போய்க்கொண் டிருந்தன. பூக்களின் வர்ணத்தில் ஈடுபட்ட ஈக்கள் தேனை எதிர் பார்த்து ஒவ்வொரு பூவிலும் நிலையாக உட்காராமல் பூவுக்குப் பூ மாறிமாறிப் பறந்துகொண் டிருந்தன. வானில் கிளம்பிய சூரியனது பொன்னிறத்துடன் போட்டி போட்டுக்கொண் டிருந்தது பூக்களின் பொன்னிறம்.

சச்சி அவைகளையே உற்றுப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தாள். சரேலென்று கண்களைத் திருப்பி அங்கிருந்தபடியே தன் வீட்டுவாசலையும் பார்த்தாள். மறுபடியும் வீட்டுக்கு வீடு வைக்கப்பட்டிருந்த பூக்களை ஒரு முறை விறைத்துப் பார்த்தாள். 'எடு என்னை' என்று அவள் காலருகில் அகன்ற இதழ்களை விரித்து நின்ற ஒரு புஷ்பம் அவள் காதோடு பேசி ஜாடை காட்டுவதுபோல் இருந்தது. அவள் மனம் அவற்றின் மீது லயித்துப்போயிருந்த நிலைமையில் இதரச் சிறுமிகள் ஏதேதோ சன்னக் குரலில் பேசிக்கொண்டு தன்னை அடிக்கடி கண்காணித்துக்கொண் டிருப்பதை அவள் கவனிக்கவில்லை.

'அடேயப்பா! இத்தனை பூக்கள் வைத்திருக்கிறதே, இந்த ஒன்றைமட்டும் நான் எடுத்துக்கொண்டால் என்ன?' என்ற திருட்டு நினைவு, சாயைபோல் அவளறி யாமல் அவள் மனத்தில் புகுந்துகொண்டது. அந்த எண்ணம் வந்தபிறகு யாரையும் குற்றம் சொல்வதற்கு இல்லை. குழந்தை உள்ளத்தில் ஆவலும் ஆசையும் கட்டுக்கு அடங்காமல் போகிறபோது செய்கையின்

நியதியையும் வரம்பையும் மறக்கும் தன்மை ஏற்பட்டு விடுகிறது. பூவின் மீதுள்ள ஆசை சிறிதுமுன் ஏற்பட்ட ஏமாற்றத்தின் உணர்ச்சி வேகம், 'அவள் திருடி' என்று சிறுமிகள் உணர்த்திய சூசனைக்குறியின் உறுத்தல் எல்லாம் சேர்ந்து அவள் அறிவையும் அமைதியையும் மறைத்து விட்டன. அதே உணர்ச்சி வேகத்தில் சச்சி திடீரென்று கீழே குனிந்தாள். பிறகு குழந்தைகள் அவளை நெருங்கிக் கையைத் தடுக்குமுன் சட்டென்று ஒரு பூவைப் பற்றி எடுத்தாள்; விர்ரென்று வீடு நோக்கித் திரும்பிப்பாராமல் ஒரே ஓட்டமாக ஓடினாள்.

அதிகதூரம் அவள் ஓடவில்லை. அதற்குள் "திருடி! திருடி!" என்று ஒரு பெண் கத்தினாள். சச்சியின் காதருகில் மற்றொரு பாவாடையின் படபடப்புச் சப்தம் லேசாகக் கேட்டது. அவள் பின்னலை, ஒரு பெண் பலமாகப் பிடித்திழுத்துவிட்டாள். முதுகில் அதே சமயம் பளீரென ஓர் அறை பலமாக விழுந்து அவளை முன்னால் தள்ளியது. அந்த வேகத்தில் கீழே கிடந்த ஒரு கல்லில் கால் தடுக்கிச் சச்சி கீழே அலங் கோலமாக விழுந்துவிட்டாள். ஆசை, ஏமாற்றம், அவமானம் இத்தனை உணர்ச்சிகளும் அடுக்கடுக்காக அலைமோதிய மனத்தோடு இருந்த சச்சி மூர்ச்சித்துப் போய்விட்டாள். கல்லில் மோதி அவள் தலையில் ஏற்பட்ட சிறு காயத்தினின்று ரத்தம் கசிந்துகொண் டிருந்தது.

சிறிதுநேரம் கழித்துச் சச்சி மூர்ச்சை தெளிந்து கண் விழித்தாள். தான் ஒரு கயிற்றுக் கட்டிலில் கிடப்பதையும் அருகே யாரோ நிற்பதையும் சச்சி சரியாகக் கவனிக்கவில்லை. அம்மாவைப் பார்த்துப் பேச

வாயெடுத்தாள். யாரோ அவள் 'திருடி'க்கொண்டு வந்த அந்தப் பூவையும் இன்னும் இரண்டு பூக்களையும் அவள் கையில், "இந்தாடி அம்மா, இந்தப் பூவுக்காக இப்படிச் செய்யலாமாடி?" என்று சொல்லிக்கொண்டே அவள் கையில் வைத்தார்கள். சச்சி கைப் பூக்களை முறைத்துப் பார்த்தாள். அவள் முகம் க்ஷணத்தில் பலவிதமாக மாறியது. அவள் வெறித்த முகத்தில் ஒருவிதக் கசப்பு ஏறியது. அவைகளைக் கூர்ந்து கவனித்துவிட்டு வீசி விட்டெறிந்தாள்.

சற்று முன் கோலங்களை அழகுபடுத்திக்கொண்டு இருந்த அந்தப் புஷ்பங்கள் வேடன் அம்படிபட்டுச் சிறகொடிந்து அலங்கோலமாக விழுந்த பக்ஷியைப் போன்று சிவந்த இதழ்கள் தாறுமாறாகக் கிழிந்து தரையில் சிதறிக்கிடந்தன.

# நொண்டிக் குழந்தை

## 1

மாலை வெயில் மங்கிக்கொண்டிருந்தது. பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிய குழந்தைகள், புஸ்தகங்களை வீசி எறிந்துவிட்டுத் தெருவில் ஒரு வீட்டுவாசல்முன் கூடி, எல்லை கடந்த உற்சாகத்துடன் தங்களுக்கு வழக்கமான கண்ணுமூச்சி விளையாட்டில் ஈடுபட்டன. திடீரென அவர்களிடையே தகராறுகளும் அபிப்பிராய பேதங்களும் முளைத்து எழுந்து மறைவது மிகவும் வேடிக்கையாக இருந்தது.

திண்ணையில் உட்கார்ந்து ஞானம் மற்றக் குழந்தைகளின் உற்சாக ஓட்டங்களில் லயித்துப்போய் ஸ்வாரஸ்யமாகப் பார்த்துக்கொண்டிருந்தான். அடுத்த திண்ணையில்தான் மீனு உட்கார்ந்து கண்களைப் பொத்திக்கொண்டிருந்தாள். குழந்தைகள் எல்லாம் பதற்றத்தில் ஒளிந்துகொள்ள இடம் தெரியாமல் தெருவில் ஓடித் தத்தளித்துக்கொண்டு இருக்கும். புது இடம் தெரியாமல் பழைய இடத்திலேயே ஒளிந்து அகப்பட்டுக்கொண்டவண்ணமாக இருக்கும். இந்தச் சமயம் ராதா; அடுத்தமுறை அலமு; மறுபடியும் ராதாவின் முறை; பிறகு ஸீதா, லக்ஷ்மி; இப்படியாகச் சட்டுச் சட்டென்று மாறிக்கொண்டே இருக்கும், திரைப்படக் காட்சிகள்போல். ஒரு குழந்தைக்கும்

சூசகமாக ஒளிந்து, அவ்வளவு சாமர்த்தியமாக அலைக் கழிக்கத் தெரியாது.

ஞானம் விளையாட்டையே பார்த்துக்கொண் டிருந் தான். அவர்களோடு கலந்து தானும் விளையாட முடிய வில்லையேயென்று அவன் குழந்தை உள்ளம் கற்பனை செய்துகொண்டு இருந்தது அந்தக் குழந்தைகளுக்கு எப்படித் தெரியும்?

விளையாட்டு ரசனையில் ஞானம் ஈடுபட் டிருந்த மனநிலையில் கையில் பிடித்துக் கன்னத்தில் பதித்துக் கொண் டிருந்த 'சிலேட்' அவனை அறியாமல் தவறி விட்டது. சமாளித்து அதைப் பிடிக்கப்போனவன் கை வீச்சுக்கு மிஞ்சிவிடவே கைகளைப் பின்னரித்துக் கொண்டான். மறு விநாடி 'சிலேட்' கீழே கிடந்தது. அவன் கைகள் 'சிலேட்'டை எட்டமுடியாமல் திண்ணை நடுவே உயர்ந்து நின்றது. அதை எப்படி எடுப்பது? பாக்கப் பரக்க விழித்துக்கொண்டே விளையாட்டுச் சிறுமிகள் இருந்த அடுத்த திண்ணைப் பக்கம் பார்வை யைத் திருப்பினான்.

'சிலேட்' விழுந்த சப்தம் கேட்ட குழந்தைகளும் அதேசமயம் அவன் பக்கம் பார்த்தன.

"யாராவது இந்தச் 'சிலேட்'டை எடுத்துக் கொடுக்க மாட்டேளா?" என்று ஞானம் அவர்களைப் பார்த்துக் கேட்டான்.

அவன் வாய்திறந்து கேட்கவும் குழந்தைகள் பயந்து போய்விட்டன. இதுவரை அவனோடு அவை பேசினது மில்லை; அவன் இருந்த பக்கமே அவை போனதும் இல்லை. ஒன்றை ஒன்று ஏதோ ஒருவித அர்த்த புஷ்டி யுடன் பார்த்துக் கொண்டன. ஒவ்வொன்றின்

முகத்திலும் பீதிக் குறிகள் கிளம்பின. தயங்கித் தயங்கிப் பின்னுக்குப் பதுங்கின. அந்தச் சமயத்துக்கு விளையாட்டு நின்று போய்விட்டது.

குழந்தைகளின் தயக்கத்தைக் கவனித்த ஞானம், "மாட்டேளாடி?" என்று 'சிலேட்'டுப் பக்கம் கைநீட்டிக் கேட்டான். அவன் பார்வை பரிதாபமாக இருந்தது.

ஆனால் இந்தக் கெஞ்சுதல்கூடக் குழந்தைகள் மனத்தைத் தொடவில்லை. சிறுமிகளின் மனம் பயத்தால் நிரம்பி இருந்தது. ஞானத்தை நெருங்குவதே ஆபத்தென்ற ஓர் எண்ணம் அக்குழந்தைகளின் மனத்தில் ஸ்திரப்பட்டு இருந்தது.

"நான் போய் எடுத்துக் கொடுக்கமாட்டேண்டி, அம்மா!" என்று இரண்டு மூன்று சிறுமிகள் நிர்த்தாக்ஷிண்யமாகக் கூறி அப்புறம் போய் விட்டனர்.

"அம்மாடி! எனக்குப் பயமாயிருக்கு" என்று ராதா கண்களை விரிய வைத்துக்கொண்டு சொன்னாள்.

திண்ணையில் உட்கார்ந்துகொண்டிருந்த மீனு இதைக் கவனியாமல் இல்லை. "ஐயோ, பாவம்! எடுக்க முடியாமல் திண்டாடுகிறது பாருடி!" என்று இடம் நகராமலே பயம் கலந்த தொனியில் இரக்கத்தோடு பேசினாள்.

அவள் வாய் அனுதாபங்கூட இரண்டொரு சிறுமிகளுக்கு அதிகமாகப் பட்டது. "போடி போ! காலைப் பாரு: (?கோரமாக இருக்கு" என்றாள் அலமு.

"ஆமாண்டி, அதன் கிட்டக்கப் போனால் எல்லோரையும் கிள்ளிவிடுகிறதாம்; பைத்தியமும் வேறே

யாண்டி!'' என்று இன்னும் ஒரு சிறுமி தன் யூகத்தைக் காட்டினாள்.

இதுதான் குழந்தைகள் ஞானத்தைப்பற்றி நினைத்திருந்ததெல்லாம்.

* * * *

ஞானம் பிறந்து ஆறு கோடைகளைப் பார்த்திருக்கிறான். ஆனாலும் அவன் இன்னும் நடை பழகவில்லை. ஏன், நிரந்தரமாகவே அந்த ஜீவன் பாதங்களைத் தரையில் ஊன்றி அடியெடுத்து வைக்க முடியாது. பிரம்ம சிருஷ்டிக்கு மாற்று ஏது? வேஷ்டி விளிம்பிற்கு மேலாக வாழைப்பூ முனைபோல் சூம்பிப் போய் எலும்பு இல்லாத சதைப் பிண்டமாகப் பாதங்கள் வெளிக்காட்டி நிற்கும் அந்தக் கோரந்தான் குழந்தை உலகத்தோடு அவனுக்குத் தொடர்பே இல்லாமற் போகும்படி செய்து விட்டது.

ஞானம் என்ற அழகான பெயர் அவனுக்கு இடப் பட்டிருந்தும் நொண்டிப் பிள்ளை என்றுதான் ஊரார் அவனைப்பற்றிப் பிரஸ்தாபித்தார்கள்.

தன் சிருஷ்டி கோரத்தின் கடுமையை அவனால் பூரணமாக உணர முடியவில்லை. இதரக் குழந்தைகள் அறிந்து வித்தியாசம் பாராட்டின!

ஓடி ஓடி விளையாடின குழந்தைகளின் விளையாட்டில் ஈடுபட்ட ஞானம் குதூகலமடைந்தான். துள்ளிக் குதிக்கும் பாதங்களைப் பார்த்துப் பரவசமடைந்து கொண்டே கண்களைத் தன் பாதத்தின் பக்கம் திருப்புவான். அவனுக்கே புரியாத ஒருவிதச் சந்தேகம், தெளிந்து நிலைக்காத ஒரு வேதனை, நிழல் போலத்

தோன்றும். அடுத்தக்ஷணம் அந்த நினைப்பு அழிந்து விளையாட்டுக் கவனம் வந்துவிடும்.

*　　*　　*　　*

ஞானத்தை விட மீனாவுக்கு ஒரு வயது அதிகம் இருக்கும்.

எட்டிநின்று ஞானத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள் மீனா. ஞானத்தின் பரிதாபமான பார்வையும், அவன் கைக்குத் திரும்பக் கிடைக்க வழி இல்லாமல் கீழே கிடந்த 'சிலேட்'டையும் மாறி மாறிப் பார்க்க ஆரம்பித்தாள். அவள் மனம் கிளர்ச்சி அடைந்தது. 'ஐயோ, பாவம், அவனால் அந்தத் திண்ணையிலிருந்து இறங்கி எப்படி அதை எடுக்க முடியும்? நடக்க முடியாதே, பாவம்!' என்ற நினைவு ஊறியது சிறுமி மீனாவுக்கு.

"பாவம், எடுத்துக் கொடுத்துடுவோம்" என்று சொல்லி முடிப்பதற்குள் குழந்தைகள் அவள்மீது சீறி விழுந்தன.

மீனா தயங்கி நின்று யோசித்தாள். அவளுக்கும் உள்ளூற ஞானத்தை நெருங்குவதற்குப் பயம். ஆனால் நொண்டிப்பிள்ளையின் கெஞ்சும் பார்வை அவள் மனத்தில் தைத்துவிட்டது. அந்தச் சில நிமிஷங்களுள் பலவிதச் சிந்தனைகள் அவள் மனத்தில் குறுக்கிட்டு ஓடின. 'எடுத்துக் கொடுப்பதா, வேண்டாமா? ஐயோ பாவம்! — கிட்டப்போனதும் ஏதாவது பண்ணி விட்டால்? — ஹூ ஹூம்; தள்ளியே நின்று கொடுத்து விட்டு வந்து விடுவோமே! இல்லாவிட்டால் திண்ணை மேல் வச்சுட்டு வந்துவிடுகிறேன்' என்றெ

நினைத்துக்கொள்வதனுல் முகக்குறி அடிக்கடி மாறிற்று. அதேசமயம் மீனுவைப் பார்த்து ஞானம் கையை அலேக் கவும், அருகில் நின்ற குழந்தைகள் அவளே, "போகாதேடி" என்றதைக் காதில்போட்டுக் கொள்ளவே இல்லே. கூட்டத்திலிருந்து விர்ரென்று பாய்ந்து ஓடினுள். பரபரப்புடன் 'சிலேட்'டை எடுத்துத் திண்ணே விளிம்பில் ஒருபக்கம் தடாலென்று வைத்துவிட்டுத் திரும்பவும் சகாக்களுடன் சேர்ந்து கொண்டாள். அவளுக்கு இருந்த பயத்தில் "மீனு! மீனு!" என்று ஞானம் கூப்பிட்டதுகூட அவள் காதில் விழவில்லே.

மீனுவின் முகத்தில் ஒரு பெரிய காரியத்தை — மற்றக் குழந்தைகள் செய்யத் தவறிய ஒரு கடமையைச் செய்துவிட்ட ஒரு கர்வம், திருப்தி இருந்தது அப்போது.

## 2

மற்றச் சிறுமிகள் அவளே ஒரு தாம் விறைத்துப் பார்த்துவிட்டு மீண்டும் விளேயாட்டில் ஈடுபட்டனர். 'சிலேட்'டைக் கையில் வாங்கிய ஞானம் மறுபடி ரசனேயில் ஈடுபட்டான். ஆனுல் அவன் பார்வை இப்போது பெரும்பாலும் மீனுவின் ஓட்டத்திலும் உருவத்திலுமே லயித்து இருந்தது.

குழந்தைகளின் மனத்தில் எந்தவிதமான உணர்ச்சியும் நிரந்தரமாகத் தங்குவதில்லே. வளர வளரத்தான் மனிதன் குரங்காகிறுன். எதிலும் தன் பிடிவாத முத்திரையைப் பார்ப்பதில் அவன் மனம் உற்சாகம் அடைகிறது. குழந்தைகள் சண்டை இட்டுக்கொள்வதும் ஒத்துப்போவதும் எவ்வளவு சுலபம்! எவ்வளவு சீக்கிரம்!

குழந்தை உலகத்துடன் ஞானத்துக்குத் தொடர்பு ஏற்படுவதற்கு மீனுதான் காரணமாக இருந்தாள், மீனுவுடன் ஞானத்துக்குப் பழக்கம் ஏற்பட அந்தச் சம்பவம் காரணமாக இருந்தது போல!

சிறுமிகள் விளையாட்டு மும்முரமாக ஆக ஞானத்தின் உற்சாகம் அதிகரித்துக்கொண் டிருந்தது. ஒளியத் தெரியாமல் தவிக்கும் குழந்தைகளுக்குப் புதிய புதிய இடங்களைக் காட்டிக்கொண் டிருந்தான். முதலில் அவன் வார்த்தைகளைக் கேட்க மறுத்த குழந்தைகள் மீனு வழிவைத்ததும் கொஞ்சம் துணிவு கொண்டன. மீனுவுக்கு அவன் காட்டிய ஒளிவிடங்களைக் கண்டு பிடிக்க முடியாமல் தவித்த மற்றக் குழந்தைகளின் பொறுமையே அவர்களை அவனோடு நெருங்கச் செய்தது. கொஞ்சங் கொஞ்சமாகக் குழந்தைகள் மனத்தில் ஞானத்தைப்பற்றிய கோர சித்திரம் அழிந்து கொண்டு வந்தது. ஞானமும் தங்களைப் போல ஒருவன் என்ற நினைப்புத் தோன்ற ஆரம்பித்தது அவர்களுக்கு.

நீண்ட சிறைவாசத்துக்குப்பின் விடுதலையான கைதியின் நிலைமையில் இருந்தான் ஞானம். தனிமையில் தத்தளித்துப் பொருமிய அவன் ஹிருதயத்தைப் பல உள்ளங்கள் தொட்டுக் கரைக்கு இழுத்தன. கட்ட விழ்த்து விடப்பட்ட அவன் உற்சாகம் பல திசைகளிலும் ஓடிப் பாய்ந்தது. போகப் போகக் குழந்தைகளின் விளையாட்டில் ஞானம் பூரணமாக ஈடுபட்டுவிட்டான். ஓடி ஒளிய யோசனை கேட்கும் குழந்தைகளுக்குப் புதுப் புது இடங்களை எத்தனை விதவிதமாகக் காட்டிக்கொண் டிருந்தான் அவன்!

அந்த நிலைமையிலும் குழந்தைகள் எட்டி நின்றுதான் அவனிடம் யோசனை கேட்கும். மீனு ஓடிவந்து, "எங்கேடா ஒளிந்துகொள்ளட்டும்?" என்று ஆவலோடு கேட்கும்போது அவளுக்கு விசேஷமான ஒளிவிடம் காட்டுவதில் அவன் எவ்வளவு குதூகலம் அடைந்தான்! அவனை அறியாமல் மீனுவிடம் அவன் மனம் தனிச் சலுகை காட்ட ஆரம்பித்துவிட்டது. மீனுதானே அவனைக் குழந்தை உலகத்திற்குள் இழுத்துவிட்டாள்?

குழந்தைகள் யோசனை கேட்கும்போதும், கண்டு பிடிக்க முடியாமல் தவிக்கும்போதும், தானே அங்கங்கே சென்று ஓடிவிளையாடுவதாக நினைத்துக்கொண்டான் ஞானம். ஓடும் குழந்தைகளுடன் அவன் ஹிருதயமும் ஓடிச்சென்று அவர்களோடேயே திரும்பிவரும். பார்க்கப்போனால் குழந்தைகள் விளையாட்டாலும் தன் யோசனைகளாலும் அடைந்த ஆனந்தத்தைப்பற்றிக்கூட அவனுக்கு அக்கறை இல்லை. சுயநலத்துடன்தான் அவன் அதில் ஈடுபட்டிருந்தான் என்றுகூடச் சொல்லலாம். அந்த விளையாட்டிலும் யோசனையிலும் அவன் சந்தோஷம் அடைந்தான். அந்தத் திருப்திதான் அவனுக்குப் பெரிதாக இருந்தது. மாயக்கண்ணன் ரூபம்போல் அவன் ஹிருதயம் பல ரூபங்களாகப் பிரிந்து அவனை மகிழச் செய்துகொண்டிருந்தது.

ஓடும் குழந்தைகளின் அத்தனை கால்களும் தன்னுடையவை போன்ற உணர்ச்சிதான் அவன் வெறி உள்ளத்தில் பதிந்து கிடந்தது. அப்போது அத்தனை கால்களும் அவனுடையனவாக இருக்கும் போது அவனுக்குக் கால்கள் இருந்தாலென்ன, இல்லாவிட்டால் தானென்ன? இத்தகைய காட்சியின் நினைப்பில் அவன் தன் மனத்தைப் பறிகொடுத்து இருந்தான்.

# 3

அன்றும் வழக்கம்போல் குழந்தைகள் விளையாட ஆரம்பித்தன. கொஞ்ச நேரந்தான் சென்றிருக்கும். அதுவரையில் அமைதியாக நடந்த விளையாட்டுத் திடீரென்று நின்றுவிட்டது. அவன் உற்சாகத்துக்கும் மகிழ்ச்சிக்கும் தடை கட்டுவதுபோல், அதுவரை கண்ணுமூச்சி பொத்திக்கொண் டிருந்த சிறுமி இனி முடியாதென மறுத்துவிட்டாள்; திண்ணையினின்று குதித்துத் தானும் ஓடி ஒளியத் தயாரானாள்.

இனி யார் பொத்துவது? ஆட்டத்தில் ஓடியாடி நேரடியாகக் கலந்துகொள்வதில் ருசிகண்ட சிறுமிகள் பொம்மைபோல் உட்கார்ந்து பொத்திக்கொண் டிருக்கத் தயாராக இல்லை. பல்லக்கு ஏற எல்லோரும் தயார்; சுமக்க மாத்திரம் தயாராக இல்லை.

ஞானத்தின் மனம் சஞ்சலப்பட்டது. விளையாட்டு நின்றது குழந்தைகள் மனத்தில்கூட அவ்வளவாகப் படவில்லை, சண்டை மும்முரத்தில். சுய நலத்துடன் வேடிக்கை பார்ப்பதில் லயித்து ஆத்ம திருப்திகொண்ட ஞானத்துக்குத்தான் உறுத்தியது; உற்சாகம் குன்றியது. ஒவ்வொரு க்ஷணமும் அவன் சாதகமான முடிவை எதிர்பார்க்கப் பார்க்க ஏமாற்றந்தான் அதிகமானது. அவன் வேண்டுகோள்களும் பயன்படவில்லை.

குழம்பிய மனத்துடன் கொஞ்சம் யோசித்தான். சரேலென்று அவன் முகம் பிரகாசத்துடன் மாறியது. "மீனு ராதா, நான் பொத்துகிறேன்; நீங்கள் ஓடி ஒளியுங்கோ!" என்று ஆசையைக் கொட்டிக் கூறிவிட்டு, அவர்கள் ஸம்மதத்தை எதிர்பார்த்து ஒவ்வொரு சிறுமியின் முகத்தையும் ஆவலுடன் நோக்கினான்.

விளையாட்டைப் பார்க்க அவன் மனசு அவ்வளவு ஆத்திரப்பட்டது. ஒவ்வொரு குழந்தையும் தன் தன் விளையாட்டை ரசித்தது. ஞானமோ அத்தனை பேர் விளையாட்டையும் ரசித்தான்.

ஆனால் பழைய பயம் இன்னும் முழுவதும் மறைந்து விடாமல் அந்தக் கோர நினைவு அந்தக் குழந்தை உள்ளங்களில் இருந்தது. அவர்கள் பார்வை அதைக் காட்டிக் கொடுத்தது. ஸம்மதிப்பதா? மறுப்பதா? அவர்களால் நிதானிக்க முடியவில்லை. பழைய கசப்பு மாறிவந்த நிலைமைக்கும், பயத்தின் சாயல் முற்றும் அழியாத நிலைமைக்கும் நடுவே கிடந்து அவை தத்தளித்தன. எல்லாக் குழந்தைகளும் மீனாவைப் பார்த்தன, அவள் தான் அந்தப் பிரச்னையைத் தீர்க்கவேண்டுமென எதிர் பார்ப்பதுபோல்.

மீனா ஞானத்தின் பக்கம் திரும்பிப் பார்த்தாள். அவன் ஆவல் கண்கள் அவளைச் சம்மதிக்கும்படி கெஞ்சுவதுபோல் இருந்தன. "நல்லதாப் போச்சு; வாங்கோடி, நித்யம் அவனே பொத்துவான்" என்று உற்சாகம் காட்டிச் சிறுமிகளை இழுத்தாள். குழந்தைகளுக்கு அரை மனசு. ஆனால் அவசியமும் அவசரமும் அவர்களை விரட்டின.

"மீனா கிட்டப் போனபோது ஒன்றுமே செய்யவில்லையே!" என்றது ஒரு குழந்தை. அடுத்தடுத்து ஒவ்வொரு குழந்தையின் வாயிலும் அபிப்பிராயத்தின் எதிரொலிகள் உண்டாயின.

மீனா முன் இழுக்க ஞானம் இருந்த திண்ணைப் பக்கம் முன்னால் காலெடுத்து வைத்தார்கள். பாதங்களின் கோரம் அவர்கள் கண்களில் பட்டது. கால்கள் பயத்துடன் மீண்டும் பின்வாங்கின.

அவர்கள் காலெடுத்து வைத்ததும், மீண்டும் பின்னரித்ததும் ஞானத்துக்கு ஒரு மாதிரியாக இருந்தன. என்ன தோன்றியதோ தெரியவில்லை, கால்களை இழுத்து வேஷ்டிக்குள் மறைத்துக் கொண்டான்; குழந்தைகளைப் பொத்துவதற்குத் தயாரானவன்போல் இருந்தான்.

"மீனு!" என்று கைநீட்டிக் கூப்பிட்டான் ஞானம். மீனு ஓடிப்போய் அவன் முன்னின்று கண்ணுமூச்சிக்குத் தயாரானுள். குழந்தைகள் பயம் அதோடு நொறுங்கிப் போய் விட்டது. நிரந்தரமாகக் கண்பொத்த ஓர் ஆள் கிடைத்துவிட்டான், அவர்களுக்கு. அவனுல் ஓடி விளையாட முடியாது. அவர்களிடையிலும் சண்டை ஏற்பட வழி இல்லை, இனி!

"கண்ணுமூச்சி ரே ரே......"

## 4

இத்தனை வருஷங்களாக ஆடி இராத விளையாட்டு அத்தனையும் ஒரே அடியாக விளையாட விரும்பினவன் போல் வெறியுடன் கண்பொத்துவதில் ஈடுபட் டிருந்தான் ஞானம். உள்ளூற மக்கிப்போய்க் கிடந்த அத்தனை உற்சாகமும் அவன் மனத்திலிருந்து வெடித்துக் கிளம்பினதுபோல் இருந்தது.

மீனுவின் ஓட்டமும் உருவமுந்தான் அவன் கவனத்தை விசேஷமாக இழுத்துச் சென்றன. அவள் ஒளியும் இடம், தப்பும்வகை இவைகளையே கண்கள் பார்த்துக்கொண் டிருக்கும். தூரத்தில் அவள் ஓடி வரும்போது ஆர்ப்பரிப்பான். அவள் தப்புவதைக் கண்டு தானே தப்பிவிட்டதுபோல் பூரிப்புக் கொள்வான்.

விளையாட்டுப்போக்கில் மீனாவிடம் அவனுக்கு ஒரு தனிப்பற்றுதல் ஏற்பட்டு விட்டது. அவனுடைய அத்தனை உற்சாகத்துக்கும் அவள்தானே காரணம்? மீனா பிடிபடாமல் இருக்க வேண்டும் என்ற கவலைதான் சதா அவனுக்கு. நடுநிலைமை வகிக்கவேண்டிய இடத்தில் பாரபக்ஷ எண்ணம் விழ ஆரம்பித்தது. ஆனால் அந்தச் சலுகையை ஆட்டத்தில் எப்படிக் காட்ட முடியும்? முடியாதே.

மீனா சேர்ந்தாற்போல் இரண்டு மூன்று தரம் பிடிபட்டுவிட்டாள். யாரையாவது பிடித்தால்தான் அவள் நிலைமை மாறும். ஓடவும் பிடிக்கவும் முடியாமல் களைத்துப்போன அவள் முகத்தை ஞானம் கவனித்தான். அவன் முகமும் கலக்கம் காட்டியது. 'ஐயோ! யாராவது அகப்பட்டுக்கொள்ளவேண்டுமே' என்று உள்ளூறத் தெருக்கோடிப் பிள்ளையாரை வேண்டிக்கொண்டான். பயனில்லை. காட்டிவிடலாமா என்ற அற்ப எண்ணங்கூட அவன் மனத்தில் ஒவ்வொரு சமயம் தோன்றிவிட்டது. ஆனால் எப்படியோ தன் ஸ்தானத்தின் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொண்டுவிட்டான்.

மீனாவும் ஒருவாறு ஒரு சிறுமியைப் பிடித்து விட்டாள்!

மறுமுறை மீனா தான் ஒளிந்துகொண் டிருந்த இடத்திலிருந்து மெதுவாக எட்டிப் பார்த்தாள். அவளைத் தேடிய சிறுமியின் கால்கள் அவளை நோக்கிப் பாய்ந்தன. மீனாவை விரட்டினாள்.

தெருக்கோடியிலிருந்து குடல் தெறிக்க ஓடிவந்தாள் மீனா. வேகத்தில் அசைந்தாடும் அவள் பின்னலுக்கு நேராக விரட்டிய சிறுமியின் நீட்டிய விரல்கள் ஓடி வந்தன.

இன்னும் சில எட்டுக்கள்தாம்! மீனு பிடிபட்டு விடுவாள்; சந்தேகமே இல்லை.

ஞானத்தின் மனசு பதைத்தது. அவள் அகப்படக் கூடாதெனத் துடித்தது. தாம் பணம் கட்டிய பந்தயக் குதிரையின் ஓட்டத்தைப் பார்த்துக்கொண்டிருப்பவர்களைப்போலத் தவித்தான்.

"மீனு! மீனு! ஓடிவா!" என்று அடித்தொண்டையிலிருந்து கத்தினன். உட்கார்ந்தவாறே கைதட்டினன். தவ்வித் தவ்வி எழுந்தான். விளையாட்டு வெறியுடன் மீனுமீதுள்ள கவலையும் கலந்தது. அவள் ஞாபகந்தான் அவன் மனசு முழுவதும். தன்னைப் பற்றிய நினைவே அவ்வளவாக இல்லை.

மீனு கிட்ட நெருங்கி விட்டாள். இன்னும் சில எட்டுக்களை பாக்கி! அவள் அவனைத் தொட்டு விடலாம்.

ஆனல் விரட்டிய சிறுமியின் வேகம் கொஞ்சமும் தளரவே இல்லை. மீனுவின் பின்னலைத் தொட்டால் கூடப் போதும். இடையிலுள்ள தூரம் முன்னிலும் குறைந்துவிட்டது.

ஞானத்தின் துடிதுடிப்புத் தாங்க முடியவில்லை. மீனு பிடிபடக் கூடாது என்ற ஆத்திரம் அவனை மெய்ம் மறக்கச் செய்தது.

"மீனு! மீனு! தொடு என் கையை, சீக்கிரம்!" என்று தன்னை அறியாமல் எழும்பிக் கையை நீட்டி விட்டான். அவனுக்கு இருந்த ஆத்திரத்திலும் வெறியிலும், நீட்டிய கையைத் தொட்டுவிடமாட்டாளா என்ற ஆசையிலும், கால்கள் இருந்திருந்தால் இறங்கிக்கூட எதிர்த்து ஓடியிருப்பானே என்னவோ?

வேகமாக எழும்பிவிட்டான், திண்ணை நினைவை மறந்து.

"மீனு தொட்டுட்.."— அவன் முடிக்கவில்லை.

பலத்த சப்தத்துடன் தலை தரையில் மோதி உடல் சாய்ந்து விழுந்தது.

அதே சமயம் அவனை ஓடித் தொட்ட மீனுவின் விரல்களில் அவன் சூம்பிய பாதந்தான் பட்டது.

# வீரமும் வகையும்

ஒரு நாள் தங்கிய இடத்தில் மறுநாள் தங்காமல் உத்தர பாரதம் முழுவதையும் சுற்றி மறைந்து திரிந்து கொண்டிருந்தான் ஒரு வாலிபன். தன் உண்மைப் பெயரை வெளியிடவே அவனுக்குப் பயமாக இருந்தது.

கொளுத்துகிற உச்சி வெயில். புழுதியில் கால் பட்டால் துள்ளி விழச் செய்தது. சாலை நாவல்மரத்து மந்திகள் கிளையோடு கிளையாக ஒட்டிக்கிடந்தன. வெயிற் பறவைகளான காகங்கள்கூட வெப்பம் தாங்காமல் ஜலக் கரையோர ஈர நப்பில் கால் வைத்துச் சூடாற்றிக்கொண் டிருந்தன. மேய்ச்சல் மாடுகள் மேய்வதையும் விட்டு மரத்தூறுகளோடு உராய்ந்து நின்று அசை போட்டுக் கொண்டு இருந்தன. அனல் ஓடிக்கொண் டிருந்தது. உஷ்ணக் காற்றுச் சுவாசப் போக்கைத் தடுமாற வைத்தது.

"உஸ், அப்பாடா!" என்று சொல்லிக்கொண்டே வெள்ளம் போல் ஓடிய வேர்வையைத் துடைத்துக் கொண்டு சாலையோர மரத்து நிழலில் ஓய்ந்துபோய் உட்கார்ந்தான் அந்த வாலிபன்—மகத சாம்ராஜ்யத்தின் வரப் போகும் சத்ராதிபதியான சந்திரகுப்தன். முழங் கால் வரை ஏறிப் படிந்திருந்த புழுதி அன்றைய அவன் நடையின் தூரத்தை அளந்து காட்டுவதுபோல் இருந்தது.

வெளி உஷ்ணம் அவனைத் தகித்ததைவிட அவன் ஹிருதயத்தில் நிரந்தரமாகத் தங்கியிருந்த உஷ்ணந் தான் பன்மடங்கு வேகத்தில் தகித்துக்கொண்டிருந்தது. அவனுடைய அனாதை நிலைமையிலும் சாம்ராஜ்ய லக்ஷ்ய நினைவுதான் அவன் மனக் கண்முன் நின்றுகொண்டிருந்தது.

கீர்த்தியுடன் தலைமுறை தலைமுறையாக நந்தர்கள் ஆண்டுவந்த மகத சிம்மாசனத்தில் அப்போது ஒரு ஜாரபுத்திரன் உட்கார்ந்துகொண்டிருந்தான். அதுதான் அவனை உறுத்திக்கொண்டிருந்தது. — ஒரு நாவிதனின் மகன்; அவன் பெயர் தனநந்தன் என்பது. தாய் பரிஹாரியின் துணைகொண்டு புருஷனைக் கொன்றவள்! இந்த ஜாரபுத்திரனைவிட மகத சிம்மாசனத்துக்குத் தன் பாத்தியதை மதிப்புள்ளது என்று அவனுக்கு நிச்சயப்பட்டது. அவனும் நந்த வம்சத்தைச் சேர்ந்தவன்தானே?

"அடடா! மகத சிம்மாசனத்துக்குத்தான் என்ன கௌரவம்! தனி அந்தஸ்து! - போகட்டும்; ராஜரீகத்திலாவது நியாயம் உண்டா என்றால், நிரபராதிகளின் ரத்தம் எங்கும் சிந்திக்கிடக்கிறது! இதற்கு முடிவு இருப்பதாகவும் தெரியவில்லையே. ஹூம்! ஈன ரத்தம் ஓடும் ஹிருதயத்தில் நியாயத்தை எப்படி எதிர்பார்க்க முடியும்?" என்று அவன் தனக்குள் பேசிக்கொள்ளும்போது ஹிருதயமே வெடித்துவிடும்போல் இருந்தது.

தனநந்தன்மீது சந்திரகுப்தனுக்கு அத்தனை ஆக்ரோஷம் இருக்க மற்றொரு காரணமும் உண்டு. நந்த வம்சத்தில் வந்த மௌரியனையும், சந்திரகுப்தனைத் தவிர அவனுடைய மற்ற மக்களையும், தன் ஆட்சிக்குப்

பின்னால் ஆபத்துவந்து விடுமே என்று பயந்து கொலை செய்துவிட்டான். சந்திரகுப்தன் மட்டும் தப்பியது தெய்வாதீனம். அந்த க்ஷாத்திரத்தைத் தீர்த்துக் கொள்ளவேண்டும் என்று துடிதுடித்துக்கொண்டிருந்தது அவன் ராஜபுத்திர ஹிருதயம்.

இரண்டும் சேர்ந்து அவன் மனத்தை அறுத்துக் கொண்டிருந்தன. ஊர் ஊராகச் சுற்றிக்கொண்டிருந்தான். தனநந்தனது சதிக்குத் தப்பி ஒவ்வோர் இரவும் அவன் உயிர் வாழ்வதே எவ்வளவு கஷ்டமாக இருந்தது!

சில தினங்களுக்கு முன்தான் சரித்திரக் கீர்த்தி பெற்ற மாஸிடோனிய அரசனான கிரேக்க நாட்டு வீரன் அலெக்ஸாண்டரை நேரில் கண்டு பேசியிருந்தான். ஜீலம் நதிக்கரையில் போரஸ் என்ற புருஷோத்தமனை ஜயித்துவிட்டு அலெக்ஸாண்டர் விபாஸா நதிக்கரையில் முகாம் போட்டிருந்த சமயம். அவன் கீர்த்தி சந்திர குப்தனை இழுத்தது. அவனைப் பார்த்துப் பேசி விட்டான்.

அந்தக் கிரேக்க புருஷனின் துணிச்சலும் காம்பீர்யமும், திமிரும் சந்திரகுப்தன் மனத்தில் மூடியிருந்த இருளையும், மங்கிக்கிடந்த உணர்ச்சியையும், ஆவலையும் தூண்டிவிட்டன. வஜ்ரக் கட்டமைந்த அவ்வுருவம் அவன் மனத்தில் ஆழமாய்ப் பதிந்து விட்டது. அந்தக் கிரேக்கனின் வார்த்தைகளும் அப்படியே.

சந்திரகுப்தன் யோசிக்கத் தொடங்கினான். மாஸிடோனிய ராஜ்யம் எங்கே, மகத ராஜ்யம் எங்கே! இரண்

டிற்கும் இடையேயுள்ள ஆயிரக்கணக்கான மைல் விஸ்தீரணத்தைத் தனதாக்கி ஸிந்து நதிப் பிரதேசத்திலும் தன் கொடியை நாட்டிவிட்டுப் போயிருக்கிறான் அலெக்ஸாண்டர். அவனுடைய சாம்ராஜ்ய வேகந்தான் எவ்வளவு! அவன் படை எவ்வளவு உறுதியான கட்டுப்பாடு அமைந்தது! ஹிந்து ஸ்தானத்தைப் பிடித்த அதிருஷ்டந்தான், அவன் படை இதற்குமேல் செல்ல மறுத்ததும், அவனும் இளக்கம் காட்டித் திரும்பியதும் என்று சொல்ல வேண்டும். புருஷோத்தமன் காட்டிய வீரமும் மற்றொரு காரணம்.

ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு மறுபடியும் யோசித்தான்: "அவனும் என்னைப்போல மனிதன் தானே? அவனை இவ்வளவு தூரம் கொண்டு வந்த துணிச்சலும் வீரமும் எனக்கு இல்லையா? பல ஆயிரம் மைல் என் ஜயக்கொடியை நாட்டமுடியாதா?" என்று அவன் வாய் முணுமுணுத்துக்கொண்ட போது முகத்தில் ரத்தம் வேகமாகப் பாய்ந்து சிவந்தது. கண்கள் தீர்க்கமாக உறுத்து விழித்தன. வார்த்தைகள் பதறி வெளியே வந்தன:

"என்னால் முடியும். சந்தேகமே இல்லை. அவனைப் போலவே எதற்கும் தளராத படை இன்றுமுதல் சேர்ப்பேன். என் கருத்தை — மகத சாம்ராஜ்ய லக்ஷியத்தை அடைந்தே தீருவேன். இந்தச் சிம்மாசனத்தில் முடங்கிக் கிடக்கும் ஈன ஜந்துவை இழுத்தெறிந்துவிட்டு அதன்மீது நான் உட்காருவேன். மகத சாம்ராஜ்யத்தைக் கோடி சூரியப் பிரகாசமாக்குவேன்" என்று உயரே தோன்றிய சூரியனைப் பார்த்துக் கொண்டே சபதம் செய்தான் சந்திரகுப்தன். பற்கள்

கடித்துக்கொண்டன. இடையில் செருகியிருந்த வாளின் பிடியைக் கை பலமாக அமிழ்த்தியது.

சபதம் செய்துவிட்டுச் சந்திரகுப்தன் தன்னைச் சுற்றிப் பார்த்தான். அவனுக்கு இருந்த உணர்ச்சிவேகத்தில் அது வரையில் அவன் கவனித்திராத ஓர் உருவம் அவன் கண்களுக்கு அப்போதுதான் தென்பட்டது. ஐந்தாறு மரங்களுக்கு அப்பால் உள்ள நிழலைச் சந்திரகுப்தன் கூர்ந்து கவனித்தான். இருவர் கண்களும் சந்தித்தன. வெகு நேரமாக அந்த உருவம் தன்னையே பார்த்துக்கொண்டிருக்க வேண்டுமென்று பார்வையின் தீக்ஷண்யத்திலிருந்து ஊகித்துக் கொண்டான் சந்திரகுப்தன்.

மறு விநாடி அந்த உருவம் கண்களைத் திருப்பிக் கொண்டது. இருமல் கலந்த தொண்டையில் லேசாகக் கனைத்துக்கொண்டதைச் சந்திரகுப்தன் கேட்டான். அவன் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அந்த உருவம் உயர்ந்து எழுந்து ஒரு மூட்டையை எடுத்துக் கொண்டு சாலையில் அவன் பக்கமாக வரத் தொடங்கியது. அந்த உருவத்தையே சந்திரகுப்தன் கண்கொட்டாமல் கவனித்துக்கொண்டிருந்தான்.

வற்றலான சரீரம். நல்ல உயரம். எலும்பு மூடிய தோலுருவம். சதைப்பற்று இல்லாத அவயவங்கள். குடலோடு ஒட்டிய வயிறு. கண்கள் ஆழப்பதிந்து இருந்த போதிலும் பீரங்கிவாய்க் குண்டுகள் சூரிய ஒளியில் ஜ்வலிப்பது போல் தீக்ஷண்யமான பார்வை. பண்டைச் சாஸ்திர ஞானம் அவன் முகத்தில் பிரதிபலித்தது. தட்டிமுடியாத உச்சிக்குடுமி காற்றில் மெதுவாகப் பறந்துகொண்டிருந்தது. அவன்தான்

விஷ்ணுகுப்தன். உலகத்துக்கே பொருள் நூல் இயற்றித்தர இருக்கும் சாணக்கியன்.

கம்பீர நடை போட்டுவந்த சாணக்கியன் சந்திர குப்தனைக் கடந்து சில அடி தூரம் போயிருப்பான். காலில் ஏதோ தடுக்கித் தடுமாறியது. சாணக்கியன் சட்டெனத் திரும்பிக் கீழே தடுக்கிய இடத்தைத் தீர்க்க மாகப் பார்த்தான். கண்கள் உற்று விழித்துப் புருவங்கள் உயர்ந்தன. கீழே சாவதானமாக உட்கார்ந்தான். அந்த இடத்தில் வளர்ந்திருந்த, தன்னைத் தடுக்கிய அந்தப் புல்லைப் பிடுங்கி எறியத் தொடங்கினான். தடுக்கிய புல் மீது அவ்வளவு க்ஷாத்திரம்!

சந்திரகுப்தன் வியப்படைந்து சம்பவத்தைக் கவனித்துக்கொண் டிருந்தான்.

புல்லை மேலாகப் பிடுங்கி எறிந்து விட்டதோடு சாணக்கியன் நிற்கவில்லை. ஒரு குச்சியை எடுத்து ஆழத் தோண்டி வேரோடு அந்தப் புல்லை மறுபடியும் வளர வொட்டாமல் கல்லி எறிந்துவிட்டான். ஒரு சில்லி வேர் கூடப் பாக்கி இல்லை. மறுபடியும் குழியை மூடிவிட்டு எழுந்து மேலே எட்டு வைத்தான்.

சந்திரகுப்தனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. சரேலென்று எழுந்து க்ஷத்திரிய நடை போட்டுச் சாணக்கியனை நெருங்கினான். அவன் வருவதைப் பார்த்த சாணக்கியனும் நின்றுவிட்டான்.

"உனக்கென்ன பைத்தியமா!" என்று ஏளனமாகச் சிரித்துச் சந்திரகுப்தன் அவனைக் கேட்டான்.

சாணக்கியன் உதடுகளில் அலக்ஷியப் புன்னகை தோன்றியது. "நான் பைத்தியம் அல்ல; இன்று மகத சிம்மாசனத்தின் மீதுதான் ஒரு பைத்தியம் இருக்கிறது"!

என்று அர்த்த புஷ்டியுடன் தனக்குத் தனநந்தன் மீதுள்ள வெறுப்பைக் காட்டினான்.

அந்தக் குறிப்பைச் சந்திரகுப்தன் அறிந்துகொண்ட போதிலும் புல் விஷயம் அவனுக்கு வேடிக்கையாக இருந்தது. மறுபடியும் கேட்டான்:

"அந்தப் புல்லை ஏன் அப்படிச் செய்தாய்?"

"எனக்கு இடையூறு செய்த அந்தப் புல்லைப் பிடுங்கி எறிந்ததில் நீ ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது?"

"ஒரு சின்னப் புல்மீதா உனக்குக் கோபம்?"

"சின்னப் புல்! பயிரை வளர முடியாமல் நசுக்கி விடும் அந்தப் புல்! அது செய்திருக்கும் வேலையைப் பார்த்தாயா?" என்று தன் கால் கட்டைவிரல் இடுக்கைப் புரட்டிக் காண்பித்தான் சாணக்கியன். அந்த இடத்தில் ரத்தம் கசிந்து பரவி இருப்பதைச் சந்திரகுப்தன் பார்த்தான். அப்போதும் சந்திரகுப்தனுக்கு அவன் செய்கை புரியவில்லை. அவன் அஜாக்கிரதைக்குப் புல்லா காரணம்? "இதற்காக வேரோடு கல்லி எறிய வேண்டுமா?" என்று மீண்டும் கேலியாகக் கேட்டான்.

சாணக்கியன் ஆத்திரம் அதிகரித்தது. கண்களில் ஆக்ரோஷம் தோன்றியது. "நுனிப்புல்லைப் பிடுங்கி விட்டால் போதுமென்று நினைக்கிறாயா நீ? இன்னும் பச்சை இழக்காத அதன் சல்லி வேர்களின் ஆதரவைக் கொண்டு எவ்வளவு வேகமாக முளைத்தெழும் தெரியுமா? க்ஷத்திரியனான நீ அறிந்துகொள்ள முடிய வில்லையா இதை?" என்று படபடப்பாக வார்த்தைகளைக் கொட்டிவிட்டான்.

தன்னை அவன் க்ஷத்திரியன் என்று கண்டு கொண்டதைக் கேட்ட சந்திரகுப்தன் திடுக்கிட்டுப் போனான். அவனை விறைத்துப் பார்த்து, "நான் க்ஷத்திரியன் என்பது உனக்கு எப்படித் தெரியும்?" என்று வியப்புடன் கேட்டான்.

"சந்திரன் மங்குகிறதில்லை. மேகந்தான் மறைக்கிறது. ராஜ லக்ஷணமும் அப்படியேதான்; புழுதி மூடிக்கிடந்தாலும் சரி, ஊட்டமின்றிச் சோபை குன்றிய போதிலும் சரி.''

சந்திரகுப்தன் பிரமித்துப் போனான். சாணக்கியன் தொடர்ந்து கூறினான்; "மேலும் நீ பகைவருக்கு அஞ்சி நிலையாக நிற்க வழி இல்லாமல் என்னைப்போல் திரிந்து கொண்டிருக்கிறாய் என்பதும் எனக்குத் தெரியும். பிரமிக்காதே. சூரியனைப் பார்த்து நீ செய்த சபதத்தைக் கேட்காவிட்டாலும் பார்த்தேன். உன் பல் நறநறப்புக்கூட எனக்குக் கேட்டது. அந்தச் சூசகந்தான் நான் புல்லைப் பிடுங்கி எறிந்ததற்குக் காரணம்."

"அதற்கும் புல்லைப் பிடுங்கி எறிந்ததற்கும் என்ன சம்பந்தம்? உன் ஆத்திரத்தைக் காட்டுவதற்குத்தானே பிடுங்கி எறிந்தாய்?" என்று கேட்டான் சந்திரகுப்தன்.

சாணக்கியன் வாய்விட்டுச் சிரித்துவிட்டான். "ராஜ புத்திர! என் ஆத்திரத்தை உத்தேசித்து அல்ல; நீ ஆத்திரங்கொள்ளத்தான், ஸாதாரண ஸந்தர்ப்பத்தில் நான் புல்லைப் பிடுங்கி எறிந்திருந்தால் பைத்தியம் என்று நீ என்னைக் கூறியது மிகவும் பொருந்தி இருக்கும். ஆனால் இப்போது உனக்கு ராஜ தர்மத்தை உணர்த்தவே அந்தச் சூசகக் குறி காட்டினேன்'' என்றான்.

"எது ராஜ தர்மம்?"

"சத்துருக்களை வேருடன் களைவதுதான். எனக்கு இடையூறு செய்த புல் கதிதான் உன் பகைவருக்கும் நேரவேண்டும் என்பதை வேறு எந்த விதத்தில் சுருக்கமாக உனக்கு உணர்த்த முடியும்? அதற்குரிய தகைமை உன் ரத்தத்தில் ஓடுகிறது" என்று தன் செய்கையை விளக்கினான் சாணக்கியன்.

அந்தப் பதிலைக் கேட்ட சந்திரகுப்தன் மனம் திருப்திபெற்றுக் குதூகலம் அடைந்தது. "அந்தணா! குமுறிக்கொண்டிருந்த என் ஆவலை வேகமாகத் தூண்டி விட்டாய். அதற்குச் சரியான துணை வேண்டும். நீ இருப்பாயா?" என்று ஸ்பஷ்டமாகக் கேட்டு, "என்னிடம் வீரம் இருக்கிறது; வகை வேண்டும்" என்றான்.

"நானும் வீரத்தைத்தான் தேடி அலைகிறேன், வகையை வைத்துக்கொண்டு" என்றான் சாணக்கியன்.

சந்திரகுப்தன் மரியாதையுடன் சாணக்கியன் முன் தலை தாழ்த்தி வணங்கினான். "மகத சக்ராதிபதி வாழ்க" என்று சாணக்கியன் வாயார வாழ்த்தினான்.

"தனநந்தன் காலம் நாட்கணக்கில்" என்று தன் வாளைக் கொஞ்சம் இழுத்து உறையில் போட்டான் சந்திரகுப்தன்.

"விஷ்ணுகுப்தன் சபதம் நிறைவேற, அவன் தன் குடுமியை முடிந்துகொள்ளும் நாள் வெகு தொலைவில் இல்லை" என்று சொல்லிக்கொண்டே சாணக்கியன் கை குடுமியை ஒரு தரம் கோதிக் கொடுத்தது.

வீரமும், வகையும் அந்த இடத்திலே கலந்தன. அந்தக் கலப்பிலிருந்துதான் மகத சாம்ராஜ்யம் பிறந்தது.

# முதல் கடிதம்

"கோமு! உனக்கு அத்திம்பேர் கடுதாசி போட்டிருக்கார்; இதோ பார்" என்று பல் அத்தனையும் காட்டிக் கொண்டு ஒரு கவரை அவள் கையில் திணித்தான் கிட்டு.

கோமதிக்குக் கல்யாணம் நடந்தது போன மாதம். வயது இப்பொழுதுதான் பதினொன்று நிரம்பிப் பன்னிரண்டு நடப்பு. இருந்தாலென்ன? குழந்தை தானே? இந்த வயதிற்குள் அப்படி என்ன உலக அனுபவத்தைக் கண்டுவிட்டாள்? பாண்டி, சோழி, கட்டம் முதலியன ஆடுவதில்தான் அவளுக்கு அனுபவம் அதிகம். தூங்கும்பொழுது இந்த ஆட்டங்களின் ஞாபகமாகவே உளறுவாள். இந்த 'மோக்ளா'வில் மதுரைக் காலேஜில் இண்டர்மீடியட் வாசித்துக்கொண்டிருக்கும் சந்துருவைப்பற்றி அவள் நினைப்பதே அபூர்வம்.

இங்கே இப்படி. ஆனால் அந்தப் பயல் சந்துருவுக்கோ சதா கோமதி ஸ்மரணைதான். புஸ்தகத்தை எடுத்து முன்னால் வைத்துக்கொண்டால் அவள் உருவமும் நடையும் பேச்சும் பேசும் படத்தில் தோன்றுவதுபோல் முன்வந்து நின்றுவிடும். அதிக அனுபவம் வாய்ந்த ஒரு பெண்ணைத் தான் கல்யாணம் செய்துகொண்டிருப்பதாகத் தோன்றியது, அவன் பிரமை பிடித்த மனத்திற்கு. அவ்வளவுதான்; உடனே உட்கார்ந்து ஒரு கடிதம் எழுதித் தபாலில் போட்டுவிட்டுத்தான் மறு ஜோலி

பார்த்தான் சந்துரு - அதுவும் கல்யாணமாகி ஒரு மாதத்திற்குள்!

கோமதிக்கு இது வரையில் ஒரு கடிதமும் வந்ததே இல்லை. அவளும் கடிதம் எழுதியதில்லை. அதிலும் சந்துருவிடமிருந்து கடிதத்தைச் சிறிதும் எதிர் பார்க்கவில்லை. அந்த எண்ணமே அவளுக்குத் தோன்றவில்லை.

தனியே போய் உட்கார்ந்துகொண்டு திருப்பித் திருப்பிப் படித்தாள். பாடமாகிவிட்டது. அதைப் படிக்கும்பொழுது அவளுக்கு என்னவோபோல் இருந்தது. அது இன்னதென்று அவளுக்கே தெரியவில்லை.

சந்துரு குண்டு குண்டாக எழுதி இருந்தான், எழுத்துப் புரியும்படி. ஆனால் அர்த்தந்தான் அநேக இடங்களில் புரியவில்லை அவளுக்கு. தமிழ் நாவல்களையும் இங்கிலீஷ் நாவல்களையும் எதேஷ்டமாகச் சந்துரு கரைத்துக் குடித்திருக்கிறான் என்பது ஸ்பஷ்டமாகத் தெரிந்தது. இதையெல்லாம் அதில் காட்டினால் அந்தக் குழந்தை மனத்திற்கு என்ன புரியும்?

"உடனே மறு தபாலில் பதில் எழுது, கட்டாயம்" என்று இருந்தது கடிதக் கடைசியில். அதுதான் கோமதிக்குப் பெரிய பிரச்னையாகப் போய் விட்டது. "கட்டாயம் உடனே எழுதணுமாமே! எப்படி எழுதறது?" என்று அவள் வாய் முணு முணுத்தது.

ஒருத்தருக்குமே அவள் இதுவரை கடிதம் எழுதினதில்லை. அப்படி இருக்கிறபோது முதல் முதலில் 'அவாளு'க்குக் கடிதம் எழுதுகிறது என்றால்!

இப்படி யோசனையிலேயே ஒரு வாரம் கழிந்து போய்விட்டது. சந்துருவும் நித்தியம் தபால்காரனை,

"கடிதம் உண்டா? உண்டா?" என்று கேட்டுக்கொண்டே இருந்தான். எங்கிருந்து அவன் கடிதம் எதிர்பார்க்கிறான் என்று சொல்லத் தேவையில்லை. தபால்காரனுக்குக்கூட ஒரு நாள் சலிப்புத் தோன்றி, "என் ஸார், வந்தா நான் வச்சுக்கிடவா போறேன்?" என்று ஒரு 'டிக்கிரி' காரமாகப் பேசிவிட்டான். இரண்டு கோபமும் சேர்ந்து விடவே மறு நாளே இன்னும் ஒரு கடிதம் கொஞ்சம் சூடாகவே கோமதிக்கு எழுதிப் போட்டு விட்டான் சந்துரு, அம்மையார் பாட்டியின் கோபம் போலே.

கோமதி இரண்டாவது கடிதத்தையும் படித்துப் பார்த்தாள். "போன காகிதத்துக்கே பதில் போடல்லே, கோவிச்சுண்டுகூட எழுதிட்டார். இதுக்கும் பதில் போடல்லேன்னு அப்புறம் அவரும் கோவிச்சிண்டு காகிதம் எழுதாமே இருந்துட்டா என்ன பண்ணறது?" இப்படி யெல்லாம் யோசித்தாள். ஆனால் எழுதுவதற்கோ ஒரு பக்கம் பயம், ஒரு பக்கம் சங்கோசம்.

இப்படி நாலு நாள் போய்விட்டது. ஐந்தாவது நாள் திடீரென்று ஒரு தீர்மானத்திற்கு வந்து விட்டாள் கோமு, அன்றைக்கே கடிதம் எழுதி விடுவதென்று.

உடனே சட்டென்று எழுந்திருந்தாள். ஹார்மோனியப் பெட்டியைத் திறந்தாள். மேலாகப் பாட்டு நோட்டுக் கிடந்தது. விர்ரென்று ஒரு பக்கத்தைக் கிழித்தாள். சனியன்! கோணலும் மாணலுமாய்க் கையில் வந்துவிட்டது. ஆனால் என்ன, பரவாயில்லை என்று இரண்டாக மடித்து வைத்துக்கொண்டாள். பெட்டி அடியில் துழாவித் துழாவி ஒரு புழுக்கைப் பென்ஸில் - ஒன்றரை அங்குல நீளமேதான்! - எடுத்துப் பார்த்தாள். முனை ஒடிந்து கிடந்தது.

ஒரு விநாடி தயங்கினாள். உடனே சமையலறைப் பக்கம் சென்றாள். மாட்டியிருந்த அரிவாள்மணையை எடுத்து முழங்காலுக்கு நடுவில் வைத்துக்கொண்டு சீவினாள், வாழைக்காய்க்குப் பட்டை உரிப்பதுபோல். சமயத்திற்கு அகப்பட்ட ஆயுதம்!

எப்படியோ சீவி முடிந்தது. வாயை உப்பவைத்துக் கொண்டு குத்திப் பார்த்துக்கொண்டாள். சுறுக் கென்றது போல் இருந்தது. அடேயப்பா, இவ்வளவு கூர்மை போதாதா?

ஒருவரும் வராத இடமாகிய தாழ்வாரத்தில் போய்க் குத்தி இட்டு உட்கார்ந்து கொண்டாள். காகிதத்தை முழங்கால் மீது வைத்துக்கொண்டு கடிதம் எழுத ஆரம் பித்தாள் புருஷனுக்கு.

சின்னதாக மொச்சைக்கொட்டை அளவிற்கு ஒரு பிள்ளையார் சுழி போட்டாள். பெரிய 2 ஆக விழுந்தது. அதில் ஊர்ப் பெயரையும் எழுதினாள். அதில் இரண்டு மூன்று அடித்தல்! அடுத்தாற்போல் தேதி போடப் போனாள். வருஷமும் மாதமும் ஞாபகத்திற்கு வர வில்லை. உடனே ஓடி, முதல் நாள் வந்த கடிதம் ஒன்றைப் பார்த்துவிட்டு எழுதினாள்: "க்ஷேமம்" என்று தலைப்பிலும் போட்டுவிட்டுச் சரியாக எழுதி இருக்கி றோமோ என்று உற்றுப் பார்த்தாள்.

கடிதத்தில் சில எழுத்துக்கள் பதியவே இல்லை. "கல்லுப் பென்சில்! தூ, தரித்திரம்!" என்று கோபத் தோடு வீசி எறிந்தாள். ஜல தாரையில் போய் விழுந்து அது மிதந்து சென்று விட்டது.

நல்ல வேளையாகக் கிட்டு பள்ளிக்கூடம் போயிருந் தான். இருந்தால் நன்றாகத் தொட விடுவானே? ஓடிப்

போய் அவன் பெட்டியிலிருந்து பேனாவையும் மைக் கூட்டையும் எடுத்துக்கொண்டு வந்தாள்.

அதற்கும் பழக்கம் வேண்டாமா? பேனா பிடி படாமல் வழுக்கிக்கொண்டு போனது. அதன் இஷ்டமா? — இருக்கிப் பிடித்துக்கொண்டு மைக்கூட்டில் அடியோடு மூழ்த்தினாள். மைக்கூடு நிறைய மை இருந்ததை அவள் கவனிக்கவில்லை.

உதடு கோண, முகம் சுளிக்க, தலையைச் சாய் வைத்துக்கொண்டு திரும்ப எழுதலானாள். பிள்ளையார் சுழிக்குப் பதில் ஒரு காசு அகலத்திற்கு மைப் பொட்டு விழுந்து பரவியது. 'அட சனியனே!' என்று முனகிக் கொண்டே சுரேலென்று வாயால் ஊதினாள், உலர வைக்க. ஊதிய வேகத்தில் மை வாய்க்கால் விட்டுக் கொண்டு கடிதத்தின் குறுக்கே ஓடியது. உடனே சட் டென்று கையால் துடைத்துவிட்டாள். திருத்தப் போய் அது பெருத்த வளையமாக முடிந்தது. காகிதமெல்லாம் மை.

நீங்களும் நானுமாக இருந்தால் உடனே அதைக் கிழித்துப் போட்டிருப்போம். ஆனால் கோமு அப்படிச் செய்யவில்லை.

பேனாவை நன்றாக உதறிவிட்டுத் திரும்ப எழுதினாள். 'நிப்' பாம்பின் நாக்குப்போல் பிளந்து கொடுத்துக் காகிதத்தைக் கிறிக்கொண்டு சென்றது.

பொறுமைக்கும் எல்லை இல்லையா? கோமுவின் முகத்தில் ஒரு சுளிப்பு. புருவங்களில் ஒரு சுருக்கம். கண்களில் ரௌத்திராகாரத் தோற்றம். பேனாவின் மீது வந்த ஆத்திரம்! — சனியன்!

இந்தச் சமயத்தில் யாரோ வருவதுபோலக் காலடிச் சப்தம் கேட்டது. திடுக்கிட்டுச் சுருட்டி மடக்கி எழுந்து பார்த்தாள். வேறொருவரும் இல்லை. ஓர் அணில் தத்தி ஓடியது. மறுபடியும் அமைதியாக உட்கார்ந்து 'நிப்'பை நிதானப் படுத்திக்கொண்டு 'க்ஷேமம்' என்று எழுதினாள்.

அடுத்த வரி என்ன எழுதுவது? பேனா ஓடவில்லை. கைதான் அசைகிறது. அப்பா, அண்ணா முதலானவர்களுக்காக இருந்தால், 'அப்பாவுக்கு அநேக நமஸ்காரம்' என்ற மாதிரி எல்லாம் எழுதலாம். எந்த மாதிரி எழுதலாம் அவருக்கு?

யோசித்து யோசித்துப் பார்த்தாள். திடீரென என்னவோ தோன்றியது. அக்கா படித்துக்கொண்டிருந்த நாவலில் அந்த மாதிரிக் கடிதம் பார்த்ததாக ஞாபகம். அதைப் புரட்டிப் பார்த்தாள். அதில் இருந்தது.

பெயரைமட்டும் மாற்றிவிட்டு அதை அப்படியே 'காப்பி' அடித்துவிட்டாள். ஆனால் நான் அதை உங்களுக்குச் சொல்லப் போவதில்லை. அது ஒரு ரகசியம்.

எழுதிவிட்டாள், அப்பா! ஒரு சிக்கலான பிரச்னை தீர்ந்துவிட்டது. அப்புறம்? "க்ஷேமம். க்ஷேமத்திற்கு எழுதவும். நீங்க எழுதின காகிதம் கிடைச்சுது. இங்கே அப்பா, அம்மா, நான் எல்லோரும் சௌக்கியம். நீங்க சௌக்கியமா?......"

இதற்குமேல் எழுத ஓடவில்லை. தான் ரொம்ப எழுதி விட்டதாகவும் தோற்றியது. யோசனையில் ஆழ்ந்தாள். எழுத விஷயமே இல்லை என்று தோற்றியது.

"...ஙகளுக்குப் பரீக்ஷை எப்போ? லீவு எப்போ விடறு? ஆத்தில் எல்லாரும் சௌக்கியமா? பதில் எழுதவும்!" என்று கடிதத்தை முடித்துக் கையெழுத்தைப் போட்டாள். கடிதம் நான்கே வரிகள்தாம். கடிதத்தை ஒரு பார்வை பார்த்தாள். கடிதம் முழுவதும் மையினால் அவள் கைரேகை அடையாளங்கள் பட்டிருந்தன. ஒரு துப்பறிபவனுக்குத் தக்க வேலை. கை முழுவதும் ஒரே மை!

முன் ஜாக்கிரதையாகத் தன் விலாசமிட்ட ஒரு கவரையும் வைத்து அனுப்பி இருந்தான் சந்துரு — கெட்டிக்காரப் பயல்! அந்தச் சிரமத்தையும் கோமதிக்குக் கொடுக்கவில்லை. அப்பா பெட்டியிலிருந்து 'ஸ்டாம்ப்' ஒன்றை எடுத்துக்கொண்டு வந்தாள்.

கவரை ஒட்ட வேண்டாமா? பழையது பானையிலிருந்து கொஞ்சம் சோற்றுப் பருக்கையைக் கொணர்ந்து கவரை ஒட்டினாள். ஈரம் உலர வெயிலில் போட்டு உலர்த்தினாள். இந்தச் சமயம் பண்ணைக்காரச் சுப்பன் மாடுகளை ஓட்டிக்கொண்டு வந்து சேர்ந்தான். அவன் ரகசியமாகக் கடிதத்தைத் தபாலில் போட்டு வந்தான். ஒரு மட்டிற்குக் கடிதம் புறப்பட்டு விட்டது. கோமு நிம்மதிமூச்சு விட்டாள்.

கொஞ்சநேரம் சென்றது. சமையலறைக்கு வந்த அம்மா, "ஏண்டி கோமு! யாரடி பழையது பானையைத் திறந்து போட்டிருக்கா?" என்று கேட்டபோது, திடுக்கென்றது கோமுவுக்கு. பானையை மூடாமல் வந்தது ஞாபகத்திற்கு வந்தது. அதற்குள் அம்மா, "அணில் ஏதாவது தள்ளி இருக்குமா?" என்று கேட்டாள்.

"ஆமாம் அம்மா, அடுக்குள்ளே ஏதோ சப்தம் கேட்டது" என்று ஒரு போடு போட்டாள் கோமு.

பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிய கிட்டு, வீட்டுக் கணக்குப் போடப் பேனவை எடுத்து எழுதியபோது கிறீச்சென்றது. "ஏண்டி கோமு! நீ என் பேனவை எடுத்தயோல்லியோ?" என்று கூவினன். "போடா உன் பேனவை நான் ஏதுக்கடா எடுக்கறேன்? அதிசயத்தை!" என்று எதிர்த்தாள் கோமு. என்ன முழுப் பொய்! வறட்டு ஜம்பம்! கள்ள மனசு!

அன்றைக்குப் பார்த்து, கடிதம் எழுத அப்பா 'ஸ்டாம்பை'த் தேடினபோது, அகப்படாமல், "யார் எடுத்தா ஸ்டாம்பை?" என்றார். கோமுவுக்குப் 'பக்' என்றது. அதற்குள் அம்மா, "எப்பொவாவது ஒட்டிப் போட்டிருப்பேள்" என்றாள். அவருக்கே 'வைத்திருந் தோமா?' என்று சந்தேகமாகப் போய்விட்டது.

கள்ளனுக்குத் தேள் கொட்டியது போல் இருந்து விட்டாள் கோமு. எதையாவது அகத்தில் ஒப்புக் கொள்ள முடியுமோ?

இவ்வளவு தடபுடல்களுக்கு இடையே, சந்துரு வுக்குக் கடிதம் போய்ச் சேர்ந்தது. அந்த நான்கு வரிகளையே திரும்பத் திரும்பப் பாராயணம் பண்ணிக் கொண்டிருந்தான். 'ஆஹா! என்ன அழகு! என்ன குண்டு குண்டான எழுத்துக்கள்! அர்ச்சனை செய்யலாம் போல் இருக்கிறதே!' என்று கவிதையும் கற்பனையும் கலந்து வியந்து சப்திக்கத் தொடங்கின அவனது உள்ளத்தில்.

ஆனல், நமக்குத் தெரியுமே: அந்தக் கடிதம் எவ்வளவு லக்ஷணங்களுடனே அவனிடம் போய்ச் சேர்ந்திருக்கும் என்று!

# முறைமைப் பெண்

அழகுவின் கல்யாணம் நடைபெறுவதற்கு இன்னும் இரண்டு மூன்று நாட்கள் இருந்தன. அன்றைக் கல்யாண காரியம் முடிந்து, அழகுவும் அங்கம்மாளும் படுக்கப் போகும் சமயம், அவர்கள் வீட்டுக் கதவு தடதடவென்று இடிக்கப்பட்டது. இந்நேரத்திற்குப் பிறகு யார் வந்து கதவைத் தட்டுவார்கள் என்று சந்தேகித்து, "யாரது?" என்று கேட்டுக்கொண்டே அங்கம்மாள் கதவைத் திறக்கப்போனாள். "நான்தான் அங்கி, கதவைத்திற" என்று வெளியிலிருந்து ஒரு முரட்டுக்குரல் பதில் அளித்தது. அந்தக் குரலைக் கேட்டதும், தாயும் மகளும் ஏக காலத்தில் திடுக்கிட்டு ஒருவரையொருவர் பார்த்து விழித்துக்கொண்டார்கள். பயம் தோய்ந்த ஒரு கலக்கம், பீதி அந்த விழிப்பில் கலந்திருந்தது.

அந்தக் கலக்கத்தையும் அமிழ்த்திக் கொண்டு, அங்கம்மாள் போய்க் கதவைத் திறக்கவும், வீடு அதிரும் படியாகக் காலடி எடுத்து வைத்துப் பசுடித்தேவன் உள்ளே நுழைந்தான். இத்தனை வருஷங்களாக உழைத்து உழைத்து வைரம் பாய்ந்துபோன தேகமும், குடித்துக் குடித்து நிலையாகச் சிவப்பேறிப் போயிருந்த கண்களும், இரண்டு கன்னங்களிலும் கிர்தா மீசையோடு வந்து சேரும்படியாகக் 'கோரா' வெட்டி விடப்பட்டு, இடுப்பில் தோல் உறை இடப்பட்டிருந்த ஒரு பிச்சுவா சகிதம், வெளிக்குத் தெரியாதபடி குத்து ஈட்டி ஒன்று மறைக்கப்பட் டிருந்த பித்தளைப்பூண் இரு புறமும்

பிடித்த ஒரு கருங்காலித் தடியைக் கையில் வைத்துக் கொண்டு, ஆஜானுபாகுவாய் உள்ளே நுழைந்த உருவம் ஒரு கற்பனைக் காட்டுத் தெய்வத்தின் தோற்றத்தை அளித்தது.

பகுடித் தேவன் வரவும், அங்கம்மாள் அவன் பக்கம் திரும்பி, "அண்ணே, வா! ஏது இந்த அகாலத்திலே புறப்பட்டு வந்தே? எங்கேயாவது காவலுக்குப் புறப் பட்டியா? ஏது இத்தனை நாளா இந்தப் பக்கமே காணோம்? இந்த ஊரிலேயே இருந்துக்கிட்டு . ." என்று ஒரு புறம் அவனுடைய அகால வருகையை விரும்பாமல் வினவி, மறுபுறம் பரிவோடு கேட்பவள் போல வர வேற்றாள். ஆனால் பகுடியோ அவள் அழைப்பிற்குப் பதில் ஒன்றும் பேசாமல், தீவிரம் பொங்கும் முகத் தோற்றத்துடன் தடியை முன்னாலே போட்டுக்கொண்டு மௌனமாக உட்கார்ந்தான்.

யதார்த்தத்திலேயே அந்த அகாலத்தில் பகுடி வந்தது அவளுக்கு அவ்வளவு திருப்திப்படவில்லை. அதற்கேற்றாற்போல் வரும்போதே அவன் கடுப்பாக நடந்து கொண்டது அவளுக்கு அசாதாரணமாகப் பட்டது. அவர்களுக்குள் முன் நடந்தது, பின் நடக்க இருப்பது இவற்றைக் கோவைப் படுத்திக் கொண்ட பொழுது, என்ன அனர்த்தத்திற்கு அவன் அடிபோடு கிறானோ என்ற பயம் ஏற்பட்டது தாய்க்கும் மகளுக்கும். எடுத்த எடுப்பிலேயே இருவரிடையேயும் சௌஜன்ய உணர்ச்சி காணப்படாதது அவர்களுக்குள்ளே இருந்த மனஸ்தாபத்தை வெளியிட்டுக் காண்பித்தது.

அப்பொழுது வெளியே நல்ல இருட்டு. ஆடிக் கடைசி. ஆகையால் காற்று முழு வீறுப்புடனும் புழுதியை அள்ளி வீசிக்கொண்டிருந்தது. பனைமரங்கள்

ஒன்ருேடொன்று மோதி 'ஹோ' என்று அலறிக் கொண்டிருந்தன. அவ்வளவு கொதிப்படைந்த இரவு. அதற்குச் சமமாகக் கொதிப்படைந்த மனத்தோடு இருந்த பகுடி, ஒரு கனைப்புக் கனைத்துக்கொண்டு பேச ஆரம்பித்தான். அந்தக் கனைப்பு, தாய்க்கும் மகளுக்கும் கசந்து வழிந்தது. என்ன சொல்லப் போகிருனோ என்று அவன் வாயையே பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

"அங்கி! நீ நினைத்ததை அப்படியே சாதித்துப் போட்டே, இல்லையா? குலத்தைவிடப் பணம் உனக்கு பெரிசாப் போயிருச்சு. அந்தப் பஞ்சாயத்துக்காரன் சம்பந்தம் உனக்கு ரொம்ப உசத்தியாப் போயிருச்சு. நம்ப மாசானம் உன் கண்ணுக்கு அவ்வளவாத்திருப்திப் படல்லே, இல்லையா?" என்று அடித் தொண்டையிலிருந்து உறுதியான குரலில் பேசினுன். அவன் கண்கள் நிலையாக அவர்கள் இருவரையுமே மாறி மாறி விழித்து உருண்டன, அவன் இதைச் சொல்லும் பொழுது.

அங்கியும் அழகுவும் எதிர்பார்த்துப் பயந்தது போலவே, எடுப்பிலேயே இவ்வளவு உஷ்ணமாக ஆரம்பித்தது அவர்களுக்கு ரொம்ப வேதனையாக இருந்தது. தீர்ந்துபோனதென்று அவர்கள் கருதியிருந்த விஷயத்தை அவன் திரும்பக் கிளறிவிட்டு விட்டான். மேலும் மேலும் அதைப்பற்றிப் பேசுவது மனஸ்தாபம் அதிகரிப்பதற்குத்தான் இடமாகும். ஆயினும் என்ன செய்வது? அவன் அப்படி நினைக்கவில்லை. ஜவாப் கூறித்தானே ஆகவேணும்!

"அதைப்பற்றி இனிமே பேச்சு எதற்கு? அண்ணே, வியவகாரந்தான் ஒரு விதமாகத் தீர்ந்து போயிடுத்

தில்லே'' என்று பேச்சிற்குப் புள்ளி வைத்து அங்கம்மாள் பதில் கூறினாள்.

"என்ன, தீர்ந்தா போயிருச்சு! நான் அப்படி நினைக்கல்லையே'' என்றான் பகுடி, திரும்பவும் பன்மடங்கு உறுதியுடன். இதைக் கேட்டதும் அங்கம்மாளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. மனத்திற்குள் ஒரே கலக்கம். பதில் ஒன்றும் பேசத் தோன்றவில்லை.

"மாசானம் ரொம்ப ஆசைப்படறான், ஒரண்டையும் பார்க்காமே ஏதோ ஒண்ணுக்குள்ளே ஒண்ணு கட்டிக் கொடுத்திருன்னு எத்தனையோ வாட்டி வலுவிலே உன்கிட்ட நான் சொல்லியிருக்கேன். அதைக் கொஞ்சங்கூடக் காதிலே போட்டுக்காமே இந்த மாதிரி காரியம் செய்துட்டே, பகுடியை மனுசன்னுகூட மதிக்காமே......ஹூம்!'' என்றான் பகுடி தொடர்ந்து.

அங்கம்மாள் அவனுக்கு விட்டுக் கொடுக்காமல், "அண்ணே! என்ன இப்படிப் பேசறே! மாசானத்துக்கு அழகுவைக் கட்டிக் கொடுக்கத் தோதுப்படாதுன்னு உன்கிட்ட எத்தனை வாட்டி நானும் சொல்லியிருக்கேன். அழகுவுக்குத்தான் அவனைக் கட்டிக்கிற பிரியமே இல்லை. அப்புறம்...''

இதை அவள் கூறி முடிப்பதற்குள் பகுடியின் முகம் சரேலென்று நிமிர்ந்து அழகு பக்கம் திரும்பிக் கோபத்தோடு உருண்டன விழிகள். "நேற்றுப் பிறந்த கழுதைக்கு அவ பிரியம் வேறே வச்சிருக்குதோ? ஹூம், வேண்டாமோ?'' என்று கோபத்தில் நகைத்த போது, அந்த இடம் முழுவதும் எதிரொலித்தது. அந்த இடத்தில் அதற்குமேல் நிற்கமுடியாமல் அழகு அப்புறம் போய்விட்டாள்.

"அண்ணே, அவளோ எனக்கு ஒண்ணே ஒண்ணு. அவள் சம்மதம் இல்லாமே செய்கிறதற்குப் பிடிக்கல்லே" என்றாள் அங்கி பணிவோடு.

"அப்போ, ஜாதி முறைமையெல்லாம் பறந்து போயிருச்சோ?" என்று கர்ஜித்தான் பகுடி.

அங்கி நடுநடுங்கிப் போய்விட்டாள். அவனிடம் எப்படிப் பேசுவதென்றே அவளுக்குத் தெரியவில்லை. வாஸ்தவமாகவே மாசானத்திற்கு அழகுவைக் கட்டிக் கொடுக்கக் கொஞ்சமும் அவளுக்கு இஷ்டம் இல்லை. அங்கம்மாள் வாழ்க்கைப்பட்ட இடம் கொஞ்சம் பசையுள்ள இடம். நாளையும் பின்னும், கண்ணீரும் கம்பலையுமாக வந்து நிற்காமல், கண்ணியமும் கொஞ்சம் அந்தஸ்தும் உள்ள இடத்தைத்தேடும் அவளா இந்த யோக்கியதையும், பொறுப்பும், பணமும் இல்லாத கஜப் போக்கிரியின் மகன் – காவாலிப்பயல் – மாசானத்துக்கு அழகுவைக் கொடுப்பாள்?

இந்த லக்ஷணத்தில் முறைமை கொண்டாடுகிறான் பகுடி. ஜாதி வழக்கமாம் வழக்கம்! முறைமையைப் பார்த்துவிட்டுத்தான் அப்புறம் வெளியிடம் பார்க்கணுமாம்; வேடிக்கைதானே! ஆனால் இந்தக் காரணத்தையெல்லாம் பகுடியிடம் நேரடியாக எடுத்துச் சொல்லி அவன் கோபத்தை அதிகரிக்கச் செய்யவில்லை. பயந்து பயந்துதான் அங்கம்மாள் பதில் கூறினாள். அழகுவின் மீது சுலபமாகப் பழியைத் தூக்கிப் போட்டுவிட்டாள். பகுடியின் கடைசிக் கேள்விக்கு அவள் ஒன்றும் பதிலே பேசவில்லை.

ஆனால் பகுடி அதோடு விட்டுவிடாமல் திரும்பவும் அதே முரட்டுக் குரலில், "இதோ பாரு, அங்கி; உன்

கிட்டத் தர்க்கம் பேசிக்கிட்டு இருக்கிறதற்கு நான் இங்கே வரல்லே. நம்ம ஜாதி வழக்கப்படி பேசாமே மாசானத்துக்குக் கட்டிக்கொடுத்திரு'' என்றான்.

"என்ன, என்ன? நிச்சயம் பண்ணின கல்யாணத்தை முறிச்சிடவா சொல்றே?'' என்று தன்னை மீறிப் பலக்கக் கூவிவிட்டாள் அங்கம்மாள், வியப்புக் குரலில்.

"ஆமாம், அதைத்தான் சொல்றேன். பேசாமே அப்படிச் செய்திடு. இல்லாட்டிப் பின்னாலே ரொம்ப மனஸ்தாபத்திற்கு இடமுண்டாவும்'' என்றான். அங்கம்மாள் அவனையே பார்த்துக்கொண்டு சிறிது நேரம் பேசாமல் இருந்தாள். பின்பு தன்னைத் திடப் படுத்திக்கொண்டு, "அண்ணே, நீ இப்படியெல்லாம் பேசறது நல்லாயில்லே, அதது தலைப்பொறி போலே நடந்திட்டுப் போவுது'' என்றாள் இறைஞ்சலாக. தங்கள் விஷயத்தில்கூட அவன் அப்படி நடந்துகொள் வானென்று அவள் எதிர்பார்க்கவில்லை. ஆனால் சாதனைக் குணம் நன்றாகப் பிடித்துக்கொண்டுவிட்ட ஒருவனுக்கு, தன் இனம், பிற இனம் என்றுகூடப் பகுத்தறிய முடியாதபடி அறிவு இருளடைந்து விடுகிறது!

"அப்போ மாசானத்துக்கு அழகுவைக் கட்டிக் கொடுக்கமாட்டே நிச்சயமாய்? ஹூம்!'' என்று கூவினான் பகுடி.

"நிச்சயமான கல்யாணத்தை நிறுத்த முடியுமா, அண்ணே? விட்டுடு பேச்சை'' என்று சமாதானமாகக் கூறினாள் அங்கி.

பகுடியின் கோபமும், முரட்டுத்தனமும் அளவு கடந்து போய்விட்டன. உட்கார்ந்துகொண்டிருந்தவன்

சரேலென்று எழுந்து, தடியைக் கையில் எடுத்துக் கொண்டு அவள் பக்கம் திரும்பி, "பகுடின்னு என்னமோ லேசாக நினைச்சுக்கிட்டு இருக்கிறே நீ! கிராமமே என்னைக் கண்டா நடுநடுங்கிக்கிட்டுக் கிடக்குது. அதுவும் உனக்குத் தெரியாமே இல்லே. முறைமையை விட்டுட்டு வேறே இடத்திலே குட்டியைக் கட்டிக் கொடுத்துட்டா எனக்குத்தான் கேவலம். பகுடி ரோஷம் கெட்டவனல்ல. எங்கே இந்தக் கல்யாணம் நடந்துடறதைப் பார்த்துடறேன்! இல்லாட்டி என் பேரு பகுடியும் அல்ல; மறவனுமல்ல" என்று கிர்தாவில் கைபோட்டுத் திருகிக்கொண்டு, கண்களில் தீக்கனல் வீச, சட்டென்று திரும்பி வாசற்படியைக் கடந்து கீழே இறங்கி இருளில் மறைந்துபோய்விட்டான் பகுடி.

"அண்ணே! அண்ணே!" என்று ஏதோ கூற அங்கி வாயெடுத்தாள். அவன் காதில் போட்டுக் கொள்ளாமல் போய்விட்டான், அந்த அபாக்கிய வீட்டில் பயத்தையும் குழப்பத்தையும் உண்டு பண்ணி விட்டு.

மறு நாள் காலையில் அங்கம்மாள் வேறு ஒன்றும் தோன்றாமல் போலீஸில் போய் இரண்டு நாட்களில் நடக்க இருக்கும் தன் மகள் கல்யாணத்திற்குப் பகுடி, அவன் சகாக்கள் ஆகியவர்களால் இடைஞ்சல் ஏற்படு மென்று பயப்படுவதாயும், பந்தோபஸ்துத் தரவேண்டு மென்றும் 'ரிபோர்ட்' செய்துவிட்டாள். அதன்மீது போலீஸார் பகுடியையும், அவன் மகனையும் கூப்பிட்டு அந்தக் கல்யாண சம்பந்தமாக ஏதாவது அசம்பாவிதம் ஏற்பட்டால், அவர்களே ஜவாப்தாரி என்று எழுதி வாங்கிக் கட்டுப்படுத்தி எச்சரித்து அனுப்பிவிட்டார்கள்.

அப்பொழுதுதான் சம்பந்தப்பட்டவர்கள் மனத்தில் ஒரு நிம்மதி பிறந்ததென்று சொல்லவேண்டும். இனிக் கல்யாணம் இடைஞ்சலின்றி நடக்கக்கூடுமல்லவா!

ஆனால் பகுடி இதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. தன் சகோதரி அவ்வளவு தூரத்திற்குப் போகமாட்டாள் என்று நினைத்திருந்தான். ஆனால் அவனுடைய செய்கையே அவளுடைய அந்த நடவடிக்கைக்குத் தூண்டுகோலாக இருந்தது. இது வரையில் சுயேச்சையாக நடந்துகொண்டிருந்த தான் கட்டுப்படுத்தப் பட்டதை நினைக்கும் பொழுது, அவன் மனம் கொதித்தது. எந்த விதத்தில் இதற்குப் பழி வாங்கலாம் என்று ஆராயத் தொடங்கியது அவன் முரட்டு உள்ளம்.

கல்யாண தினம் வந்துவிட்டது. அவர்கள் ஜாதி வழக்கப்படி மாப்பிள்ளை வீட்டிலேதான் கல்யாணம் நடப்பது வழக்கம். எனவே பெண் வீட்டா ரெல்லாம் கல்யாணத்திற்கு முந்தின நாளே மாப்பிள்ளை வீட்டுக் கிராமத்திற்குப் போய்விட்டார்கள். அங்கம் மாள் வீடு பூட்டிக் கிடந்தது.

பாதிராத்திரி சமயம் இருக்கும். மாப்பிள்ளை வீட்டுக் கிராமத்திலே அழகுவுக்கும், பாலுத்தேவன் மகனுக்கும் அங்கேரத்தில் முகூர்த்தம் ஆகி எல்லோரும் சந்தோஷமாகப் பொழுது போக்கிக்கொண்டிருக்கும் சமயம். அமாவாசை ஸமயமாகையால், எங்கும் இருட்டாக இருந்தது. வானத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நக்ஷத்திரங்கள் மின்னிக் கொண்டிருந்தன. காற்று அகோரமாகக் கிளம்பி வீசிக்கொண்டிருந்தது. எல்லோரும் ஒரு தூக்கம் போட்டிருப்பார்கள். அப்பொழுது, திடீரென்று அரைகுறைத் தூக்கத்தில்

இருந்த சிலருடைய நாசிகளில் ஓலை எறிவதனால் உண்டாகும் புகை நாற்றம்போல் ஏதோ தாக்கியது. சந்தேகப்பட்டு வெளியே வந்து பார்த்தார்கள். அங்கம்மாள் வீடு பற்றி எரிந்துகொண் டிருந்தது. தீப்பட்ட ஓலைத்துண்டுகள் பல ஆயிரக்கணக்கில் காற்றில் சிதறி நாலு பக்கங்களிலும் பறந்துபோய்க்கொண் டிருந்தன. அவ்வளவுதான்; கிராமமே ஓரே அல்லோல கல்லோலப் பட்டது. எங்கே பார்த்தாலும் ஓரே பரபரப்பு; ஆரவாரம். தீ பரவி விடாமல் இருக்கவேண்டிய வழிகள் எல்லாம் தாமதமின்றிக் கையாளப்பட்டும், தீ அணைய வெகு நேரம் பிடித்தது, காற்றடி காலமாகையால். அங்கம்மாள் வீடு உள்ளிருந்த சாமான்களோடு முழுவதும் வெந்து சாம்பலாகிவிட்டது.

கல்யாணம் முடிந்து மறுநாளே அங்கம்மாள் திரும்பி வந்தாள். வீடு இருக்கும் நிலைமையைப் பார்க்கப் பார்க்க அவள் மனம் பதறிற்று. கொஞ்ச நேரம் பிரலாபித்து விட்டு, உடனே போய் அதையும் போலீஸாரிடம் 'ரிபோர்ட்' செய்துவிட்டாள். போலீஸார் வாசனையை நுகர்ந்தார்கள். பகுடியையும், மாசானத்தையும் கைது செய்யுமாறு 'வாரண்டு' பிறப்பிக்கப்பட்டது. மாசானம் சுலபமாகப் பிடிபட்டான். பகுடியோ பதினைந்து நாட்கள் வரை அகப்படாமல் தப்பித்துக்கொண்டிருந்து பிறகு சாதுர்யமாக ஜாமீன் வசதி ஏற்படுத்திக்கொண்டு, ஆஜராகி 'லாக்கப்'பிற்குப் போகாமல் கோர்ட்டிலிருந்தே ஜாமீனில் விடுதலைக்கு வழி செய்துகொண்டான்.

அங்கம்மாளுக்குப் பகுடி தன் அண்ணன் என்ற நினைப்பேகூட இல்லாமற் போய்விட்டது. வீட்டையே எரித்துத் தன்னைப் பாழ்படுத்தியவன் அண்ணனாக

இருந்தால் என்ன, வேறு யாரானுல் என்ன? அத்தனை ஆக்ரோஷம் அவளுக்கு அவன்மீது பிறந்துவிட்டது. எப்படியாவது அவனை இதற்காகச் சிறையில் வைத்துப் பார்க்கவேண்டு மென்றுகூட உறுதி கொண்டுவிட்டாள். அதோடு பகுடியை ஒழிப்பதற்குத் தக்க சமயத்தை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண் டிருந்த கிராமமும் அவளுக்குத் துணை புரியத் தூண்டுகோலாக முன் வரவே, பகுடிக்கு எதிராகப் பலமாகச் சாக்ஷிகளைத் தயாரிப்பதில் இறங்கிவிட்டாள். பகுடிதான் தீ வைத்தவன் என்று அவள் நிச்சயமாக நம்பினுள்.

தன்மீது தீ வைத்த குற்றம் சுமத்தப்படுவதைப் பகுடியால் பொறுக்க முடியவில்லை. குற்றம் செய்திருந்தால் அவன் மனம் சிறிதும் அதன் பயனை அனுபவிக்கத் தயங்காது. ஆனுல் செய்யாத குற்றத்திற்குத் தண்டனை அனுபவிப்பதென்றுல், அதை அவனுல் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

சப்மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் விசாரணை ஆரம்பமாயிற்று. பகுடிக்கு எதிராகச் சாக்ஷிகள் மிகப் பலமாகத் தயார் செய்யப்பட்டிருந்தனர். பகுடி கைதிக் கூண்டில் நின்றுகொண் டிருந்தான். இந்த நாற்பது வருஷ காலத்திலே இன்றைக்குத்தான் அவன் ஓர் அற்ப, தீ வைத்த குற்றம் சாட்டப்பட்டுக் கைதிக் கூண்டில் ஏறி நிற்கிறுன். சமயம் பார்த்து எதிரிகள் இப்படித் தன்னைச் சிக்கலில் மாட்டிவிட்டதை நினைத்து அவன் மனம் உள்ளூறக் குமுறிக்கொண் டிருந்தது. அவனுலோ எவ்வளவோ முயன்றும் தன் நிரபராதித் தன்மையை ரூபிக்கும் வகையில் சாக்ஷியம் தயாரிக்க முடியவில்லை. எதிர்ச் சாக்ஷியமோ வெகு பலமாகத் தயார் செய்யப்பட்

டிருந்தது. எங்கே தனக்குத் தண்டனை விதிக்கப்படுமோ என்று பயந்துகொண் டிருந்தான். கூண்டில் குனிந்த தலை நிமிரவே இல்லை. இடையிடையே அங்கம்மாளைப் பற்றிய ஞாபகம் வரும்போது அவன் பற்கள் நறநற வென்று நெரிந்தன. ரோஷத்தில் சொல்லிவிட்ட இரண்டு வார்த்தைகள் அல்லவா அவனது இந்த நிலைமைக்குக் காரணம்!

அன்று அங்கம்மாள் சாக்ஷியம் விசாரிக்கப்பட வேண்டிய பிரமேயம் ஏற்படவில்லையாதலால், அவள் கோர்ட்டிற்கு வரவில்லை. பகுடி பயந்தது போலவே குறிப்பாக இரண்டொரு சாக்ஷிகளை மட்டும் விசாரித்து விட்டு மாஜிஸ்டிரேட் வழக்கை ஸெஷன்ஸுக்கு அனுப்பி விட்டார். அந்தத் தீர்ப்புப் பகுடிக்குப் பேரிடியாக விழுந்தது. அவன் நம்பிக்கை இழந்தவனாகி விட்டான். அவனது முரட்டு மனமும் கலகலத்துப் போய்விட்டது.

பகுடி ஸெஷன்ஸுக்கு அனுப்பப்பட்ட விஷயத்தை யாரோ ரொம்ப மகிழ்ச்சியோடு அங்கம்மாளிடம் வந்து கூறினார்கள். அவள் மனம் சந்தோஷப்படவேண்டி யிருக்க, அவளுக்கு அதைக் கேட்டதும் திடுக்கென்றது. அப்பொழுது அவள் மனத்தில் ஏற்பட்டது, திருப்தியா அதிருப்தியா என்று அவளாலேயே நிதானிக்க முடியவில்லை. பல முரண்பாடான எண்ணங்கள் அவள் மனத்தில் எழுந்து அலைத்தன. வேதனை போட்டுப் பிய்த்துக் கொண்டது. 'ஐயோ! யார்மீது இப்படி நடவடிக்கை எடுத்துக்கொண்டு விட்டோம்' என்று ஒரு வேதனை அவள் மனத்தில் முளைத்தது. "அவன் உன் அண்ணன் அல்லவா?" என்று ஏதோ ஒன்று அவளுக்கு உள்ளே இருந்து

வினவியதுபோல் இருந்தது. மறு கணம் அவன் செய்த கொடுமை நினைவிற்கு வரவும், அதில் ஓர் ஆறுதல் ஏற்பட்டதுபோல் இருந்தது. வெளியிட்டுச் சொல்ல முடியமால் உள்ளூற இந்தக் குழப்பத்திலேயே நாட்கள் சென்றுகொண்டிருந்தன.

அன்று மப்பும் மந்தாரமுமாக இருந்தது. மங்கலான சூரியன்கூட மேக விதானத்தைப் பொத்துக்கொண்டு வெளிக்கிளம்ப முடியவில்லை. அன்றுதான் ஸெஷன்ஸ் கோர்ட்டில் விசாரணையின் கடைசி நாள். பகுடி தான் தண்டிக்கப்படுவது நிச்சயம் என்று தீர்மானித்தவனாய் உணர்ச்சியே இல்லாமல் மனம் குன்றிப் போய், கைதிக் கூண்டில் நின்றுகொண்டிருந்தான். குனிந்த தலை நிமிரவே இல்லை. அவனுடைய மானம் அல்லவா அவனை விட்டுக் கொஞ்சங் கொஞ்சமாகப் போய்க்கொண்டிருந்தது!

விசாரணை ஆரம்பித்தது. சாக்ஷிகள் ஒவ்வொருவராகக் கூறிவிட்டுப் போய்க்கொண்டிருந்தார்கள். அதைப்பற்றியெல்லாம் பகுடி சிறிதும் கவலைப்பட்டவன் போலவே தோன்றவில்லை. அடுத்த சாக்ஷியின் பெயர் கூப்பிடப்படவும் பகுடி திடுக்கிட்டுத் தன் ஒளியிழந்த கண்களை உயர்த்தி அந்தப் பக்கம் பார்த்தான். அங்கம்மாள் — அவன் சகோதரி — தள்ளாடித் தயங்கி வந்துகொண்டிருந்தாள். அதே சமயம் களையிழந்திருந்த அவள் முகத்திலிருந்து இரண்டு விழிகள் கைதிக் கூண்டை நோக்கின. ஒரே விநாடி இருவர் கண்களும் சந்தித்தன! அடுத்த விநாடி இருவர் முகங்களும் விறுட்டென்று தாமாகவே அப்புறம் திரும்பிக் கொண்டன. பகுடிக்கு வெறுப்பு; அங்கமாளுக்குக்

குழப்பம். சகோதரனுக்கு எதிர்த் தரப்பில் சகோதரீ சாக்ஷி சொல்வதென்றால் அதைவிட விதிவசம் வேறென்ன இருக்கும்?

பகுடியின் அந்தப் பார்வை — கோபமும் நிராதரவும், இரக்கமும், கொடூரமும் கலந்து பேசிய அந்தப் பார்வை அவள் நெஞ்சை ஆயிரம் சுக்கலாக உடைத்து நொறுக்கிவிட்டது. அக்கு அக்காகப் பிரிக்கப்பட்டதொரு கப்பல்போல் சிதறிப் போய்விட்டது. அதனால் எழுந்த கலக்கத்தை அவளால் சமாளிக்க முடியவில்லை. ஒரு யந்திரத்தைப்போல் தான் சொன்னது புரியாமலே மளமள வென்று சாக்ஷியம் கூறிவிட்டு இறங்கிப் போய் விட்டாள்.

அப்பொழுதுதான் அவள் கலக்கம் அதன் உச்ச நிலையை அடைந்துவிட்டதென்று சொல்லவேண்டும். சுலபமாக நிவர்த்தித்து விட முடியாத ஒரு நிலைமையைச் சிருஷ்டித்துவிட்டாள் அவள்!

ஆனால் ஓர் இரண்டு வருஷ தண்டனையை மனத்தில் கற்பனை செய்துகொண்டபொழுது அவள் உடல் நடுங்கினாள். அழுகைகூட வந்துவிட்டது. அவளறியாமல், "ஐயோ, ஆத்திரப்பட்டு என்ன காரியம் செய்துவிட்டோம்!" என்று வாய்விட்டுக் கூறி விட்டாள். தன் அண்ணன் சிறைக்குப் போகத் தான் காரணமாக இருப்பதென்றால்! — அவள் கோழையாகி விட்டாள். கோபமும் வர்மமும் அவள் மனத்திலிருந்து பறந்துபோன இடம் தெரியவில்லை. எங்கிருந்தோ வாத்ஸல்யமும், பச்சாத்தாபமும் வந்து நுழைந்து கொண்டன. இந்தச் சமயத்தில் ஜட்ஜ் தீர்ப்பு எழுதத் தம் அறைக்குப் போய்விடவே, அங்கம்மாளின் நிலைமை

சகிக்கக்கூடாததாகிவிட்டது. 'ஐயோ, என்ன அவசரப் பட்டு இந்தக் காரியம் செய்துவிட்டேன்! அண்ணனைச் சிறைக்கு அனுப்ப நானு காரணமாக இருப்பேன்? இல்லை, மாட்டவே மாட்டேன். அக்கிரமம்' என்று துடித்தாள்.

திடீரென்று ஓர் அசட்டு யோசனை தோன்றியது. ஜட்ஜிடம் போய் நேரில் சொல்லிவிட்டாலென்ன? "அவன் செய்யவில்லை, அந்தக் காரியம். வேறு யாரோ, எனக்குத் தெரியாது" என்று சொல்லிவிடக் கூடாதா என்றுகூட நினைத்தாள். ஆனால் அது நியாயஸ்தலம். வாத்ஸல்யத்திற்கும், பச்சாத்தாபத்திற்கும் அங்கே இடம் இல்லை. சட்டத்திற்கும் சாக்ஷியத்திற்குமே மதிப்பு உண்டு. சாக்ஷியமோ அவன் குற்றவாளிதான் என்று நிரூபித்துவிட்டது. சட்டம் அவனைத் தண்டித்துத் தான் ஆகவேண்டும்; இல்லாவிட்டால் அது சட்டமே அல்ல. நீதிக்குப் புறம்பானதாகிவிடும். அவள் மேலும் நினைத்தாள்: 'ஐயோ, குற்றம் சரியாக நிரூபிக்கப்படவில்லை என்று ஜட்ஜ் விடுதலை செய்துவிட மாட்டாரா?' என்று பேதை மனம் பிதற்றத் தொடங்கியது. ஆத்திரத்தில் தான் செய்துவிட்டதைக் குறித்து மருகினுள், மருகினுள், மருகினுள். மனம் நிலைக்காமல், செய்வது இன்னதென்று புரியாமல் பிரமையே உருவாகி விட்டாள்.

கொஞ்ச நேரம் கழித்து ஜட்ஜ் திரும்ப ஆசனத்தில் வந்து உட்காரவும், கோர்ட்டில் பரபரப்பு ஏற்பட்டது. குல்லாய் அணிந்துகொண்டு, கண்களை ஒரு தரம் கசக்கிவிட்டுச் சபையைச் சுற்றப்பார்த்து ஜட்ஜ் தீர்ப்புச் சொல்ல வாயைத் திறந்தார். எல்லோருடைய

ஆவல் முகங்களும் கவனத்தோடு அவர் வாயையே பார்த்துக்கொண் டிருந்தன. அதேசமயம் திடீரென்று, "தர்ம துரை...ய...வ...ர்...க...ளே!" என்று தளர்ந்த குரல் ஒன்று நிதானித்துக் கிளம்பியது. "உஸ்! பேசக்கூடாது. யாரது? தள்ளு வெளியே!" என்று பல குரல்கள் ஏக காலத்தில் அங்கம்மாள் வாயை அடைத்தன. ஜட்ஜ் தீர்ப்புக் கூறப் போகும் சமயத்தில் கோர்ட்டில் சப்தம் போடவாவது!

அங்கம்மாளுக்கு மேலே ஒன்றும் பேசத் தோன்ற வில்லை. ஜட்ஜையும், சபையையும் மாறி மாறிப் பார்த்து மருள மருள விழித்தாள். இது ஒரு விநாடிக்குத்தான். மறு விநாடி அவள் தளர்ந்த, ஆயாசமடைந்த சரீரம் பொத்தென்று ஆசனத்தில் விழுந்து உட்கார்ந்தது. தலை சாய்மானத்தில் சாய்ந்து கொண்டது. ஜட்ஜ் திரும்பவும் தொடர்ந்து ஆரம்பித்துத் தம் தீர்ப்பைக் கூறி முடித்தார். ஆனால் ஜட்ஜ் கூறிய அந்தக் கடைசி இரண்டு வாக்கியங்கள் அப்பொழுது அவள் காதில் விழவில்லை.

# ஒரு சந்தர்ப்பத்தில்

சாய்வு நாற்காலியில் முதுகு படியாமல் உட்கார்ந்து ஷண்முகம் நேர் எதிர் ஜன்னலுக்கு வெளியே விறைத்துப் பார்த்துக்கொண்டிருந்தான். அதன் முதுகுப் பிடியில் ஒரு கை வைத்து மற்றொரு கையால் புடைவைத் தலைப்பை வாய் நுனியில் பொத்தினபடி செளந்தரம் கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தாள்.

இருவரும் வாய்கொடுத்துப் பதில்வாங்கி வெகு நேரம் ஆகிவிட்டது. அந்தப் பொழுது எப்படிக் கழிந்து கொண்டிருந்தது என்பது அவர்களுக்கே நினைவில்லை. செளந்தரம் மட்டும் நடுநடுவே கண்ணீரை அடக்கி மீண்டும் ஏதோ பேச விரும்பினவளைப்போல வாயை அசைக்கப் போவாள். சப்தம் ஒன்றும் கிளம்பாத வெறும் மௌன அசைவாகவே அது இருந்துவிடும். ஆனால் நெஞ்சுக்குள்ளே போட்ட வேதனைவித்து வெடிப்பதுபோலக் கண்ணீர் குப்பென்று துளித்துத் துளித்துக் கிளப்பும்.

"தொலைந்து போ தள்ளி!" என்ற கடைசி வார்த்தைகளோடு அவர்களுடைய சம்பாஷணையை ஷண்முகம் மடக்கி இருந்தான். அந்த மடக்கலை நெகிழ்த்துக் கொடுக்கச் செளந்தரத்துக்குத் துணிவு வரவில்லை. அவன் குணம் அவளுக்குத் தெரியும். எதற்காக இன்னும் நெருக்கிக்கொள்ளவேண்டும்? தனக்குள் நெளிந்து பொருமிக்கொண்டிருந்தாள் அவள். அதை

அலக்ஷியமாக் நினைத்துப் போகவும் அவளால் முடிய வில்லை.

சாதாரணப்போக்கில் நித்தியப்படி வேலை முறையில் ஒன்றாகப் போய்விடக்கூடிய அந்தக் காரியம் ஒரு சந்தர்ப் பத்தில் இவ்வளவு தப்பாகிவிடும் என்று யார் எதிர் பார்க்க முடியும்? யதார்த்தமாகச் செய்த காரியம் அது. ஏன்? இப்போதுகூட அது எப்படித் தப்பாகும் என்று எவ்வளவோ நினைத்துப் பார்த்தும் தெளிவாகவில்லை அவளுக்கு.

அவன் உதடுகளிலிருந்து சீறிவந்த அந்த வார்த் தைகள் அவளை அப்படியே கொன்றுவிட்டன. "ஐயோ! இதென்ன வார்த்தை! நானா.." என்று பதறிக் கேட்டவள் வாக்கியத்தை முடிக்கவில்லை.

"சீ, மிருகம்!" என்றுதான் அவன் நாக்கு விசும்பி அவள் வாயில் போட்டது.

அவளுடைய குரலில் உள்ள பரிதாபங்கூட, அவன் கிளப்பின வார்த்தைகளின் தப்பை அவனுக்கு உணர்த்திக் காட்ட முடியவில்லை.

அப்போது வாயை மூடிக்கொண்டவள்தான். இன்னும் வாயைத் திறக்கவில்லை. ஒரே வார்த்தையில் அவள் பொட்டில் விழுந்த அடிக்கு எப்படிப் பதில் சொல்வது? அவளுக்குத் தெரியவில்லை; அவளால் மறக்க முடியவில்லை; அவனுந்தான். அறையின் உட்புறத்துக்கு அவன் கண்கள் மூடிக்கிடந்தபோதும் அவன் சுவாசம் —!

அவனுக்குப் பின்புறம் மாட்டியிருந்த லக்ஷ்மி படத் தடியில் சிறு ஸ்டாண்டில் செருகியிருந்த ஊதுவர்த்தி களிலிருந்து படர்ந்த மெல்லிய புகை ரேகைகள் அவன்

சுவாசத்தில் கலக்கும்போது அவனால் எப்படி மறக்க முடியும்? போதாததற்கு அறையின் மற்றொரு மூலையில், கட்டியும் கட்டாததுமாகக் கிடந்த மல்லிகையின் மணமும் வேறு சேர்ந்தது.

சாதாரணமாக மனமயக்கம் கொடுக்கும் அவைகளின் போதைச் சக்தி அப்போது அவனிடம் வலிமிழந்து மோதியது. சுவாசம் சுவாசமாகக் கலந்து சென்று ஒரு பிரயோஜனமும் காணாமல் வெறுமனே திரும்பி வெளிக்காற்றிலே சிதறியது.

அந்த நிலையை ஏற்கும் சுமுகம் அவன் மனத்துக்கு அப்போது இல்லை. முழுதும் மாறுபட்ட இரண்டு நிலைகளில், திடீரென ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு மாறிய நிலையோடு, புதியதை க்ஷணத்தில் சகஜப்படுத்திக் கொள்வது எவ்வளவு கஷ்டமானது! முன் நிலையின் நிகழ்ச்சியத்தனையும் அவன் மனத்திலே உளைந்துகொண்டிருந்தது. அதிலே ஏற்பட்ட கோளாறு அந்தச் சிறு சம்பவம். பிளாட்பாரத்திலிருந்து வீடு திரும்பின வரையில் ஒரே நினைப்பு; அதே உள்ளக் கிளர்ச்சி.

* * * *

பிளாட்பாரத்திலிருந்து ரெயில் மறைந்துவிட்டது. ஸ்டேஷனுக்கு வெளியே வந்துவிட்டான்.

அவனை நிறுத்தி வைப்பதற்குத் தன்னால் ஆனமட்டும் முயன்று பார்த்துவிட்டான்; பயனில்லை.

ரெயில் புறப்பட அந்தக் கடைசி ஊதல் கிளம்புவதற்கு முன்புகூட ஷண்முகம், "தம்பி, பேசாமல் நீ இங்கேயே.." என்று இழுத்தான்.

அதை முடிப்பதற்குள் தம்பி இடைமறித்து, "அண்ணா, புறப்பட்டாயிற்று; இன்னும் அதைப் பற்றிப்

பேசிப் பிரயோஜனம் என்ன? சரி, வண்டி புறப்பட்டு விட்டது. நான் வரட்டுமா?'' என்றான்.

“சரி, போய் உடனே கடிதம் போடு. மறந்து விடாதே'' என்று சமாளித்துக்கொண்டு ஷண்முகம் பதில் சொன்னான்.

வேகமாகப் புறப்பட்ட வண்டியின் ஜன்னலிலிருந்து கையைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தளர்த்திக்கொண்டே ஷண்முகம் நகர்ந்து பிளாட்பாரத்தில் நின்றான். ஜன்னலும் தள்ளித் தள்ளிப்போய், அதில் இடுப்புக்குமேல் வெளியே எழும்பிநின்ற அந்த உருவத்தோடு ஷண்முகத்தின் பார்வைக்கு மங்கலாகி விட்டது. கார்டு வண்டிக்குப் பின் தோன்றின சிவப்பு விளக்கும், போகும் ரெயிலின் கடைசிச் சின்னமாக ஷண்முகத்தின் கண்களில் பட்டுக் குறைந்துகொண் டிருந்தது.

அவன் சட்டென்று திரும்பி வெளியே பஸ் ஸ்டாண்டில் வந்து நின்றான். பஸ் ஒன்று வந்து நின்றது. முன்னால் மாட்டியிருந்த பலகையைப் பார்த்துக் கொண்டே சரேலென்று பஸ்ஸிற்குள் ஏறி உட்கார்ந்து விட்டான். இரண்டு தடவைக்குப் பிறகு மூன்றாந் தடவையாகக் கிளம்பின கண்டக்டரின் சப்தம் பலமாகக் காதில் விழுந்தது. பஸ்ஸிலிருந்து வேகமாகக் கீழே இறங்கி முன் எட்டுக்கள் போட்டு, புறப்பட்டுவிட்ட பஸ்ஸின் பலகையைக் கூர்மையாகப் பார்த்தான். உதட்டுக்கு உள்ளூற அவனுக்கே சிரிப்பு வந்தது. கண்டக்டர் கூவினது சரிதான்.

காத்திருந்து, தான் போகவேண்டிய பஸ் வந்ததும் ஞாபகம் குறையாமல் ஏறிக்கொண்டான். பஸ் புறப் பட்டது. ரெயிலும் எவ்வளவு தூரம் போயிருக்கும்

என்று அநுமானித்துப் பார்த்துக்கொண்டான். கொஞ்ச நிமிஷங்களுக்கு முன் இருவருடைய குரல்களும் ஒன்ருேடு ஒன்று கலந்து சப்தித்துக்கொண் டிருந்தன. இப்போது—? தூரம் அவர்களை நேர் எதிர்த் திசைகளில் கொண்டு போய்க்கொண் டிருந்தது.

அவன் நினைப்புச் சுழன்றது. அரை வயிற்றுக்குத் தான் சம்பாதிப்பதில் ஆளுக்கொரு பிடி சாப்பிட்டாவது தம்பியை அங்கேயே இருக்கும்படி செய்யவேண்டும் என்றுதான் அவன் விரும்பினுன். தான் படித்து, ஒரு வேலை சம்பாதிக்கிற வரைக்குமுள்ள இடைக் காலத்தில் தான் பொறுத்துக்கொள்ள நேர்ந்த வார்த்தைகள் தம்பிக்கு வேண்டாமே என்ற எண்ணம் அவனுக்கு.

ஆனல் தம்பி தன்னேடு இருந்த அந்தச் சிறிய காலத்திற்குள் இரு மனசுகளுக்கும் எவ்வளவு வித்தியாசம் என்று அவனுக்குத் தெரிந்துவிட்டது. ஒரு நாள் திடீரெனத் தம்பி, "அண்ணு, ஊருக்குப் போகலாம் என்றிருக்கிறேன்" என்று சொன்னபோது அவனுக்கு ஆச்சரியம் ஏற்படவில்லை. "இன்னும் கொஞ்ச நாட்கள் இருந்துவிட்டுப் போ" என்று ஒரு மாதம் நிறுத்தி வைக்க முடிந்தது. அதற்குமேல் முடியவில்லை.

வாழ்க்கை அனுபவம் இன்னும் உடலில் ஏறப் பெருத தம்பியின் குஷால் உள்ளத்துக்கு அந்த இடம் கொஞ்சமும் ஒட்டிக்கொள்ளாமல் இருப்பதை ஷண்முகம் உணர்ந்திருந்தான். உணர்ந்தும் என்ன? தக்கபடி அவனல் ஈடுகட்ட முடிந்தால் தானே!

* * * *

பஸ்ஸிலிருந்து இறங்கித் தன் தெரு வீடுகளைத் தாண்டிப் போய்க்கொண் டிருந்தான். அவன் வீட்டுப்

படி ஏறுவதற்கு இன்னும் ஏழெட்டு வாசல்கள் பாக்கி இருந்தன. "அண்ணு!"—எங்கிருந்தோ ஓர் ஓசை ஓங்கி அவன் காதோடு நெருங்கிக் கூவினது. உதறிக்கொண்டு ஷண்முகம் தன் உணர்வைச் சுற்றித் திருப்பினுன். அது தன் தம்பியின் அழைப்பல்ல. அதே மாதிரி குரல்; அழைத்த தோரணையும் அவனுடையது போன்றதே. தெருவிலே ஷண்முகத்துக்கு முன்னுல் போய்க்கொண்டிருந்த ஓர் உருவத்தை அக்குரல் பின் திண்ணையிலிருந்து கூப்பிட்டது.

"சீ! நல்ல பிரமை! ஓர் இமைப்பில் என்ன பிரமிப்பு ஊட்டிவிட்டது! வைகுண்டம் இங்கே எப்படி இருப்பான்? எவ்வளவோ தூரம் போயிருப்பானே" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான் ஷண்முகம். பனிப் பாதுகாப்பாகத் தலையில் 'கிர்க்கி'க் கட்டுக் கட்டிக் கொண்டு தன் பெஞ்சியில் சாய்ந்து 'ஹிந்து'வை விரித்துப் பிடித்துக்கொண்டு பிரயாணம் செய்யும் வைகுண்டத்தின் சாயல் அவன் அகக் கண்முன் வந்து நின்றது.

பழகின முகங்களைப் பார்ப்பது அபூர்வமாகி விட்டது. மனம் விட்டுப் பேசும் சம்பாஷணைகளுக்குச் சந்தர்ப்பம் இல்லாத, ஒரு தொலைதூர நகரின் ஒதுக்குப் புறத்திலே இளம் மனைவியுடன் தனிக் குடித்தனம் நடத்திவந்த அவனுக்கு வைகுண்டம் வந்தது புதையல் கிடைத்ததுபோல இருந்தது. அந்தச் சிறு அறையிலே நேருக்கு நேர் உட்கார்ந்து பொழுதுபோவது தெரியாமல் இருவரும் வம்பளந்துகொண் டிருப்பார்கள். கிராமத்தைப்பற்றிப் பேச்சு எடுத்து விட்டால் தலைகால் புரியாத உத்ஸாகம். இவற்றையெல்லாம் மௌனமாகக் கேட்டுச்

சௌந்தரம் இவற்றில் பங்கெடுத்துக் கொள்வாள். தனியே இலையில் உட்கார்ந்து சாப்பிடாமல், நேரமானாலும் வைகுண்டத்தின்கூட உட்கார்ந்து சாப்பிட்டால்தான் அவனுக்குத் திருப்தி. வைகுண்டத்தோடு ஈடுபட்டிருக்கும் பேச்சுஸ்வாரஸ்யத்தில் சைகை, லேசான வாயசைப்பு இவற்றுடன் தன்னைச் சௌந்தரம் கூப்பிடுவதுகூட அவன் கவனத்திற்கு வரவே வராது.

ஆனால் இன்று?

ஒட்டி இருந்த தூசிகளைப் போக்கும் முறையிலும், தன் வரவை அறிவிக்கும் ரீதியிலும் பாதங்களை ஒருதரம் படிகளில் தட்டிக்கொடுத்து ஷண்முகம் வாசல் ஏறித் தன் அறை நிலையையும் தாண்டிப் புகுந்தான். அப்பொழுதுதான் அந்த வாசனை அவன் சுவாசத்திலே வந்து கலந்தது. சரேலென்று தலை நிமிர்ந்து பார்த்தான்.

அவன் பார்வை விழவும், குந்தி உட்கார்ந்திருந்த சௌந்தரம் எழுந்து நிற்கவும் சரியாக இருந்தது. இடது கையிலே அடக்கி இருந்த மல்லிகைச் சரம் நெகிழ்ந்து சாண் உயரத்துக்குமேல் ஊசலாடியது. இடது கை விரல் நுனிகள் இன்னும் இரு புஷ்பங்களைப் பிடிக்க வலதுகை விரல்கள் சுருக்கேற்றிக்கொண்டிருந்தன. அந்தப் பாவனையிலே அவள் தன் முகத்தை அவனுக்கு நேராகத் திருப்பினாள். சுவரிலே மாட்டியிருந்த சுவரொட்டியின் வெளிச்சம் அவளது முழுமுகத்தில் நிழலை விரட்டி நின்றது.

அந்த முகத்தைப் பார்த்து அப்படியே விறைத்து நின்றான் ஷண்முகம்.

வெகு அழகாகக் கூந்தலைச் சுருள நெற்றியில் படிய வாரி நடுமத்திக்குக் கொஞ்சம் ஒதுங்கினது போல வகிடு

எடுத்துப் பின்னிச் சுழற்றிப் பிச்சோடா போட்டிருந்தாள். கையில் வளைந்து வரும் மல்லிகைச் சரம் அந்த வளைவிலே போய்ப் படிந்துவிட்டால் அந்த அழகு அம்சம் பூரணமாகிவிடும். முகத்திற்கு அழகூட்டும் நவீன ஸாதனங்களோடு சிரத்தையும் கலந்ததால் ஓர் அலாதியான சோபை முகச் சதைகளிலே ஏறியிருந்தது. நெற்றி நடுவிலே எடுப்பாகக் கண்ணைப் பறித்த, அகன்ற ஊதாப் பொட்டிலே ஜிகினாப்பொடிகள் மின்வெட்டின. ஊசிக் கூர்மைக்குத் தீட்டியிருந்த மை கலந்த இமைக்கோடுகளுக்கு உட்புறத்திலே விழிகள் இமையசைப்புக்கு அசைப்பு அபிநயம் பிடித்தன. தாம்பூலரசம் படிந்த உதடுகளில் ஏறியிருந்த செவ்வொளியின் பிரதிபலிப்புக் கன்னங்களுக்குக்கூட ஏறியிருந்தது.

"அம்பி ஊருக்குப் போயாயிற்று?" என்று தகவல் அறிய வினவும் ஓர் ஆத்திரத்தோடு அவன் முகம் பார்த்து அவள் கேட்டாள்.

அந்தக் கேள்வியே அவன் செவியில் தாக்காதது போன்ற பாவனைதான் அப்போது அந்த முகத்திலே தோன்றியது.

பளிச்சிடும் வைரக் கம்மல்களுக்கு அடியிலே ஊசலாடும் டோலக்குகளிலே அவன் கண்கள் ஒரு கணம் பறிபோய் நின்றன; மறுகணம் தலைப்புப் பின்புறமாக விசிறிதொங்கும் புது மோஸ்தர்ப் புடைவைக் கட்டிலே பட்டுநின்றன. ஒரு வெறித்த பார்வைதான் அந்தக் கண்களில்!

சௌந்தரம் கீழே குனிந்து இன்னும் இரண்டு மல்லிகைகளைக் கைகளில் சரிப்படுத்திக்கொண்டே

"ஓஹோ, அம்பி ஊருக்குப் போனதிலே நான் கேட்டது காதிலே விழவில்லையா?" என்று கேட்டவள் சிரித்துக் கொண்டே நிமிர்ந்தாள்.

தன் தொனியை அவள் மாற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று. அவளது உறுத்தின பார்வை சுருக்கென்றது. ஆனாலும் பெண்களுக்கு உண்டான இயல்பில் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "ஏன், என்ன யோசனை பண்ணுகிறீர்கள்?" என்று விரைம் புரியாமல் கேட்டாள். அவள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே ஷண்முகம் முன்னிலும் கடுப்பாவது, அவன் கண்களின் உறுத்தல் வலுத்த நிலையாக நிற்பது, உதடுகள் அமிழ்த்திக் கீழ்ப் பாகம் இறுகுவது முதலிய மாறுதல்களைக் கண்டுவிட்டாள். அவள் மனம் பரபரப்படைந்தது. வாயசைக்காமல் தீவிர முகக் குறியுடன் விழிகளைக் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். கைப்புஷ்பம் தொடுபடாமல் நின்றது.

ஷண்முகம் சட்டென்று திரும்பித் தோள் மீதிருந்த துண்டைச் சாய்வு நாற்காலியின் முதுகில் போட்டுக்கொண்டே அதில் உட்கார்ந்தான்.

"அம்பி ஊருக்குப் போயாகிவிட்டதா என்று கேட்டேனே; பதில் சொல்லக்கூடாதா?" என்று ஈனஸ்வரத்திலே அவன் முதுகுப்புறமிருந்து சௌந்தரத்தின் குரல் கேட்டது. அவ்வளவுதான். அதற்கு மேல் தன் ஆத்திரத்தை அவனால் அடக்க முடியவில்லை. மௌனத்தைக் காப்பாற்றச் சக்தி இல்லை. "ஏன்? அவன் இங்கிருக்க உனக்குப் பிடிக்கவில்லையாக்கும்?" என்று சீறி விழுந்தான்.

அதைக் கேட்டதும் செளந்தரம் வெலவெலத்துப் போனாள்: "என்ன! என்றைக்காவது நான் அப்படிச் சொன்னேனா?" என்று பதறிப் பேசினாள்.

ஷண்முகம் ஏளனமாக ஒரு சின்னச் சிரிப்புச் சிரித்து, "நீ சொல்லவேண்டுமா! உன் கோரம் காட்டுகிறதே, போதாதா?" என்று சிடுத்துச் சொன்னான்.

"என் கோரம் காட்டுகிறதா? என்னது? எனக்குப் புரியவில்லையே! எதற்கு இப்படி என்னை......?" செளந்தரத்தின் குரல் தழுதழுத்து வந்தது.

"இல்லை, உன் அழகு காட்டுகிறது! இந்த அலங்காரத்துக்கு அவன் தொலையக் காத்திருந்தாயாக்கும்!" என்று அவன் சொல்லும்போதே செளந்தரம், "ஹா" என்று கூவிவிட்டாள். தேகம் முழுதும் ஒரே திரியாகச் சிலிர்த்துக்கொடுத்தது. அழுகை கொதித்து வந்தது. "ஐயோ! இதென்ன வார்த்தை! நானா...." என்று துடிதுடித்துக் கேட்டவள் வாக்கியத்தை முடிக்கவில்லை.

"சீ! மிருகம், போ தள்ளி!" என்றுதான் அவன் நாக்கு விசும்பியது. தன்னை அறியாமல் அவனைத் தொடப்போன கைகளைப் பின்னரித்துக்கொண்டாள். அப்போது நின்ற நிலைதான்; அசைவற்ற சித்திரமாக இன்னும் நின்றுகொண்டிருந்தாள்.

* * * *

யௌவனமும் உத்ஸாகமும் கலந்து கொப்புளித்துக் கொண்டிருக்கும் வனப்பு உருவம் செளந்தரம். கிராமத்தில் புருஷன் வீட்டிலே சமையலறையோடு மட்டும் உறவுகொண்டு புழுங்கிக்கொண்டிருந்த அவள் உள்ளத்துக்கு, நகர வாழ்க்கை சுதந்திரம் கலந்த ஒரு

களிப் புணர்ச்சியைக் கொடுத்திருந்தது. மனத்தை விட்டுப் பிடித்துத் தன் ஆசைக்கு இணங்க இன்ப வாழ்க்கை நடத்தி வந்தாள். நகாமோஸ்தரிலே கண் வைத்துப் புதுப்புது விதமாக, தினுசு தினுசானபடி யெல்லாம் தன்னை அலங்கரித்துக் கொள்வாள். கர்நாடக மான கிராமத்து நடையுடை பாவனைக்கு நேர் எதிரிடை யாக, அந்திப் பொழுது வரவும் தலைப்புப் பின்னல் முதுகுப்புறம் விசிறி தொங்க, முன்புறம் புடைவை நுனி கட்டைவிரல்களிலே பட்டு விசிறும்படியாகத் தழையைத் தழையக் கட்டிக் காதுகளிலே, சென்ற வருஷம் நிகழ்ந்த பெருட் காட்சியில் கணவன் வலிய வாங்கிக்கொடுத்த டோலக் அசைவுக்கு அசைவு பலவிதமாக ஆடி ஒளியேற்ற, பிச்சோடாவுக்கு மேலாகக் கனகாம்பரம் வளைவாய்ப் பின் தலையை அழகாக அணைந்து நிற்க, உத்ஸாகத்தோடு அவனது சிறு நடைக்குச் சமமாக எட்டு வைத்துக் கடற்கரைக்குப் போகும்போது அவளுக்கு எத்தனை கர்வம்!

ஆனால் வைகுண்டம் நாளை ரெயிலில் வந்து தங்க ளோடு தங்கப் போகிறான் என்றதும், விட்டுப் பிடித்த மனத்திற்குக் கட்டுப்பாடு இயற்கையாகவே வந்து விட்டது. ஓடவிட்டிருந்த ஆசையை இறக்கிப் பிடித்து விட்டாள். தன்னை இந்த மோஸ்தரில் தன் மைத்துனன் பார்த்துவிட்டால் எப்படி நினைத்துக்கொள்வானோ என்ற கூச்சம், வணக்கம் எல்லாம் சேரவே தன் ஜோடனையிலே சாதாரணமாகிவிட்டாள்.

அதைப்பற்றி ஷண்முகம் பரிகசித்துப் பேசினதற்கு, "உங்களுக்கு என்ன? ஊரில் போய் அவர் சொல்லி விட்டால் அப்புறம் எனக்கு வெட்கமாக இருக்கும்.

பெரியவர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள்?" என்றாள்.

"நானே அவர்களிடம் சொன்னால்?" என்றான் ஷண்முகம்.

"நீங்கள் சொல்லமாட்டீர்கள்; தெரியும்" என்றாள் சௌந்தரம்.

அதன் பிறகு ஷண்முகத்திற்குச் சௌந்தரத்தின் ஜோடனையில் கவனம் செலுத்த அவகாசம் இருந்தால் தானே? ஆபீஸ்நேரம் போக மீதியெல்லாம் தம்பியோடு குஷால் பேச்சுக்குத்தானே இடம்?

வழக்கமாக இளந் தம்பதிகள் கடற்கரைக்குப் போய்க்கொண் டிருப்பதும் நின்றுவிட்டது. நடுவே ஒரு நாள் சௌந்தரம் ஆரம்பித்தாள்: "இன்று நானும் பீச்சுக்கு ........"

"இல்லை. தம்பியும் நானும் காங்கிரஸ் மாளிகைக் கூட்டத்திற்குப் போகப் போகிறோம். ஆமாம், என்ன பீச்சு வேண்டியிருக்கிறது, குளிர்காற்றிலே?" என்று சொல்லிக்கொண்டே புறப்பட்டுவிட்டான் ஷண்முகம்.

"ஆமாம், நான் கேட்டால் அப்படித்தான்.." என்றபடியே சௌந்தரம் திரும்பி உள்ளே போய்விட்டாள்; "அங்கிருந்து வரும்போது தையல் இலை வாங்கி வாருங்கள்" என்றாள். குரல் சற்றுக் கடுகடுப்பாகவே தான் இருந்தது.

இந்த ரீதியில் ஒவ்வொரு சந்தர்ப்பமும் ஏற்பட்டுச் சௌந்தரத்தை மறுபடியும் கிராமச் சமையலறைப் பெண்ணாகவே செய்துவிட்டது. சந்தர்ப்பத்தோடு அவள் குணமும் சேரவே பூரணமாக ஆகிவிட்டது.

"மைத்துனன் வந்தது முதல் சௌந்தரத்தின் நடமாட்டமே தெரியவில்லையே! என்ன மாறுதலடியம்மா?" என்று கூடக் குடியிருப்பவர்கள் எல்லாம் அவளைப் பரிகசிப்பார்கள். "பெரியவர்களுக்குப் பயப்பட வேண்டித்தானே இருக்கிறது?" என்பாள் சௌந்தரம்.

"அது யதார்த்தமடி சௌந்தரம்", "அதுதான் குணம்" என்று அவள் நடத்தையை எல்லோரும் பாராட்டுவார்கள். அவை அவளுக்குப் பெருமை தரும்.

அந்தப் பெருமையிலும் ஆசையிலுந்தான், தன் மைத்துனன் ஊருக்குப் போக அபிப்பிராயப்பட்டதாகக் கணவன் சொன்னபோது, "இங்கேயே இருக்கச் சொல்லுங்களேன் அவரை. ஊருக்குப் போவானேன்?" என்று அவளாகவே சொன்னாள்.

ஆனால் வைகுண்டம் தீர்மானமாகப் புறப்பட்டு விடவும், 'சரி, நாம் என்ன பண்ணுவது? சாதிக்கிறாரே' என்று இருந்துவிட்டாள்.

கணவனும் வைகுண்டமும் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டுப்போய்ச் சிறிது நேரம் ஆகியிருக்கும். மைத்துனன் பிரயாணத்துக்குச் செய்துகொண்டிருந்த ஏற்பாட்டு அவசரத்தில், தன் சாதாரண ஜோடனையைச் செய்துகொள்ளக்கூட அவளுக்கு அவகாசம் இல்லை. இருட்டுவதற்குள் முகம் பார்த்துக்கொண்டுவிட வேண்டும் என்று பின்னிக்கொள்ள உட்கார்ந்துகொண்டாள். கண்ணாடி பார்த்து வகிடு வாரிக்கொள்ளும்போது கைப்போக்குச் சரியாக விழவில்லை. இப்போது எடுத்துக்கொள்ளும் நேர் வகிடுக்குச் சற்றுத் தள்ளிப் பழைய கோணல் வகிட்டின் ஆரம்ப இடம் இப்போது கண்ணில் விழுந்தது தான் தாமதம்: உடனே கூந்தலை நேராக வாரி

வகிட்டைக் கலைத்தாள். பழைய கோணல் வகிட்டை எடுத்தாள். வெகு லாவகமாக, நேர்த்தியாக, அவள் இதுவரை அலக்ஷியமாக விட்டிருந்த அந்த வகிடு பாதை விட்டது.

"மாமி, மல்லிகைப் புஷ்பம் வந்திருக்கு" என்று குடியிருக்கும் வீட்டுச் சிறுமி அப்போது கத்திக் கொண்டு வந்தாள். ஓர் இமையசைப்பு நேரம் சௌந்தரம் தயங்கினாள். உடனே அவசரக் குரலில், "போய்க் காலணாவுக்குக் கால்படி வாங்கிவா" என்று அந்தச் சிறுமியை விரட்டிவிட்டுத் தொங்கவிடத் திட்டம் போட்டிருந்த பின்னலைப் பிச்சோடா போட்டுக்கொள்ள மாற்றி விட்டாள்.

பிச்சோடா போட்டுக் கொண்டாள். தன்னை அறியாத உத்ஸாகம் அவள் மனத்திலே குபீரென வளர்ந்தது. நன்றாக அலங்கரித்துக்கொள்ள வேண்டும் என்ற வெறி நினைப்பு க்ஷணத்திலே ஜனித்தது. பழைய ரிப்பன்களை உதறி எறிந்து விட்டுப் புதியவற்றை முடிந்துகொண்டாள். குழாயடியிற் சென்று சில கால மாக இல்லாத சிரத்தையோடு முகம் கழுவி 'மேக் அப்' செய்துகொண்டாள். மிளகு அளவில் இருந்த சாந்துப் பொட்டுக்குப் பதில் பவுன் அளவுக்கு வர்ணக் குங்குமப் பொட்டு இட்டாள். தன் முகம் க்ஷணத்துக்கு க்ஷணம் அழகாகிக்கொண்டு வருவதைக் கண்ணாடியில் பார்க்கப் பார்க்க அவள் உத்ஸாகம் அதிகமானது. தாவியோடிப் பெட்டியைத் திறந்து டோலக் அணிந்துகொண்டாள். அதோடு இரண்டு ஊதுவர்த்திகளும் வந்தன. மறு படியும் கண்ணாடியில் பார்த்துக் காதுகளுக்கு அசைவு கொடுத்து டோலக்குகளைச் சரி பார்த்துக்கொண்டாள்.

அவள் இன்ப நினைவு விசாலமடைந்தது. உடுத்திருந்த சாதாரணப் புடைவைக்குப் பதில் பகட்டானதை எடுத்து அணிந்து கொண்டாள். சந்தேகத்துக்கு மறுபடியும் கண்ணாடியில் பார்த்துக்கொண்டாள். அவளுக்குத் திருப்தி தரும் ஒரு பூரணம் ஏற்பட்டு விட்டது. புஷ்பம் தொடுக்க உட்கார்ந்தாள். பரபரப்பாக மல்லிகைத் தொடர் நீண்டுகொண்டு வந்தது.

* * * *

அந்த நிலையிலேதான் ஷண்முகத்தின் கண்கள் அவளைப் படம் பிடித்தன.

ஆனால் அவன் மனத்திலே எதிர்த்து விழுந்த படம் வேறுவிதமாக இருந்தது.

அடுத்து, அவன் வாயிலிருந்து கிளம்பின முறிவு வார்த்தை அவள் இன்பநிலைப் பொறியைத் தட்டி அவித்துவிட்டது.

இருவரும் வாய்கொடுத்துப் பதில் வாங்க வெகு நேரம் ஆகிவிட்டது. அந்தப் பொழுது எப்படிப் போனதென்ற நினைவே இருவருக்கும் இல்லை.

'இன்பப்பொறி அவிந்துபோனது போகட்டும். வேதனைக் கனிவாவது இல்லாமல் இருந்தால் போதுமே' என்ற ஏக்கம் செளந்தரத்தின் கண்களில் இருந்தது.

'வேதனை நினைவுக்குத் தூபம் போட்டுவிட்ட சந்தர்ப்பத்தை நிவர்த்திக்கவேண்டுமே' என்ற அங்கலாய்ப்பு ஷண்முகத்தின் மனத்தில்.

கணவன் தன்னைக் குத்திச் சொன்னதிலே உண்மை இருக்குமா என்று செளந்தரம் ஆராய இடங் கொடுத்தாள். 'இல்லை' என்றது முதல் தீர்ப்பு. உடனே, 'அப்படியானால் ஏன் இத்தனை நாளும் இல்லாதபடி இன்று

சந்தர்ப்பமாறுதலை உபயோகித்துக் கொண்டேன்! மனத்திலே கல்மஷம்...' என்ற நினைவு தொடர்ந்தபோது தேகம் குலுங்கினது. அடுத்து, 'ஆமாம், என் மனத்தில் கல்மஷம் இல்லை. ஆனால் நான் செய்திருக்கக்கூடாது; கூடாது' என்று முடிவு செய்துகொண்டாள்.

சௌந்தரத்தின் தோற்றத்தால் தனக்கு உண்டான நினைப்பின் தன்மையை அலச ஷண்முகத்தின் மனம் ஆழ்ந்தது. 'ஆமாம்' என்றது முதல் தீர்ப்பு. உடனே, 'ஆனால் இதுவரை இவள் காட்டாத, ஆமாம், நான் கண்டிராத இந்த மனப்பான்மை இன்றுமட்டும் திடீரென் எப்படி ஏற்பட்டது?' என்று தொடர்ந்தபோது அன்று, 'அவரை இங்கேயே இருக்கச் சொல்லுங்களேன். ஊருக்குப் போவானேன்?' என்று அவள் பேசினது நினைவில் ஏறியது. மனம் சங்கடப்பட்டது. சிறிது நேரம் தொடர்ந்து, 'சீ சீ! அவள்தான் ஏதோ செய்து விட்டாள், என்னவோ நினைப்பில்! இதைப் போய்ப் பிரமாதப் படுத்தினேனே, முட்டாள்!' என்று நினைத்தான். இருவர் நினைவுகளும் இந்த நிலையிலே வந்து நின்றன. ஊதுவர்த்தியின் கடைசிப் புகைச் சுழலும் தன் வாசனையைக் காற்றிலே கொட்டிக்கொண்டு ஜன்னலுக்கு வெளியே போய்விட்டது.

சௌந்தரம் ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு வாயசைத்து ஏதோ கேட்கப் போனாள். ஆண்குரல் முந்திக்கொண்டு விட்டது.

"ஹூம். பாலைக் கொண்டுவா" என்றான் ஷண்முகம் திரும்பாமலே; தொனி நெகிழ்ந்து வந்தது. முந்தின இறுக்கம் அதில் இல்லை.

# வாழ்க்கை

"போயும் போயும் நிலம் வந்து வாங்கினோமே, பாழாய்ப்போன ஊரிலே! குடி தண்ணிக்கு வழி இல்லே. எடுத்துக்கிட்டு வாடா அரிவாளே, பெட்டியிலே இருந்து" என்ற வார்த்தைகளுக்கு முன்பு நடந்த விஷயங்கள் வருமாறு:

பட்டுப் பட்டுப் பழகிப்போன மிராசுதார் மாமா வுக்கே தாங்க முடியாத வெப்பம். அறப்புக் களம். பட்டுப் படைக்கிற வெயில். நிழலின் சாயை பர்லாங்கு தூரத்துக்கு விழாத ஒரு பொட்டலிலே - சுடுகாட்டிலே என்றுகூடச் சொல்லலாம் - அறங்கட்டை வெளியிலே களம் கூட்டி இருந்தாள் பள்ளி. ஏறிப் போயிருந்த ஒற்றை வண்டி நிழலிலே ஏறும் வெயிலுக்குத் தக்கபடி ஒதுங்கி ஒதுங்கி ஒண்டுவதைத் தவிர வேறு ஒரு வழியும் இல்லே. கண்முன்னே அனல் பூச்சி பிடித்து ஓடிக்கொண் டிருக்கிறது.

மாமாவின் வாயிலிருந்து வார்த்தை சீறி விழுந்தது. "ஏன் புள்ளே, ஏன், அந்தக் காட்டுமேலே கூட்டி வைக்கிறதுதானே? குத்துக்கல்லு குத்துக்கல்லா இருக் குமே; களத்துலே நெல்லு கனமாக் கிடக்கும்."

"இல்லேப்பா. வகையாக் களம் சிக்கல்லே. வேணுமின்னு...."

"அது எப்படிச் சிக்கும்? அறகங்கட்டையிலே செதுக்கிணுத்தானே களம் கூட்டறபோது அறுப்புக்காரன், 'இதுக்கு மேலே கூட்ட வல்லீங்க. நெல்லு நின்னுக்கிது'ன்னு விட்டுட்டுப் போயிடுவான்? அதெல்லாம் கோளாறாகத்தான் செய்யவே, உன் பாட்டைப் பார்த்துக்கிறதுக்கு?"

"அவருதான் இங்கிட்டுக் கூட்டச் சொன்ணுரு."

"அவன் சொன்ஞ? ஏன் சொல்லமாட்டான்? வீடு அந்தா இருக்குது. தலைச்சுமையா வெக்கக் கட்டைக் கொண்டுட்டுப் போயிரலாம். பள்ளக் களத்திலே வச்சு மழை பெய்தால் அவதிப்படறது ஐயன்தானே? அவனவன் பாடுதாண்டா அவனுக்கு! என்னடா, மணி இரண்டாச்சு. பொளுது சாஞ்சுக்கிட்டு வருது. இன்னும் களத்திலே கட்டைக் காணும். இவனெல்லாம் கொத்துக்காரன்னு வந்து பேசிக்கிட்டான்."

ஃ

மிராசுதார் மாமாவின் படபடப்பை அதிகரிக்கச் செய்வதற்கு அங்கு இருந்த சந்தர்ப்பம் ஒவ்வொன்றம் உதவி செய்ததே தவிர, 'குளுமை'க்கும் சுமுகத்துக்கும் அங்கே ஹேது இல்லை.

பகவான் கொடுத்த சொத்து, பூமி என்றெல்லாம் தாம் சொல்லிக் கொள்ளும் அந்தக் களிமண் கட்டிப் பரப்பு அத்தனைக்கும் அந்த வெயிலில் கொத்துக்காரன்தான் ராஜா. அவன் இஷ்டப்படிதான் அங்கே. இருபது ஆட்கள் நாலைந்து நடை கம்மாய்க் கரை மேலே அரை மைலுக்குமேல் சுருட்டி நடந்து கதிரடித்துக் காற்றுப் பார்த்துப் பொலி விட்டு அளவு பிடித்துக்

குறிபோட்டு நெருஞ்சியும் கள்ளியும் புடை சூழ ஊருக்குத் திரும்பப் பவனி போகவேண்டும்.

இருட்டிலே போகவேண்டிய அந்தப் பாதையைப் பற்றி ஒரு வார்த்தை; புழுதி ஓட்டிக்கொள்ளும் பாதையில் நேரே, ஒரு பக்கம் நெருஞ்சி, மறு பக்கம் கொடிக்கள்ளி, இரண்டோடும் உறவு கொண்டாடாமல் நடந்துபோனால்தான் பிழைக்கலாம். வண்டிப்பாதையும் அதுதான். வலத்துக் காளையின் கால்கள் கள்ளிக்கட்டை களுக்கு இடுக்கிலும் இடத்துக் காளையின் குளம்புகள் நெருஞ்சி படர்ந்த மணல் புற்றுக்கள்மீதும் சதக் சதக்கென மிதித்துப் போடும்போது உள்ளுக்குள்ளே உட்கார்ந்துபோகிற ஆத்மாவுக்கு கோயில்கட்டி வைத்து விடலாம். வண்டிக்காரன் பாடு தீராப்பொறி.

இந்த ரீதியில் பவனி வந்து இறங்கின நிலையில் அறுகங்கட்டைக்களம், பள்ளி தந்திரம், பொட்டலடி, காலிக் களம், அனல் ஓட்டம் இத்தனையும் சேர்ந்தன. "களத்திலேதான் கட்டைக் காணும்; வயிற்றிலே இரண்டு இளநீரையாவது போட்டு வருவோம்" என்று அரிவாளை எடுத்து வரச் சொன்னார் மிராசுதார் மாமா. குடி தண்ணீருக்கு வசதி இல்லாத ஊரில் நிலம் வாங்கின சலிப்பு, குரலில் கலந்தது.

அதற்குப் பதில் உடனே வந்தது; "சாமி, சாமி! அப்படிச் சொல்லாதீங்க. தங்கம் பெத்த நிலமில்லெ! மவராசன் கையிலெ தங்கமான்னு சொரியுது? என்ன ஐயா கவுண்டரே! நீ சொல்லு." இதைச் சொன்ன உருவம் முறுக்கு மீசையும் முண்டாசும் தடிக்கையுமாக வண்டி அணைப்பில் நின்றுகொண்டிருந்தது. அந்தப் புரவுக்கு அவன் தலைக்காவல்.

"காளிமுத்தண்ணன் சொல்றது சரிதான். ஜமீன்தார் காலத்துலே ஒருதவா இங்கிட்டு வந்திருப்பாருன்னு நினைச்சே? அவனவன் சாப்பிட்டு ஏப்பம் விட்டுட்டுப் போனது போனது, வந்தது வந்ததுதான்" என்பது கவுண்டரின் பதில். பிரஸ்தாப ஸந்தர்ப்பத்தில் மிராசுதார் மாமாவின் வயலை வாரத்துக்கு ஒப்புக்கொண்ட உழுபடைக்காரன் அவன்.

"ஆமடா, எல்லாரும் மச்சு வீடு கட்டித்தானே பிழைக்கிறீங்க? பார்க்கிறேனே. ஐயனும் அசந்தா ஒரு கை...."

"ஹூம். இந்தா சொல்றீகளே. துரோகம் நினைச்சாய் அந்தா பாருங்க: செட்டியாருக்கு அரை மா, ராவுத்தருக்குக் காணி கிரயம்."

"ஏன்? வீடு நிலக்கோட்டையானுக்குன்னு ஒத்தி வைத்துப் போட்டுப் பருத்திக் காட்டிலே பழி கிடக்குது, அண்ணாந்து பாத்துக்கிட்டு" என்று சேர்வையும் கவுண்டருமாக ஆளுக்குப் பாதி சொல்லி நிறுத்தினார்கள்.

"ஹூம்! நீங்க சொல்றேள். எல்லாத்துக்கும் புத்தி இருந்துச்சுன்னாத் தானே? கால் கஞ்சி அரை வயித்துக்காவது குடிக்கணுங்கிற நினைப்பு வேண்டாம்? சரி, தோப்பைப் பாத்துட்டு வறேன். கவுண்டா, கருதுக்கட்டு வந்தவுடனே குறக்கிக் கிழக்காலே போடச்சொல்லிப் படப்பை கெட்டுக்குப் போட்டு ரெவ்வெண்டு அடி அடிச்சு போடச் சொல்லு."

"சரி; போய் வாங்க. என்னவோ, எங்கப்பன், பெரிய ஐயா காலத்துலே இருந்து தர்மதுரை காலிலே விழுந்து கிடக்கிறோம். நீங்க பாத்து எதுவும் பண்ணிக்கிட்டாத்தான். உங்க கையை விட்டுமாத்திரம் நிலம்

பறந்திச்சு, அப்புறம் இது நிலம்னு ஆகும்னு பாத்திங்க? ஹூம். ஏது?''

''அதெல்லாம் குழையக் குழையத்தான் பேசுவே! சரி, சந்தனக் குடும்பா! நட. காளிமுத்தா, சும்மாத் தானே நிக்கிறே?''

''வாறேன், போங்க.''

மாமா புறப்படவும் இரண்டு மூன்று முண்டாசுகள், தடிக் கம்புகள், அரிவாள்கள் எல்லாம் துணை புறப் பட்டன. இத்தனை பேச்சுக்கும் இடையில் மௌனக் குரலாக – ஆனால் எனக்குள்ளே பேசிக்கொண் டிருந்த – என் உருவமும் சேர்ந்துகொண்டது.

நாவறட்சி உண்டாகும் இந்த வெப்பத்தை எதிர்த்து எவ்வளவு நேரந்தான் சமாளிக்க முடியும், ஹாஸ்டல் அறைகளிலும் கடற்கரை ஓரத்திலும் ஜிலுஜிலுவென்ற காற்றை வாங்கிக் குஷியாகக் காலங் கழித்த உடலுக்கு? என்னவோ நப்பாசை, ஒரு தரம் களத்துக்குப்போய் அறுவடை முழுவதும் தெரிந்துகொண்டு விடவேண்டு மென்று. அப்புறம் நானும் கிராமவாசி: 'கிராமத்துக்குப் போ' என்று கூவும் கூட்டத்தில் கோவிந்தா போடலாம் அல்லவா?

மேலே சொன்ன ரீதியிலே பேசிப் பேசிக் கிராமங்கள் அலுத்துப் போனதாகத் தெரியவில்லை. அலுப்புச் சலிப்பு இல்லாமல் பரஸ்பரம் முகஸ்துதி யையும் ஏச்சையுமே பரிமாறிக்கொண்டு பண்பட்டுப் போன நாக்குகளாக அத்தனையும் பட்டன. எனக்கு அங்கு நடந்து வரும் செய்கைகளுக்கு மேலே பேச்சு அதிகம் என்ற நினைப்பு ஊறியது. கீழே வரும் சம்பாஷணைகள் இதை வலியுறுத்தின.

அந்தரத்தில் கம்பிமேல் நடப்பதற்கும் வரப்பு மேலே நடப்பதற்கும் வித்தியாசம் இருப்பதாகத் தெரியவில்லை. அத்தனை கைவீச்சும் நிதானமும் வேண்டியிருந்தன, சமாளித்து எட்டு வைப்பதற்கு. தார் ரோடிலே எட்டிப் போடும் எட்டு அங்கே செல்லாது. நண்டு வளைகளுக்கும், மடைகளுக்கும், மேலே குத்துக் குத்தாக நின்ற களிமண் கட்டிகளுக்கும் மேலாகத் தாறுமாருக நிதானம் இல்லாமல் போட்ட என் கால்களைப் பார்த்துப் பின்னாலே வந்த முண்டாசு, "சின்ன ஐயாவுக்கு நடந்து பழக்கமில்லேபோல் இருக்கு; பையப் போங்க, சாமி" என்று கூறவும் அதை ரஸித்து அத்தனை பட்டிக்காட்டுச் சிரிப்புகளும் கிளம்பின. 'பட்டிக்காட்டானு?' என்று ஓர் இடத்தில் ஏளனமாகப் பேசப்படுகிறது. இங்கேயோ இந்தச் சிரிப்புகள் 'பட்டினத்தானு?' என்று ஏளனம் செய்கின்றன.

வரப்பு வரப்பாகக் கடந்துகொண்டிருந்தோம். திடீரென்று, "ஸ்ஸ்.... இருடா. அதென்ன சப்தம்? அழுகை மாதிரி இருக்கே? அதென்னடா, சந்தணம்?" என்று மாமா கேட்டார். என் காதிலும் அப்போது ஓலக் குரல் விழுந்தது.

சந்தணம் விளக்கினுன்: "ஆமாங்க நம்ப செங்குளத்து ஐயரு மவன் இறந்து போயிருச்சு, அந்தா பொழுது உச்சிக்கு வர நாலு நாழிக்கு முந்தி. சின்னப் பள்ளிக்கூடத்திலே படிச்சுக்கிட்டு இருந்துச்சுங்க இல்லையா?"

"ஆமடா. பத்து நாளா உடம்பு குணமில்லேன்னு பேசிண்டா. ஒரே பிள்ளை. போயிருச்சா? அட பாவமே!"

"அந்தக் கிழட்டு ஐயரு போடற சப்தம் எம்மாந் தூரத்துக்குக் கேக்குது? அடேயப்பா! சகிக்கலீங்க" என்று காளிமுத்தன் தொடர்ந்து சொன்னான்.

"ஹூம்! போகுது. அதுக்குத் தலைவிதி முடிஞ்சுது. அல்பாயுசு; அவ்வளவுதான். யாருடா அது அங்கே? வேலுதானே, கொடிக்காலுக்கு அங்கிட்டு?"

'பார்' வேலைக்காரன் கைமாதிரி மாமாவின் வாயிலிருந்து சடாரென்று மாறின தொனியில் வார்த்தை கிளம்பினதை நான் க்ஷணத்தில் கிரஹிக்காமல் இருக்க முடியவில்லை. ஏனென்றால் ஒரு மரணச் செய்தி காதில் விழவும் சாவின் தன்மையைக் கொஞ்சம் நினைத்துப் பார்க்கிற உள்ளத்தில் நினைவு மறைந்து போகுமுன் புது அர்த்தபுஷ்டியான வார்த்தைகளைத் தொடர முடியவில்லை.

"ஆமாங்க, வேலுதான் — ஏ, தேவரய்யோய்.." என்று கூவினான் சந்தனம்.

"அட, அவனாக வரானா பார்ப்போமே. கெடுத்து விட்டாயே காரியத்தை. அவசரக் குடுக்கை! விட்டுப் பார்க்காமே? ஒளிஞ்சுக்கிட்டுத் திரியறான் அவன்."

"இல்லீங்க. இங்கிட்டுத்தான் வருவாரு" என்றான் காளிமுத்தன்.

செங்குளத்து ஐயர் மகன் சாவுப் பேச்சிலிருந்து மாறின சம்பாஷணைக்கு அந்தச் சுற்றுப்புறமே ஒத்துக் கொண்டுவிட்டது. தேவனும் காது கேட்கும் தூரத்தில் வரவே மாமா, "சந்தனம், தேவரு இங்கிட்டு எதுக்கு வாராரு? அவருக்கு இப்போ பெரிய இடமா சிக்கிக்கிச்சு. லக்ஷியமா பண்ணுவார்?" என்று கிண்டல் செய்து கொண்டே நடந்தார்.

வேலு மேல் துண்டை எடுத்து மரியாதைக்காகப் புஜங்களில் வளைத்துக்கொண்டே, "ஆமா, பண்ணையை விடப் பெரிய பண்ணை இந்தச் செங்கட்டான் பட்டியிலே ரொம்பப் பேரல்ல இருக்காங்க?" என்றான்.

மறுபடியும் பல்லவி ஆரம்பம்.

"ஆமடா, சக்கரையாப் பேசுவே இல்லே? போன வருசத்துக்குக் குத்தகைப் பணம் பாக்கி கிடக்குது. தீர்க்கவழியில்லே, போகிற இடம் வருகிற இடம்னு."

"அது இல்லாமே எங்கிட்டுப் போயிருங்க? பருத்தி போட்டிருக்கேங்க. அந்த விளைச்சலே அப்படியே கொண்டிட்டு வந்து கொடுத்திரணும்னுதான் நேத்துக்கூடச் சந்தணங்கிட்ட சொல்லிக்கிட்டு இருந்தேங்க. என்னப்பா, சந்தணம்?"

"வேலிக்கு ஓணான் சரியான சாக்ஷிதான் — தோப்புக்குக் கடவு எங்கேடா? மேற்கே இருந்தா?"

"இல்லீங்க. ஆட்டுக்காரப் பசங்க தூரட்டுப் பண்ணுதுங்கன்னு அடைச்சுப்புட்டேங்க. கிழக்காலே வாங்க" என்று சந்தணம் முன் ஓடிக் கடவு பிடுங்கிவிட்டு வழியில் கிடந்த முட்களை ஒதுக்கி எறிந்துதள்ளி நின்றான்.

அழுகைச் சப்தம் பலத்து வந்து விழுந்தது.

"மாமா, அதோ பாருங்க" என்று தோப்பை அடுத்துள்ள ஓடையின் மறுகரையைச் சுட்டிக் காட்டினேன்.

"இதுதான் இந்த ஊருக்கு மசானம்; இப்போ பேசிக்கொண்டிருந்தோமே, அந்தப் பையனைத் தகனம் செய்ய வந்திருக்கிறார்கள். சரி, நாம்ப மேற்கே போவோம். அவர்கள் போன பிறகு இங்கே வருவோம். கண்ணராவியைப் பார்க்காமே திரும்பு" என்று கால்களைத் திருப்பிக் கிழக்கு நோக்கிப் போட்டார்.

"அதான் சரீங்க. எதிர்க்க நின்னு மாதிரியாகத் தான் இருக்கும். வாங்க சாமி சின்னச் சாமி" என்று என்னை அழைத்த பிறகுதான் நானும் சேர்ந்து அடி எடுத்து வைத்தேன். அந்தத் தோற்றத்தையே அது வரையில் பார்த்துக்கொண் டிருந்து விட்டேன்.

முதல் தடவையாக மசானத்தை அப்போதுதான் பார்க்கிறேன். நகரத்துத் தெருக்களில் பாடைகள், அழுகை, சங்கு, தம்பட்ட முழக்கங்களோடு எங்கேயோ மூலை திரும்பிப் போவதைத்தான் பார்த்திருக்கிறேன். வாழ்க்கை ஓய்ந்துபோய் அலுப்பு ஆற்றிக் கொள்வதற் காக ஏற்படுத்தி இருந்த அந்த இடத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. விவரந் தெரியாத, ஆனால் மிகவும் கோரமான ஒரு கற்பனைதான் எனக்கு யூகம், கேள்வி இரண்டின் மூலமாகவும் பதிந்திருந்தது. அந்தக் கோர மான கற்பனையை நடப்போடு ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டே நடந்தேன். சில எட்டுக்களுக்கு ஒருதரம் கண்மட்டும் திரும்பித் திரும்பி, அலறலும் கூட்டமும் நிறைந்த அந்த இடத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தது.

முதல் பார்வையில் ஓடையின் எதிர்க் கரையில் ஒரு மேட்டின் நடுவே அடுக்கி இருந்த விறகு எருக் களிடையே பளிச்சென்று தெரிந்தது, அந்தச் சின்ன உருவம். அடுத்த கண் வீச்சின்போது மேலே மேலே அதன்மீது எருக்களை அடுக்கிக்கொண் டிருந்தார்கள். ஐயோ! ஒவ்வோர் எருவும் அந்தச் சிறு உடலை மறைக்கும்போது எத்தனை குரல்கள் அலறித்துடித்தன! ஒவ்வோர் அலறலும் என்னைக் குலுக்கி எடுத்தது. சகிக்க முடியாமல், "என்ன கண்ணராவி இது!" என்று

எல்லோருக்கும் முன்னால் காலடிகளை எட்டிப்போட்டேன். அழுகைக் குரல்கள் என் பின் மெதுவாகக் குறைந்து தங்கிவிட்டன. ஆனால் அந்தச் சித்திரம் மாத்திரம் என் கண்ணிலே தங்கிவிட்டது.

எத்தனையோ மேட்டுத் துண்டுகள் ஆற்றோரங்களிலும் ஓடைகளிலும் படிந்து கிடக்கின்றன. அவற்றின் மீது மிதித்துப் போயிருக்கிறேன். குப்பையும் கூளமும் சாம்பலும் அமோகமாகக் கிடக்கும். ஒருவித விசேஷமும் அவைபற்றின நினைவுகளில் சம்பந்தப்பட்டதில்லை. அந்த மேட்டுத் துண்டுகளைப் போலத்தான் இதுவும் ஒன்று; மேடு பள்ளம் நிரம்பின மண் தரை. இதற்குமட்டும் மசானம் என்ற தனிக்குறிப்பு ஏதற்கு? ஆமாம். இதோடு சாவு சம்பந்தப்பட்டிருப்பதனால் தான்; மற்ற இடங்களோடோ வாழ்வு இணைக்கப்பட்டிருக்கிறது. அதுதான் வித்தியாசம். சந்தர்ப்ப பேதத்திலே அர்த்தம் கொடுக்கும், நாம் இட்ட காரணப் பெயர் அது.

வேறு எந்த விதத்தில் இயற்கையானது மசானத்துக்கும் அடுத்துள்ள இடங்களுக்கும் மாறுபாடு காட்டுகிறது? ஊருக்கு வெளியே தனித்து ஓடிவரும் இதே ஓடை ஊருக்குள்ளும் ஓடிவருகிறது. சாவு குடி இருக்கும் சின்ன மண்மேடு இந்த மசானம். என் வாழ்வு குடி இருக்கும் பெரிய மண்மேடு அந்தக் கிராமம். இயற்கையின் ஆதரவில் எந்த இடத்தையும் மசானமாகச் செய்துவிடுவதில் என்ன கஷ்டம் இருக்கிறது?

“இதுதான் அம்பி, நம்ப பெரிய தோப்பு; ஐயாயிரம் தென்னைக்குக் குறைச்சல் இல்லை” என்று தோப்பைக் காண்பிக்கும் மாமாவின் குரல் காதில்

விழும் மனத்தோடு பேசுவதை நிறுத்திச் சுற்று முற்றும் பார்த்தேன். தென்னந் தூறுகளிடையே வந்து கொண்டிருந்தோம்.

வேலு முன்னோடி இரண்டு தென்னங் கீற்றுகளை இழுத்து வந்து போட்டான். உட்கார்ந்து கொண்டோம். அண்ணாந்து பார்த்தேன். சிலந்திக் கூடுகள்போல் பசுந்தென்னோலைகள் பின்னி வீசிப் பரந்த மட்டைகளுக்கு அடியில் மரத்தோடு ஒட்டிப் பச்சைப் பசேலெனக் குலை குலையாகச் சிறிதும் பெரிதுமாகக் காய்கள் தொங்கிக்கொண் டிருந்தன. தாக உணர்ச்சி உடனே உண்டாயிற்று. "சீக்கிரம் இளநீர் போடச் சொல்லுங்க, மாமா" என்று அவசரப்படுத்தினேன்.

"இங்கே தோப்பு இல்லாட்டா?" என்று மாமா சிரித்துக்கொண்டே கேட்டார்.

"அது வேறே கேள்வி" என்றேன்.

"எந்த மரத்துலே போடட்டுங்க?" என்று இடுப்பில் அரிவாளைச் செருகிக்கொண்டே சந்தணம் அண்ணாந்து பார்த்தான்.

"தோப்புக்காரன்— உனக்குத் தெரியாதா? போடு வளுக்கைப் பதமா."

"முத்தினதா இருந்தா அப்புறம் பாத்துக்கோ" என்று நான் சேர்த்தேன்.

சந்தணம் மரத்தில் ஏறி இளநீர்களை வெட்டித் தள்ள, வேலு வெட்டிக்கொடுக்க, மாமாவும் நானும் மாறி மாறி உள்ளே தள்ளிக்கொண் டிருந்தோம். தொண்டை இனித்துக் குடல் குளிர்ந்தது.

திடீரென்று வேலு ஆரம்பித்தான்: "பாவம், செங் குளத்து ஐயரு பாடு இனிமே ரொம்ப அம்பலமாப் போயிருச்சுங்க. அந்த ஒரே மவன் மேலே உசிரை வச்சுக்கிட்டு இருந்தாரு."

இளநீர் சாப்பிடும் உற்சாகத்தில், அது உடலில் ஏறின குளுமையில், கொஞ்சம் மறந்திருந்த அந்தக் காட்சி மறுபடியும் ஞாபகத்துக்கு வந்துவிட்டது.

"ஆமடா. அந்த மருமகன் வீட்டோடே வந்து இருந்துவிடலாம்; ஐயருக்கு வேறு வழியில்லே" என்று மாமா தொடர்ந்தார்.

"நல்லதுக்கா மருமவன் வாச்சு இருக்கிறாரு! அவர் மூணே நாள்ளே எல்லாத்தையும் கொட்டை பரதீதிட்டுப் போயிடுவாரு. ஊரிலே அவரைப்பற்றி என்னென்ன பேச்சுக் கிளம்புதுங்க!" என்று சந்தணம் கலந்து கொண்டான்.

"இன்னைக்குத்தானா தெரியும்? வேணும் அந்த ஐயருக்கு! அன்னைக்கே நாலு சாத்துச் சாத்தி லஜ்ஜையை வாங்கிட்டு இருந்தா வழிக்கு வந்திருக்கும். அதை விட்டுப்போட்டு ........" என்று மாமா இழுத்தார்.

"அதைச் சொல்லுங்க. அப்படிச் செய்துட்டு இருந்தா இந்தத் தொலைக்கு வந்திருக்காதுங்க" என்று பண்ணையின் தீர்ப்புக்கும் நியாய உணர்ச்சிக்கும் பண்ணைக்காரச் சந்தணம் ஒத்து ஊதினான்.

"போகுது; அவனவன் தலை விதிப்படி நடக்கிறது. நமக்கு என்ன? ஆமாம், அந்த முருகங்குளத்துக் காணியை ராவுத்தர் விலைக்குப் பேசிக்கிட்டு இருக்

கிறாரமே? அதை இழுத்துப் போட்டிடலாமா? என்ன யோசனை?'' என்று பேச்சைச் சடாரென்று மறுபடியும் முறித்து எங்கேயோ திருப்பினார் பண்ணை. திடீர் திடீரென மாறின தோரணை காட்டுவது அவருக்கு எவ்வளவு சுளுவாக இருந்தது என்பதுதான் எனக்குத் திகைப்பை ஊட்டியது வாஸ்தவம்: செங்குளத்து ஐயரின் பிள்ளை மரணம், அவர் குடும்பவிஷயம். அந்தப் பேச்சுக்கு அவ்வளவு அவகாசந்தான் கொடுக்கமுடியும். மீதிநேரம் தம் குடும்பத்தின் சுகம், தம் சம்பந்தமான அக்கறைகளுக்குத்தான். இது யதார்த்தந்தானே?

என் மனப்போக்கு இப்போதும் தன் வழியே தொடர்ந்தது. ஆனாலும் வெளி வார்த்தைகள் காதிலே வந்து தாக்கிக்கொண்டிருந்தன.

சந்தணம் கொஞ்சம் கிட்ட நெருங்கி மெல்லிய குரலில் இழுத்தான். "என் காதிலேயும் பட்டதுங்க. இணைசேர்ந்த நிலம்; ஒரே தாக்கா அமஞ்சு போயிருங்க; புரவிலேயே ஓங்கின கை நம்முதுதான். எப்படியாவது முடிச்சுப்புடுங்க."

கலகலத்த சிரிப்பு மாமா உதடுகளிலிருந்து வெளி வந்தது: "ஆமடா, உனக்கு இன்னும் இரண்டு காணி பார்வைக்கு வகையாகச் சேருதில்லே! சிபார்சு செய்ய மாட்டே? வேலு! சந்தணம் யோசனையைக் கேட்டியா?"

"சொல்றது சரிதாங்க. வாங்கிருங்க. காலத்துக்கு நான் உழுதுப்படறேன்க" என்று வேலு கண்களைச் சிமிட்டிக்கொண்டே பல்லைக் காட்டிக் கூறினான்.

"பாருடா! அவனவன் தன் தன் பாட்டைப் பாத்துக்கப் பேசறான்; திருட்டுப் பயலுக!"

இருவரும் அச்சுட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டார்கள். "பண்ணை நிழல்லே நிக்காட்டி எங்களுக்குப் பிழைப்பு ஏது?" என்றான் வேலு.

"அதைச் சொல்லுங்க" என்று ஆமோதித்தான் சந்தணம்.

மாமா குரலை உயர்த்தி, "நிலமா! போங்கடா போங்க. கிஸ்திக்குப் பணம் இல்லே. கஞ்சியத்து நெல்லை என்னு கேப்பாரில்லே. மேலைக்குத்தான் அதைப்பத்திப் பேச்சு. நெல்லு ஏறின விலைக்கு இப்போ போகல்லேன்னு..? சரி களத்திலே கட்டு வந்திருக்கும். போகலாம் வா, அம்பி" என்று துண்டை உதறிக்கொண்டு எழுந்தார்; "சந்தணம், அங்கிட்டு எட்டிப்பாரு, அவுங்க போயிட்டாங்களான்னு. தோப்பைச் சுத்திப் பாத்துட்டுப் போவோம்" என்றார்.

சந்தணம் போய்வந்து, அவர்கள் போய் விட்டதாகச் சொன்னான்.

தோப்பைச் சுற்றிக்கொண்டு மேலைக் கோடிக்குப் போனோம். என் கண்கள் தாமாகத் தோப்புக்கு வெளியே பார்த்தன. சற்று முன் அலறல் நிறைந்து கிடந்த அந்த இடத்தில் அமைதி பதிந்து இருந்தது. அவர்கள் எல்லோரும் தங்களால் முடிந்தமட்டும் அழுது விட்டுப் போய்விட்டார்கள். இப்போது அங்கே ஒன்றியாகக் கிடந்த உடலுக்குக் காட்டின மரியாதையும் அவ்வளவுதான்.

விறகும் எருவும் அரைகுறையாக முன்பு அடுக்கி இருந்த இடத்தில், பூரணமாக மேலே ஈரமண் அப்பி மெழுகி இருந்தது. லேசான புகைச் சுருள்கள் அதன் பக்கங்களில் வெளியேறிக்கொண்டிருந்தன. ஒன்றியாகக்

கிடந்த உடல் என்று சொன்னேன்; தவறு. இரண்டு உருவங்கள் ஏதோ முனகிக்கொண் டிருந்தன. வார்த்தை தெளிவில்லை; செய்கை கண்களில் விழுந்துகொண் டிருந்தது...அந்தப் புது ஈர மண் மேட்டைச் சுற்றிவந்து புகை வரும் இடுக்குகள் வழியே குச்சியை விட்டுக் குத்திக்கொண் டிருந்தன; உள்ளே கனியும் கனலைத் தூண்டிவிடும் முயற்சி அது. பிணத்தின் சாந்தியைக் குலைக்கும் வேலையில் அவர்கள் ஈடுபட்டிருப்பதாகத் தோன்றவில்லை. அதைப் பூரணமாக்கும் வேலையில்தான் ஈடுபட்டிருந்தார்கள். அவர்கள் வேலை அது.

இத்தனை பேரும் அலக்ஷியமாய் விட்டுப்போன உடல் அது. மசானத்தில் கொண்டு போட்டதோடு கூட இருந்து பழகின அத்தனைபேருடைய பொறுப்பும் தீர்ந்துவிட்டது. எங்கேயோ சம்பந்தமில்லாத இரண்டு ஜீவன்களிடம், மேற்கொண்டு அந்த உடலோடு உறவு கொண்டாடும் பொறுப்பைச் சுமத்திவிட்டுத் தம் தம் வேலையைக் கவனிக்கப் போய்விட்டார்கள். எரிந்து கிடக்கும் சாம்பலை மிகுந்த அக்கறையோடு பார்க்க நாளை வரப்போகிறார்கள். அதுவரை இந்த மேட்டிலே பழி கிடக்கும் இந்த இரண்டு உருவங்களும் சாம்பலைப் பத்திரமாக அவர்களிடம் ஒப்படைக்கப்போகின்றன. என்ன அக்கறையடா இவர்களுக்கு; விசித்திரம்!

என் நடையிலே, மசானம் என்ற அந்த மேடு என் முதுகுக்குப் பின் விழுந்துகொண் டிருந்தது.

பண்ணை பார்க்கும் பள்ளிக்குக் களத்துச் 'சிந்து மணி'யில் கவனம். காளிமுத்தனுக்கும் உழுபடைக் கவுண்டனுக்கும் பண்ணையோடு உறவு கெடாதிருப்பதில் சிரத்தை. மிராசுதார் மாமாவுக்குக் குத்தகை ஜரூராக

வசூலாவதிலும், நிலம் இணை சேர்ப்பதிலும் அக்கறை. சந்தனத்துக்கு இன்னும் இரண்டு காணி பார்வைக்குச் சேருவதில் ஆத்திரம். வேலுவுக்கு நிலம் உழுவதில் ஆசை. பொசுக்க வந்த கூட்டத்துக்கு வீடு திரும்பும் அவசரம். எனக்கு இளநீர் சாப்பிடுவதில் உற்சாகம் என்று வைத்துக்கொள்ளுங்களேன் — இப்படி அவனவன் பாடு அவனவனுக்குப் பெரிது. சின்ன ஆத்மா பிரிந்ததில் ஒன்றிற்கும் குந்தகம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் இந்த இரண்டு ஆத்மாக்களுக்கும்ட்டும் அதைக் கரை யேற்றுவதில் இவ்வளவு அக்கறையா? இவ்வாறெல்லாம் மறுபடியும் நிழலோட்டம். ஏட்டி நடந்தோம் களம் நோக்கி.

திடீரெனப் பின்னாலே ஓர் ஒற்றைக் குரல் வெடித்துக் கிளம்பியது.

"மாயப் பிரபஞ்சத்தில் ஆனந்தம் வேறில்லை."

அந்த இடமே எதிரொலித்தது. எங்கிருந்து என்று அறியத் திரும்பப் போனேன்.

"வஞ்சமில் லாதமெய்க் காதல் அல் லாதில்லை" என்று இரண்டு குரல்கள் ஜதையாக முடித்தன.

பிரமித்துப்போய் நின்றேன். அந்த ஆனந்த கீதம் மண் மேட்டிலே பிணத்தைக் குத்திக்கொண் டிருந்த அவ்விரண்டு உருவங்களின் உச்சரிப்பு. என் பிரமிப்பு அடங்கு முன்னரே அடுத்து எத்தனையோ வரிகள் மளமளவென்று காற்றில் கலந்துவிட்டன.

பிரபஞ்சம் மாயம்: சந்தேகம் இல்லை. வேதாந்தம் அந்தத் தத்துவத்தை வேண்டிய மட்டும் மூளையில் திணித்திருக்கிறது. ஆனால் எது ஆனந்தம்? சாவா? சாவாக இருந்தால் பொருத்தந்தான். ஒய்வில் ஆனந்

தந்தானே! இல்லை, இத்தனை பிணங்களையும் குத்திக் குத்திச் சாந்தி கொடுக்கும் அந்த ஜீவன்களின் வேலையில் ஆனந்தமா? அதுவும் சரிதான். உணர்ச்சிக்கு இடம் கொடுத்து, வரும் பிணத்துக்கெல்லாம் கண்ணீர் விட்டுக்கொண் டிருக்க அந்த ஜீவன்களுக்கு அவகாசம் கிடையாது. மரமரத்துப்போன யந்திரவேலை அவர்களுடையது. வேலையில் உற்சாகம் வேண்டும், அலுப்புத் தெரியாதிருக்க. அந்த உற்சாகத்திலே உதட்டிலிருந்து கிளம்புகிறது பாட்டு. அவ்வளவுதான். முதலடி அந்த இடத்திலிருந்து தனித்து வந்து விழுந்திருந்தால் பொருத்தமற்றதாகச் சொல்லமுடியாது. ஆனால் அந்த இரண்டாவது அடியோடு கலக்கவும் எவ்வளவு அசந்தர்ப்பமாகிவிடுகிறது! சாதல் குடி இருக்கிற இடத்தில் காதலின் ஸ்தானத்தை நிர்ணயிக்கிறது; மசான பூமியினின்று காதலர் சோலையை உண்டாக்கி விடுகிறது, கற்பனை உள்ளத்தில். இந்த நினைப்பில் என் உள்ளம் சிலிர்த்தது. இயற்கையின் பகைப்புலத்தில் என்ன முரணான சித்திரம்!

உழன்றேன்; அதன் மறு பக்கம் நினைவுக்கு வந்தது. வாஸ்தவம்! சாதலுக்கும் காதலுக்கும் இயற்கை ஒரு விதமான பாரபக்ஷமும் காட்டுவதில்லை. அதன் அணைப்பில்தான் காதல் பிறக்கிறது. நிலவும் தென்றலும் மணமும் குளுமையும் காதல் போதையைச் சிருஷ்டிக்கின்றன. சாவுக்கும் இயற்கைதான் தாய். மூச்சு நிற்றலும் காற்றுப் போக்கின் தடையும் சக்தியின் ஓய்வும் சாதல் மயக்கத்தைச் சிருஷ்டிக்கின்றன. இந்தத் தென்னந் தோப்பிலே காதல் கூவும் பக்ஷி! எதிர் மேட்டிலே சாதல் ஓலமிடும் ஜ்வாலைத் தீ! - எல்லாம் இயற்கையின் பகைப் புலத்தில்!

ஆனாலும் சாவின் எதிரில் காதலை நினைக்கவே முடியவில்லை.

இவ்வளவு எல்லாம் முரண்பாட்டை நினைத்து நான் குழம்பினேனே; எதிரே இருந்த குரல்கள் அந்த வரிகளைக் கொஞ்சமாவது சிந்தித்து உச்சரித்திருக்குமா? நிச்சயமாக இருக்கவே இராது. பிரமாதமாக அவர்கள் காட்டும் அக்கறையைச் சிலாகித்துப் பேசினேனே; அது எவ்வளவு தப்பு! அவர்களுக்கும் பொறுப்பில்லை. அவர்கள் செய்வது ஒரு முறை வேலை, ஊதியத் தொழில். பள்ளி, காளிமுத்தன், கவுண்டர், மிராசுதார் மாமா, சந்தனம், வேலு, நான் இவர்களைப் போன்றவர்களே அவர்களும். இதுதான் வாழ்க்கை.

# மூடி இருந்தது

நாளை! நாளை எனக்கு விடுதலை. நான் எதிர் பார்க்காமல் அது என் அருகில் வந்துவிடவில்லை. வாஸ்தவமாக! மாதங்கள், வாரங்கள், நாட்கள், மணிகள், நிமிஷங்கள், ஏன் வினாடிகளும்கூட — அவைகள் ஒவ்வொன்றின் கால அளவையும், கணக்குப் போட்டுப் போட்டுப் பார்த்து விட்டபிறகுதான் என்னை நெருங்கி வந்தன. எப்படி அந்தக் கடைசி மின் வெட்டு நேரம், சாசுவதமான விடுதலையைத்தரும் கணப் பொழுது, சாவு என்பது உயிர் வாழ்க்கை முழுதும் கண் எதிரில் தோன்றித் தோன்றி, "ஒரு நாள் உன்னிடம் வருவேன்; தயாராக இரு" என்று காதில் சம்மட்டி போட்டு அடிக்கிறதோ, அப்படி இருந்தது.

எதிர்ச் சுவரில் அடிபட்ட மாதங்கள், நாட்கள் ஒழுங்கான வரிசையில் ஒன்றன்பின் ஒன்ருக இருக்கின்றன; ஒரு நீண்ட வெட்டு உச்சியிலிருந்து அடிவரை ஊடுருவிப் பாய உயிரற்றுக் கறுத்து நிற்கின்றன. அந்தப் புழுக்கைப் பென்சில் ஏதோ ஒரு கையிலிருந்து கெஞ்சி வாங்கினது. அதுதான் அந்த நாட்களைச் சிருஷ்டித்தது; ஏன்? அதுவேதான் அவைகளை அழித்ததும்; எவ்வளவு மெதுவாக அந்த நாட்கள் வளர்ந்தன. கருப்பைச் சிசுவின் வளர்ச்சி; அது இதைவிட வேகமாக வளர்ந்ததா, குன்றியதா?

அந்த முதல் நாள்! அது பிறந்து வளர்ந்தது என்னுள் எவ்வளவு அழுத்தமாகப் பதிந்து இருக்கின்றது! நான் அதை ஒன்று என்று இலக்கத்தில் குறித்தேன். பின்பு இரண்டு, மூன்று, நான்கு..... ஒன்றன்பின் ஒன்ருக வரிசையாக முளைத்தன.

இன்று நூற்று அறுபத்து ஐந்து! நூற்று அறுபத்து ஆறுக்கு முந்தின எண். பாலர் வகுப்புக் குழந்தை இதைச் சொல்லிவிடும். ஆனால் எனக்கும் அந்த எண்ணுக்கும் உள்ள சம்பந்தத்தை அதற்குச் சொல்லத் தெரியாது; "நீ கைதி, ஞாபகம் இருக்கட்டும்" என்று எச்சரிக்கும் கடைசி இரவு இன்று. நூற்று அறுபத்து ஆறு: அதன் இரவு என்னைச் சுதந்திரமுள்ளவனுக அடையும். அந்த இரவுக்குத்தான் என்ன அதிருஷ்டம்!

பூட்டியாகிவிட்டது. வெறும் இரும்புக் கதவல்ல; அது வாயில்லாமலே பேசும். வருஷம் வருஷமாக அது பேசப் பழகி வந்திருக்கிறது. வார்டர் பாஷையில் அது பேசும். கைதியின் பாஷை அதற்குப் புரியும். வழக்கம் போல் அது தன் தோரணையில் உறுமியது. நான் அப்போதுதான் அதன் கைதியாக நிலையில் காலடி எடுத்துவைத்துப் பிளாக்கிற்குள் நுழைந்துகொண்டிருந்தேன். என் கடைசித் தினத்தைக் கொண்டாடிய நாள், கொண்டாடிய விதம் அது.

"அடே, அறுநூற்று இருபத்து மூன்று, போ, போ!" இவ்வளவுதான் அதன் உறுமல். கைதிக்குப் புரியாதா அதன் கறுவின தொனி? அலக்ஷியமாகச் சிரித்தேன். இருந்த நாட்கள் எல்லாம் இருந்து விட்டுப்போகிறேன்; புண்படுத்தும் வார்த்தை பேச அப்போது மனமில்லை. "என்னைக் காக்கும் பொறுப்பை

நாளை முதல் கொடுக்க மாட்டேன்; கடந்துபோன நாட்களுக்காக மன்னிக்கவேண்டும்" என்றேன். உடனே என்ன நடந்தது? புராண ராக்ஷசனைப்போலப் பயங்கரமாக வீரிட்டுக் கதவு சீறிப் பாய்ந்து தன் வாயை மூடிக் கொண்டது. நான் தள்ளிப் போய்விட்டேன். அதன் ஆகாரம் பறிபோகப் போகிறது; ஆத்திரம் வருவது சகஜந்தானே?

நான் என் படுக்கையில் உட்கார்ந்துகொண்டிருந்தேன். ஆமாம், அது என் படுக்கைதான். யாரும் மறுக்க முடியாது. என் கைகளால் நான் வாங்கிக் கொண்டது. வாங்கிக்கொள்ளும் போதுதான் என்ன திருப்தி! வேறு எந்தப் படுக்கையும் இவ்வளவு மனோ சாந்தியை இதுவரையில் தந்தது இல்லை. அந்த இரண்டும் அடங்கின அந்தப் படுக்கை — அந்தச் சாக்கு, அவ்வளவு முரட்டு வார்த்தை கூடாது — நூலுக்குப் பதிலாகச் சணல்கொண்டு நெய்தது அது — அந்தக் கம்பளி: அதன் கணக்கற்ற துவாரங்களையும் சிக்கு நாற்றத்தையும் பற்றிய வியாக்கியானம் எதற்கு?

அந்தச் சாக்கு! கம்பளி! — அவர்கள் பெயர் கொடுத்து இருக்கிறார்கள். இன்னும் அவை என்னுடையவையே. நான் விரும்பினால் அவைகளைக் கிழித்து எறிந்திருக்க முடியும். அந்தச் சுதந்திரம் எனக்கு உண்டு. கைதி ஒழுங்கீனமாக நடந்து கொண்டதற்காக ஒரு வாரம், பத்து நாட்கள் மார்க்குப் பிடிக்கப்படும். அவ்வளவுதான். ஆனால் நான் அவைகளைப் பத்திரமாகவே சேர்க்கப்போகிறேன். பத்திரமாக! எத்தனை கைகளிலிருந்து எவ்வளவு பத்திரமாக என் கைக்கு வந்திருக்கிறதோ அப்படியே. நான் அவர்களைப் பின்பற்றுவேன்.

அந்தத் தட்டு, குவளை — அவைகளையுந்தான். இன்னும் எத்தனை கை மாறவேண்டுமென்று அவைகளின் தலையில் எழுதியிருக்கிறதோ!— அவை வாழ்க! இயற்கையான ஓய்வை எதிர்பார்த்துக்கொண்டிருக்கட்டும். நான் தொடமாட்டேன்.

இந்த உடைகள்: இவைகளும் என்னுடையவையே. கொஞ்சம் அஜாக்கிரதை காட்டி இவைகளைக் கிழித்து எறிந்திருக்கலாம், வேறு யாருக்கும் உபயோகப்படாமல். நிச்சயமாக, இந்த உடைகள் பெருமை தரக்கூடியவையல்ல. இவை ஒரு கைதியின் உடைகள்! சும்மா கொடுத்தாலும் வெளியுலகம் உபயோகிக்கத் தயங்கும்; ஏன்? மறுத்தும் விடும். ஆனால் இந்த உடை என்னுடையது என்பதிலே எனக்குக் கர்வந்தான். வெளியுலகம் இதைப் பற்றி நினைப்பது இருக்கட்டும். வெளியே இதை எடுத்துப்போக அவர்கள் அனுமதித்தால் — ஆனால் அது நடக்காத காரியம்—நான் இதை அணிந்துகொண்டு கண்கள் முன் நடப்பேன். எவனாவது வந்து, "நீ கைதி" என்று சொல்லட்டும்; குன்றிப் போவேன்.

அந்த உடைகள் எனக்காக அமைக்கப்படவில்லை. நான் இவைகளுக்காக அமைக்கப்பட்டிருந்தேன்போல் இருக்கிறது. வாஸ்தவமாக, இவை எனக்குத் தனிஉருவம் ஏற்படுத்திவிட்டன. உருவம் என்று சொல்லும்போது உடலையும் உடையையும் பிரித்துப் பேச முடியாது. உடையால் ஏற்பட்டது உருவம். அதுதானே தோலின் வேலையும்!

இந்த 623 என் நம்பர்தான்; இல்லை, என் பெயர் அது; சிறைச் சாஸ்திரப்படி எனக்குத் தக்க சடங்குகளுக்கு இடையே இடப்பட்ட நாமகரணம். தொட்டி

னுக்கு உங்களை அழைக்கவில்லை என்று கோபம் வேண்டாம். பழி வாங்க வேண்டுமானால் இனியும் என்னை 623 என்றே அழையுங்கள். இருவருக்கும் ஒரு வேளை அது திருப்தி தரலாம். இந்த நம்பரைத்தான் என் உடை ஒவ்வொன்றும் முத்திரை வைத்துக்கொண்டிருக்கின்றது.

நாளை இந்த உடைகளை என்னிடமிருந்து பிரித்து விடுவார்கள். எனக்கு முன் விடுதலையானவர்களுக்கும் இதுதானே நேர்ந்தது? இந்த 623 என்னிடமிருந்து மறைந்துவிடும். சிறைச்சாமான் அறைக்குச் சரிபார்த்துப் போய்விடும். இவை ஒருவேளை வெளுக்கப் படலாம். நான் நினைக்கிறேன்: அந்த வெளுப்பில் அந்த நம்பர் அழிந்துவிடுமா பூரணமாக? இல்லை, மங்கலாக இன்னும் இருக்குமா?

அதன் மங்கின வரைவுகள் இருந்தால் அவன் சிரமப்பட்டுக் கண்டுபிடித்து விடுவான். சொல்ல மறந்து விட்டேனே: அவன்தான் — என் வாரிசு — நான் பத்திரமாக விட்டுப்போன இந்த உடைகளை, என் சொத்தைத் தன்னுடையதாக அனுபவிக்கப் போகிறவன் — அவன் என்ன நினைப்பான்? "623 எவனோ? என் அண்ணத்தை" என்று இவ்வளவுதான் நினைப்பானா? இல்லை; இன்னும் என்னவாவது நினைப்பானா? எப்படி வேண்டுமானாலும் நினைப்பை ஓட விட்டுக் கொள்ளட்டும். அவனோடு தகராறு கொடுக்க நான் தான் இங்கே இருக்க மாட்டேனே.

அப்போது நான் சுதந்திர மனிதனாக இருப்பேன். எங்கேயாவது, சிறை என்று அர்த்தம் தொனிக்க நிற்கும் இந்த நான்கு சுவர்களுக்கு வெளியே இருப்பேன்.

உட்புறம் இருப்பவர்களைப் பற்றி வெளியே இருப்பவன் அங்கிருந்து நினைக்க என்ன அவசியம் இருக்கிறது? ஒரு காலத்தில் உட்புறம் இருந்தவன்; அவ்வளவுதானே?

வாஸ்தவமாக நான் அதற்குமுன் கைதியாக இருந்த தில்லை. மனித சமூகம் செய்யும் ஒழுங்கீனங்களை யெல்லாம் அடக்கிக்கொள்ள இந்த நிலப் பரப்பு விசாலமானதாக இருக்கிறது. யாரும் இந்தச் சுவர் களுக்கு உட்புறம் வராமல் தலைமறைவாகவே இருந்து காலம் தள்ளிவிட்டுப் போய்விடலாம். துரதிருஷ்ட சாலிகள் சிலரே, இல்லை, தங்கள் குற்றங்களைச் சாதுர்யமாக மறைக்கத் தெரியாதவர்களே உள்ளே வந்துவிடுகிறார்கள். நானோ ராஜீயக் கைதி; பகிரங்க மாகக் குற்றத்தை ஒப்புக்கொண்டு உள்ளே வந்தவன். இது எனக்குப் புதிதாக இருந்தது. சப்பென்று இது வரையில் கழிந்த நாட்களிலிருந்து இது ஒரு மாறுதல். நான் இதை அனுபவித்தேன். விரும்பி நாட்களைப் போக்கினதாகத்தான் எனக்கு நினைவு.

நாளை, சட்டத்தின் உடும்புப்பிடி தளர்ந்துவிடும். நான் தக்கபடி தண்டிக்கப்பட்டுவிட்டதாக அது திருப்திப் பட்டு இருக்கலாம்; அல்லது அலக்ஷியமாகக் கருதி வெளியே வீசி இருக்கலாம். எப்படியும் நான் வெளியே போய்விடுவேன், சுதந்திர மனிதனாக! இந்த இரும்புக் கம்பிகளைப் பிடித்து நின்றுகொண் டிருப்பதற்குப் பதிலாக எங்கோ ஒரு ரெயில்வே ஸ்டேஷன் கதவின் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு டிக்கட் பரிசோதகரை எதிர்பார்த்து நின்றுகொண் டிருப்பேன். பிறகு என் மாடி ஜன்னல் கம்பிகள் வழியாகச் சாலையைப் பார்த்துக் கொண்டு இருப்பேன்.

இப்படியெல்லாம் நினைப்பில் ஆழ்ந்திருந்தபோது திடீரென் ஞாபகம் வந்தது: சிறையின் கடைசிச் சூரியாஸ்தமனத்தைப் பார்க்கத் தவறிவிட்டேன். வெளியே இருட்டுக் கும்மிவிட்டது. எத்தனை தடவைகள் அந்த இருட்டை மீறி ஊடுருவிப் பார்க்கக் கண்கள் முயன்றிருக்கின்றன! இருட்டு! தனி ஆத்மாவின் ஒரே நண்பன்! இது உங்களுக்குப் பிடிக்காது. 'வெளிச்சம் இல்லாமல் முன்னேற முடியாது' என்பீர்கள்; 'பின் வாங்கவும் முடியாது' என்று நான் சொல்கிறேன். என்னால் வளர முடியாவிட்டாலும் தேய்ந்துபோகாமல் இருந்தால் போதும். அது எனக்குத் திருப்தி தரும்.

இன்று கடைசி நாள்! அந்தக் கும்மிருட்டின் நடுவே புள்ளிகுத்திப் போகும் வெளிச்சம் அதோ தெரிகிறது. வார்டர் தன் கைவிளக்குடன் கடமையைச் செலுத்திக் கொண்டு போகிறான். இரண்டு மணி நேரம் இப்படி வளைய வந்துகொண்டிருக்க வேண்டும், அவனை விடுவிக்கப் பதில் ஆள் வரும் வரையில். பின்பு மறுபடியும் தன் முறைக்குத் தயாராக வேண்டும். அவன் வெளியே போகமுடியாது. நான் நாளை போய் விடுவேன். அவனோ முறையாக நடைபோட்டு, குளிருக்காக 'மப்ளர்' ஒன்று முகத்தை மறைக்க, விளக்குடன் நாளையும் இப்படியேதான் இருப்பான். மறுநாள், அடுத்த நாள்.... இப்படியே. அவன் விடுதலையை எதிர்பார்க்கவேண்டியவன் அல்ல.

என் நண்பர்கள் குறட்டை இதோ என் காதுகளில் விழுந்துகொண்டிருக்கிறது. என்ன நிம்மதி! கனவில் கூட இந்த நினைவு உபத்திரவப்படுத்தாது. அவர்களுடைய நாட்கள், காலம் அதிகம் நீண்டது; என்னுடைய

தைப் போல் குறுகினதல்ல. அல்பாயுசு அல்ல. ஆனாலும் நிச்சயம் ஒரு நாள் அவர்களுக்கும் வரும். தங்கள் நாட்களும் குறுகிவிட்டதை அவர்கள் காண்பார்கள். அந்த நினைவு அவர்களைத் தொல்லைப் படுத்தும், இப்போதைய என் நிலையைப் போல்.

எப்படியும் இருள் வளர்ந்துகொண்டு வந்தது. சேகண்டியின் முதல் அடி நிச்சப்தத்தை உடைத்து எறிந்தது. நான் பொறுமையோடு எண்ண ஆரம்பித்தேன். பன்னிரண்டு அடித்து அது ஓய்ந்தது. நடுநிசியாகிவிட்டது. இன்னும் படுக்கையில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். நாளை இரவு பன்னிரண்டிக்கு இந்த ராக்ஷஸக்குரல், சேகண்டி சப்தம் என் காதைக் கிழித்து எறியாது. தூக்கத்தைக் கலைத்துப் புரண்டு படுக்கச் சொல்லாது. எங்கேயோ வேறு ஏதாவது சுவரில் மாட்டியிருக்கும் கடிகாரம் ஒன்று, தூக்கத்தைக் கலைத்துவிடுவோமோ என்று உள்ளூறப் பயத்துடன் மிருதுவாக அடிக்கும். நான் அதை எங்கே கேட்கப் போகிறேன்? நான்தான் சுதந்திர மனிதனாக நிம்மதியோடு குறட்டை விட்டுக்கொண்டிருப்பேனே!

இவைகளெல்லாம் - இந்தப் படுக்கை, தட்டு, குவளை, நம்பர், இரும்புக் கிராதிகள், சுற்றுப்புறம், இந்த வாழ்க்கை நினைவுகள் எல்லாம் கடந்துபோனவையாகி விடும், நான், சுதந்திர மனிதனாக ஆனதும். எத்தனையோ கடந்த நாட்கள், நினைவுகள் அவற்றோடு இவையும் போய் ஒட்டிக்கொள்ளும். அப்போதைய நாட்களும், நினைவுகளும் முந்தி வந்து நிற்கும். ஆகவே, இப்போதாவது இந்த நாட்களை நான் அழுத்தமாக நினைப்பூட்டிக்கொள்கிறேன்.

நான் தூங்கிவிட்டதாகத் தெரிந்தது. கண் விழித்த போது அதைக் கேட்க முடிந்தது — அந்த ஒற்றைக் குரலை! ஆழத்திலிருந்து கிளம்பி உச்சியில் போய் நிற்கும் அந்த அழைப்பு — பிரார்த்தனைக்கு! சுருட்டி மடக்கி எழுந்தேன். என் கடைசிப் பிரார்த்தனை அது. ஒரு காலி இடம் இருந்தது; அதிலே போய் நின்றேன், அவர்களில் ஒருவனாக; கடைசித் தடவையாக நின்றேன்.

அது முடிந்தது. கீழ் வானம் வெளுப்பதைக் கம்பிகளில் கைவைத்துப் பார்த்துக்கொண்டு நின்றேன். அவை குளிர்ந்து இருந்தன. ஒரு வேளை என் விரல் களின் உஷ்ணத்தை அனுபவித்து இருக்கக்கூடும். ஒரு நாள்தானே? வெளுத்த கீழ்வானக் கருப்பையிலிருந்து சூரியன் ஒளியோடு பிறப்பதை நான் பார்க்க முடிந்தது. ஏற்கனவே அதன் கிரணங்கள் என்னைச் சுதந்திர மனிதனென்று உணர்வதாக நான் உணர்ந்துவிட்டேன். ஆனாலும் பூசாரி வரம் கொடுக்கவேண்டுமே?

பிறகு வழக்கம்போல் வார்டரின் கைக்கொத்துச் சாவி பூட்டைத் திறந்துவிட்டது. தினசரி வேலைகள் ஆரம்பமாகி நிறைவேறிக்கொண் டிருந்தன. ஆனால் எல்லாம் என்னிடம் பேசினது "கடைசி! கடைசி!! கடைசி!!!" என்பதுதான்.

இந்த உலகத்திலிருந்து கடைசி மனிதனாக வெளி யேறவதிலே எனக்கு ஆசைதான்; அது முடியாதே!

அப்புறம் வார்டர் வந்தான். 'பிளாக்' வாசலில் நின்று பலக்கக் கத்தினன்: '623' என்று இரண்டு மூன்று தரம். எனக்கு அழைப்பு வந்துவிட்டது. 'நான் தான்' என்று போய் நின்றேன். "உன்னுடையதெல்லா வற்றையும் எடுத்துக்கொண்டு வா" என்றான். ஆமாம்,

என்னுடையதெல்லாந்தான் இன்னும்! அப்படியே வாரிச் சுருட்டிக்கொண்டு அவன்பின் சென்றேன். அவை கணக்கிடப்பட்டன. ஒரு கைதி அவைகளைக் கட்டி மூலையில் எறிந்தான். இனி அவை என்னுடையவை அல்ல. அந்த அசேதனப் பொருள்கள் பெருமைப் படலாம். பிறகு என்னுடையவற்றைக் கொடுத்தார்கள். நூற்று அறுபத்தாறு நாட்களுக்கு முன்பு அவை என்னுடையவனவாக இருந்தன; இப்போது மறுபடியும் எனக்குச் சொந்தமாகிவிட்டன. நான் அணிந்து கொண்டேன். என் பக்கம் நின்ற சில குரல்கள் எனக்கு ஓர் உருவம் வந்துவிட்டதாகக் கூறின. ஆமாம்; சுதந்திர மனிதனின் உருவமாக இருக்கும் அது.

அதன்பின் அந்தச் சம்பிரதாயச் சடங்குத் தொல்லைகள்; நான் கைதியாக இருந்ததை ஊர்ஜிதம் செய்யும் கடைசிச் சடங்குகள் — இல்லை, சுதந்திரமடை வதற்கான பூர்வாங்கச் சடங்குகள் என்று வைத்துக் கொண்டாலும் சரி. சம்பிரதாயச் சடங்குகள்! எங்கிருந்தாலும் மனிதன் இவைகளிலிருந்து தப்பித்துப் போக முடியாது.

எல்லாம் முடிந்துவிட்டது. நான் அந்தக் கதவை நோக்கி நடந்து போய்க்கொண் டிருந்தேன். அந்தக் கதவு ஒரு நாள் என்னை விழுங்கிவிட்டது. இப்போது வெளியே கக்கப் போகிறது. பாவம்! ஜீரணிக்க முடியாத குடல்! நான் அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு விட்டேன். எனக்கு ஞாபகம் இருக்கிறது, அப்போது நடந்துகொண்டவிதம். "உங்களை விட்டுப் பிரிவதற்கு வருந்துகிறேன்." இதுதான் நான் சொன்னது. முட்டாள்! நான் சொல்லி இருக்கக்கூடாது. அளவுக்கு

யீறின உணர்ச்சி! வார்டர் என்னோடு வந்துகொண்டிருந்தான். கதவைத் திறந்து அனுப்பிவிட்டுத் திரும்பிப் போவான்; என் பிளாக்குக்கு அல்ல; அவன் பிளாக்குக்கு.

திடீரென்று அவன், "போய்விட்டுத் திரும்பி வருவீர்களா?" என்று கேட்டான். நான் அதிர்ந்து போனேன். அவன் என்னை அறிந்துகொண்டுவிட்டானா? பின் ஏன் இந்தக் கேள்வி? அவன் முழுதும் தெரிந்து கேட்கவில்லை; கொஞ்சம் தெரியும். நான் அப்போது வந்ததுபோல் மறுபடியும் வரலாம். இது சகஜமாகத் தோன்றி இருக்கக்கூடும். கேள்வி சின்னதுதான். ஆனால் பதில் சொல்லத் தயங்கினேன்.

பின்பு, "எனக்கே தெரியாது. யார்தான் சொல்ல முடியும்?" என்றேன்.

அவன் திருப்தி அடைந்துவிட்டான். என்முன் நின்ற கதவு வழிவிட்டது. இது இரண்டாவது கதவு. சிறை என்ற அழுத்தமான தொனியைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கம்மச்செய்யும் ஓசையோடு அது விரிந்து கொடுத்தது. நான் அதைத் தாண்டி வந்துவிட்டேன். 'சிறை' என்ற தொனியை அழுத்தமாக்கும் ஓர் ஓசையோடு அது குவிந்துகொண்டது. அந்த வார்டர், என் துணை ஆள், எங்கே?

அடுத்த கதவு! அதையும் நோக்கி நான் போய்க் கொண்டிருந்தேன். அதுதான் மூன்றாவது, கடைசி! அந்தக் கதவை, "இந்த ஆளை வெளியே விடு" என்று ஒரு முரட்டுக் குரல் அதிகாரம் செய்தது. ஆள்! நான் உயர்ந்துவிட்டேன். சிறை எல்லைக்குள்தான் இருந்தேன்; ஆனாலும் ஆளாகிவிட்டேன். கைதி யல்ல. எனக்கு

மதிப்புக்கொடுத்த அந்தக் குரலுக்கு நன்றி செலுத்தும் பொருட்டு அதைக் கவனித்தேன். அதே குரல்தான்! எனக்குப் பின் அடைத்துக்கொண்ட கதவுக்கு உட்புறம், "இந்தக் கைதியைக் கொண்டு போ, அங்கே!" என்று வாய் ஓயாமல் கூவிய அதே குரல்தான். என்ன இருந்தாலும் மனிதன் அவ்வளவு கீழே போய்விடுகிறதில்லை.

கடைசிக் கதவும் திறக்கப்போகிறது. நான் ஒரு சுதந்திர மனிதன் ஆகிவிடுவேன், அந்தக் கதவு நிலையிலிருந்து ஓர் எட்டு வெளியே எட்டிப்போட்டதும். என் ஹிருதயம் நிரம்பி இருந்தது. நிம்மதியா அல்லது கனமா? இரண்டும் அல்ல. இல்லை, இரண்டும் சேர்ந்து. ஒரு கிரீச் சப்தம். அது ஓர் அபிமான ஹிருதயத்தின் அடியிலிருந்து எழும் அநுதாபக்குரலின் தொனியென்று எனக்குப் பட்டது. அந்தத் தொனியோடு கடைசிக் கதவும் திறந்துகொண்டது. எதையும் நான் சொல்லி விடக்கூடும்; அந்த க்ஷணத்து உணர்ச்சியைமட்டும் சொல்லமுடியாது. அது ஹிருதயத்தின் தனிச்சொத்து அதற்குப் பாஷையே இல்லை.

நான் வெளியே ஓர் எட்டு எடுத்து வைத்துவிட்டேன். என்னவோ திரும்பிப்பார்க்கத் தோன்றியது; பார்த்தேன். "சுதந்திர மனுஷா, பிரஷ்டா! இனி இந்தப் பக்கம் திரும்பாதே" என்று ஓர் உறுமலோடு (நான் நினைத்தேன்) கதவு இறுகிக்கொண்டது.

அப்புறந்தான் நான் எதிரே பார்த்தேன், சுதந்திர மனிதனை. எனக்குமுன் ஒரு சாலை நீண்டு போகிறது. பின்னால் கட்டிடங்கள், மனிதன் ஆக்கியவை. இன்னும் பின்னால் மரங்கள் கறுத்து அடர்ந்த கூட்டம். அதற்கும்

தள்ளி, முழுதும் வளர்ந்து நின்ற மலைத்தொடர்ச்சி. பின்னும் தொலைவில் வானவெளி கீழிறங்கி எதிலோ கலந்து மயங்கி ஒன்றுபடுகிறது. இவ்வளவுதானா?

இல்லை. அதற்கும் பின்னால் கண்கள் வெறியோடு ஊடுருவிப் பார்த்தன.

அந்தக் கண்களில் என்ன விழுந்துகொண்டிருந்தது? அது தெளிவாகிக்கொண்டிருந்ததா?

ஆமாம், இன்னும் ஒரு கதவு மூடி இருந்தது.

# தீர்மானம்

சந்தானம் கையை விரித்துப் பிடித்திருந்த புஸ்த கத்தின் வரிகள் ஒரு குறிப்பு இல்லாத பார்வையில் மிதந்து சென்றுகொண்டிருந்தன. எங்கெல்லாமோ சிதறிக்கிடந்த சிந்தனைகள் அத்தனையும் ஒருமிக்கச் சேர்ந்து வந்து அமிழ்த்தினதுபோல ஒரே ஜடமாக உட்கார்ந்திருந்தான். எதிரே மேஜைக்கு மேலாகச் சுவரில் உயரே பதித்திருக்கும் கடியாரம் தன் முறை வேலைப்படி மூன்றுதரம் அடித்துவிட்டு, அவனை உஷார்ப் படுத்தியதுங்கூட அவன் காதுகளில் விழவில்லை; இல்லை, விழுந்தும் அவன் பொருட் படுத்தினதாகத் தெரிய வில்லை. இன்னும் ஒரு மணி அவகாசம் இருந்தது, அவன் சிந்தனைக் கனவிலிருந்து விழிப்பதற்கு. நாலு மணிக்கு அவர்கள் புறப்பட்டுப் போக ஏற்பாடாகி இருந்தது.

இந்த ஏற்பாட்டுக்கு அவனைச் சம்மதிக்கச் செய்வ தற்குள் எவ்வளவு கஷ்டமாகப் போய்விட்டது அவர் களுக்கு! ஏன், இன்னுங்கூட அவர்களுக்குச் சந்தேகந் தான், எந்த நிமிஷத்திலும் அவன் மறுத்துவிடலா மென்று. ஆனாலும் வாய்விட்டுச் சரியென்று அவன் ஒப்புக்கோ, அல்லது மனப்பூர்வமாகவோ சொல்லி விட்டபிறகு, அவன் அப்படிச் செய்வான் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. அந்தக் கடைசி நிமிஷம் வரைக்குங்கூட ஏதாவது பேசிக் கிளப்பி அவன் மன

நெருக்கடியை வேகப்படுத்த அவர்கள் விரும்பவில்லை. அவன் போக்கிலே விட்டுவிடுவதுதான் உசிதம் என்று அவர்களுக்குப் பட்டது.

'சாண் ஏற முழம் சறுக்க' என்றபடி ஆனது சந்தானத்தின் வாழ்க்கை. எல்லோரையும் போலத்தான் அவனுடைய வாழ்க்கைச் சக்கரம் குடும்பத்தை இழுத்துக்கொண்டு சுற்ற ஆரம்பித்தது. ஆனால் அவன் மத்திய காலத்தைத் தாண்டு முன்பே இரண்டு தரம் அச்சு முறிந்து சக்கரம் சுழலுவது தடைப்பட்டது. இரண்டு தட்டைகள் புது ஆரம்பம் செய்தாகிவிட்டது; இப்போது மூன்றும் தடவை ஆரம்பிக்கவேண்டும் அவன்.

அவன் இரண்டாவது மனைவி பிரசவத்தில் இறந்து தலைமாசியம் ஆகி இரண்டு நாட்கள்தாம் ஆகின்றன. போனவள் பிழைத்தாள், இருப்பவர்கள் உயிரை வாங்க வைத்துவிட்டு. தாயைப் பலிவாங்கின அந்தச் சிசுவோடு கூட பெரிய குஞ்சு இரண்டையும் அவன் காலடியில் போட்டுவிட்டு அவள் கண்களை மூடிக்கொண்டாள். பெரிய குஞ்சுகள் இரண்டும் அவனோடு வந்துவிட்டன. சிசுவைப் பாட்டி வீட்டிலேயே வைத்துக்கொண்டு விட்டார்கள்.

பம்பாயில் சர்க்கார் இலாகா ஒன்றிலே இருநூறு ரூபாய் சம்பளத்தில் அவனுக்கு உத்தியோகம். வயது நாற்பதை அடுத்துச் சென்றுகொண் டிருந்தது. வாலிபத்தின் அறிகுறிகள் லேசு லேசாக மங்கிக் கொண்டே வந்து மூப்பின் அறிகுறிகளைப் பிரகாசமாக எடுத்துக் காட்டினது அவன் தேகக்கட்டு. ஏன்,

வயசுக்கு மீறின மூப்பு என்றுகூட வியக்தமாகச் சொல்லிவிடலாம்.

அதற்கு வயசை மட்டும் குறை கூறுவதில் பயனில்லை. அவன் முப்பதாவது வயதில் முதல் மனைவி இறந்தபோது ஏற்பட்ட அதிர்ச்சியே இன்னும் இந்த மத்திய காலத்திலும் அவன் நினைவில் அழியவில்லை. அந்தப் புது மணத்தை அவன் மூச்சுத் திணறும் வரையில் வாசனை பிடித்து அனுபவித்தான். அப்போதுதான் மலரே வாடி விழுந்துவிட்டது. அவன் உணர்ச்சியும் அதோடு மாமரத்துப் போய்விட்டது. ஆனால் அது நிரந்தரமாகத் தங்கி விடவில்லை. அவனுக்குத் தெரியாமல் எப்படியோ புது ஆரம்பம் மறுபடியும் ஆகிவிட்டது. ஆறு வருஷங்கள் குதி போட்டுக்கொண்டு அவன் முன்னே ஓடிச் சென்றன.

அதற்குள் இந்தச் சம்பவம். முதலில் ஏற்பட்ட அதிர்ச்சி இப்போது ஏற்படவில்லை. ஒரு சாவைக் கண்ட அவன் மனம் 'இன்னும் ஒன்று' என்று கணக்குப் பண்ணிவிட்டது. ஆனால் ஒரு புதுப் பாரம் அவன் நெஞ்சிலே ஏறி அழுத்தினது. மூன்றாகப் பிரிந்த அவள் சாயல்கொண்ட உருவங்களின் எதிர்காலம் அவனுக்குக் கேள்விக்குறி போட்டுக்கொண்டே இருந்தது.

இன்னும் பதினைந்து நாட்கள் இருந்தன, அவன் லீவு கழித்து வேலையை ஒப்புக்கொள்வதற்கு. தலை மாசியம் எப்போது தீரப்போகிறது என்று வாயசக் காக்கை போலக் காத்துக்கொண்டிருந்தவர்கள் மறு நாளே பேச்சு ஆரம்பித்து விட்டார்கள். கல்யாணப் பிரஸ்தாபம் ஜ்வரவேகத்தில் வலிவடைந்து விட்டது, இந்த இரண்டு தினங்களுக்குள். முந்தின தடவை

போல ஆளுக்கு ஆள் அவன் மனத்தைப் பண்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அவன் மனமே பக்குவம் அடைந்துதான் இருந்தது. சந்தர்ப்பத்துக்கு வேண்டியபடி நேர் எதிரே தோன்றும் அந்த மூன்று உருவங்கள் போதாவா? புது ஆரம்பம் செய்ய அவனைத் தூண்டுவதற்கு இதைவிட வலிவானது வேறு என்ன வேண்டும்?

அன்று காலையில்தான் அவர்கள் பார்க்கப் போக இருந்த பெண்ணைப்பற்றி அவன் தமக்கை ஏதோ தனக்குத் தெரியாத தகவல்களுடன் அவனிடம் பேச்சுக் கிளப்பினாள். அவர்கள் குலம், கோத்திரத்தைப்பற்றிப் பூர்வ பீடிகை போட்டாள். அந்தப் பெண்ணின் தந்தைக்கு அவ்வளவாகச் சொத்து இல்லை. ஏதோ ஒரு காணி, இரண்டு காணி இருந்ததை வைத்துக் கொண்டு மானமாக அரைக்கஞ்சி குடித்துக் காலம் தள்ளிவரும் குடும்பம். இந்தப் பெண் அவருக்கு மூன்றாவது பெண்; முதல் இரண்டு பெண்களை எப்படியோ மேடேற்றிப் புருஷன் வீடுகளில் கொண்டு சேர்த்துவிட்டார். இதற்குப் பிறகு ஒரு பெண்ணும் இரண்டு பிள்ளைக் குழந்தைகளும். இதையெல்லாம் தமக்கை சொல்லி வரும்போதே சந்தானம் காதுகளில் கிரஹித்துக்கொண்டான். பெண்ணின் குடும்பத்தைப் பற்றி அவனுக்கு அக்கறை விழவில்லை. ஏழைமையைப் பற்றியும் அவன் பொருட்படுத்தவில்லை. ஹூம்! அவன் முதல் மனைவி பெயருக்கேற்றபடி வீட்டில் செல்வத்தைக் கொண்டு நிரப்பினாள். அவனுக்கே செல்வமாக விளங்கினாள். 'ஆனாலும் என்ன? அந்தச் செல்வம் இப்போது எங்கே?' என்றெல்லாம் மனத்துக்குள் எண்ணிக்கொண் டிருந்தான்.

அந்த நிலைமையில்தான் அவன் தமக்கை மேலும் பேச்சுக் கொடுத்தாள். "அம்பீ, பெண்ணுக்கு வயது பதினாறு நடக்கிறதாம்; நல்ல ஈடு ஜோடு என்று சொல்லுகிறார்கள்" என்றாள்.

"ரொம்ப நல்லதாகப் போச்சு; கையோடே கூட்டிக் கொண்டு போய்விடலாம்" என்றான் சந்தானம்.

"அதுதானே உனக்குச் சௌகரியம், அம்பீ! தவிரவும் பெண் அழகு என்று சொல்லலாமாம், அம்பீ" என்று சொல்லிக்கொண்டே அவன் முகத்தைப் பார்த்தாள்.

'பெண் அழகு' என்ற வார்த்தைகள் அவன் காதில் விழுந்ததுதான் தாமதம். சந்தானம் சடக்கென்று அக்கா பக்கம் திரும்பிப் பார்த்தான். மனத்திலே அது உண்டாக்கின வேதனையின் குறிகள், அவன் பார்வை, உதடுகளின் அசைவு, முக நரம்புகளின் வெடவெடப்பு ஒவ்வொன்றிலும் ஸ்பஷ்டமாகத் தெரிந்தன. தமக்கை அதைப் பார்த்ததும் பின்வாங்கினாள். அவன் வாயிலிருந்து என்ன வார்த்தை வெடித்துக் கிளம்பப் போகிறதோ என்று அந்தச் சில விநாடிகளில் எவ்வளவு பயந்துவிட்டாள்! "அக்கா! இன்னுமா உங்களுக்கு அந்த நினைப்பு? நப்பாசை. இரண்டு தரம் அழகுக்கு இந்தக் கை கொள்ளி வைத்துவிட்டதைப் பார்த்திருக்கிறாயே; அந்த வயிற்றெரிச்சலை ஏன் கிளப்புகிறாய், இப்படிப் பேசி?" என்று படபடத்துக் கொட்டிவிட்டான்.

"அம்பி, அம்பி" என்று அவனை இடைமறித்துப் பேசப் போனவள் வார்த்தையின் வேகம் தாளாமல் தயங்கி நின்றுவிட்டாள். ஒரு பெருமூச்சு விட்டுச் சமாளித்துக்கொண்டு, "ஹூம்! இந்த வயசிற்குள்

இத்தனை அலங்கோலங்களுக்கு ஆளாக வேண்டுமென்று உன் தலைவிதி இருக்கிறது!'' என்று மறுபடியும் ஒரு பெருமூச்சு விட்டாள்.

கொஞ்ச நேரம் இருவரும் பேசாமல் இருந்தார்கள். மீண்டும் அக்காவே பேச்செடுத்தாள். "அம்பி! அதை ஒரு காரணமாகக் காட்டி உன்னைச் சம்மதிக்கச் செய்ய வரவில்லை. 'அடுக்குள் தூணுக்கு அழகு என்ன வேண்டி இருக்கிறது' என்பது பழமொழி. இருந்தாலும் பங்கரை இல்லாமல் இருக்கவேண்டாமா? அதற்குத்தான் சொல்ல வந்தேன், பெண்ணைப்போய்ச் சாயந்திரமாகப் பார்த்துவிட்டு வரலாமென்று'' என்று கொஞ்சம் கொஞ்சமாகச் சுருதியை இறக்கிப் பேசினாள்.

"என்னது? பெண்ணைப் பார்க்கவா! என்னையா கூடவரச் சொல்கிறாய்?'' என்று விழிகள் பிரமிப்புக் காட்டக் கேட்டான் சந்தானம். ஒரு கசப்புச் சிரிப்பு அவன் வாயிலிருந்து கிளம்பியது.

"ஆமடா, அம்பி. பின்னே போகவேண்டாமா? அதென்ன, புதுசு இல்லியே! முந்தி எல்லாம் போகவில்லையா?''

"முன்பு போயிருந்தால்....'' என்று வேகமாக ஆரம்பித்தவன் அதை முடிக்கவில்லை. வார்த்தை நின்று மனத்தில் பழைய நினைவுகள் படர்ந்தன. முதல் முறை பெண் பார்க்க அக்காவுடன் போன அந்தச் சம்பவம் அவன் கண்களுக்குமுன் அப்படியே நின்றது. "ஏண்டாப்பா, நாங்கள் போய்ப் பார்த்துவிட்டு வந்தால் போதாதா? புதிசாக, மாப்பிள்ளை போய் பார்க்கவேண்டும் என்று முரண்டு பண்ணுகிறாயே?'' என்று பெரியவர்கள் குரல்கள் அவனைக் கண்டித்தது ஞாபகம் வந்தது.

பன்னிரண்டு வருஷங்களுக்குமுன் அப்படி. யுவர்கள், பெரியவர்கள் பொறுப்புக்குப் பெண்கள் தேடுவதை விட்டிருந்த நாட்கள் அவை. புதுமைப் படிப்பிலே ஏற்பட்ட ஒரு கிளர்ச்சி அவனை அவர்கள் முடிவை ஏற்கத் தடை செய்துவிட்டது. தானே பார்த்து வந்துதான் மணத்துக்குச் சம்மதப்பட்டான். அதே மாதிரிதான் இப்போதும், இரண்டாவது தாரமும். அவனே பார்த்துத் தேர்ந்தெடுத்துக் கொண்டதுதான். அதேமாதிரிதானு இப்போதும்? மாறி மாறி இந்த நிலைமைகளை மனத்திற்குள்ளாக ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டான்.

முன்பு இருந்த ஓர் ஆத்திர உணர்ச்சி தன் மனத்தில் அப்போது அவ்வளவு வேகத்துடன் இல்லை என்றுதான் அவனுக்குப் பட்டது. "அக்கா, நான் எதற்கு வர வேண்டும்? நீங்களே போய்ப் பார்த்துவிட்டு வந்து விடுங்களேன்" என்றான்.

"நாங்கள் ஆயிரம் பார்த்தாலும், வைத்து ஆளப் போகிறவன் நீ. உனக்குத் திருப்தி ஏற்படவாவது..."

"என் திருப்திக்கா?" என்று சந்தானம் தனக்குள் கேள்வி போட்டுக்கொண்டான்.

"வேண்டியதுதான். முன் தடவைகளில் அதைத்தான் நான் முக்கியமாகக் கருதினேன். ஆனால் எனக்குத் திருப்தி அளித்த அந்தப் பொருளில் எதை என்னிடம் நிரந்தரமாக வைத்துக்கொள்ள முடிந்தது? என் திருப்திக்கு அந்தச் சக்தி இல்லை. அப்படி இருக்க நான் திருப்திப்பட்டுத்தான் என்ன பிரயோசனம்?" என்று தனக்குள் முணுமுணுத்துக்கொண்டான். வெளியே பதில் ஒன்றும் சொல்லவில்லை.

அக்கா மறுபடியும் ஆரம்பித்தாள்: "இன்று நாம் போய்ப் பார்த்துச் சம்மதம் அவர்களுக்குத் தெரிவித்து விட்டால் இன்றைக்கு எட்டாம் நாள் முகூர்த்தம் நடத்தி விடலாம் என்று சொன்னார்கள். அதற்குப் பிறகு ஒரு வாரந்தானே உனக்கு லீவு இருக்கிறது? போவதற்குச் சரியாக இருக்கும்."

"அக்கா எனக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. என்னைத் தொந்தரவு செய்யாமல் போய், நீயும் அத்திம்பேரும் திருப்தியாக இருக்கிறதா என்று பார்த்து முகூர்த்தம் நிச்சயித்துக்கொண்டு வந்துவிடுங்கள்" என்றான் மறுபடியும்.

"அம்பி, நாங்கள் எதற்கு? யோசனை பண்ணாதே. நீயே ஒரு தடவை போய்ப் பார்த்து வந்துவிடு. நாலு மணிக்குமேல் புறப்பட்டு வருவதாக அவர்களுக்குச் சொல்லி அனுப்பிவிட்டேன்" என்றாள்.

சந்தானம் அதற்குமேல் பேசவில்லை. அவன் மௌனத்தின் அளவைக்கொண்டு, சம்மதித்து விட்டதாக எண்ணி அவன் தமக்கையும் போவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப் போய்விட்டாள்.

அதுமுதல் சந்தானத்தின் மனசு குழம்பின நிலையிலேயே அவஸ்தைப்பட்டது. மனைவி செத்த ஒன்றரை மாதத்தில் கல்யாணம் செய்து கொள்வதில்கூட அவனுக்கு ஆக்ஷேபணை இல்லை. ஆனால் பெண்ணைப் போய்ப் பார்ப்பது என்பதுமட்டும் அவன் மனத்தில் இன்னும் திருப்தியாகப்படவில்லை. கையில் பிடித்திருந்த புஸ்கத்தின் வரிகளை, அர்த்தம் மனத்தில் பதியாத நிலைமையில் புரட்டிக்கொண்டே இருந்தான். அவன் சிந்தனை எங்கெங்கெல்லாமோ ஓடித் திரிந்துகொண்

டிருந்தது. ஆயிற்று; இன்னும் ஒரு மணி நேரம் இருந்தது, அவன் புறப்படுவதற்கு.

புஸ்தகத்தைப் புரட்டுவதுகூட நின்று அவன் கண்கள் மூடி, தலை பின்புறமாக நாற்காலியின் முதுகு விளிம்பில் சாய்ந்து கொடுத்தது. இன்னும் ஒரு மணி நேரத்தில் தான் போக இருந்த அந்தப் புது இடம், அங்கே தான் வரவேற்கப்படும் விதம், அங்கே நடக்கப் போவது, தான் நடந்துகொள்ள இருப்பது இவ்வகைளைப் பற்றிய நினைவுகள் கனவின் தோற்றத்தில் அவன் மனத்தின் முன்னே எழுந்தன. கனவிலே ஐக்கியமாகி விட்ட ஓர் உணர்ச்சிப் போதையில் அவன் உணர்வு இழந்துவிட்டான்.

* * * *

ரிக்ஷா வீட்டு வாசலில் போய் நின்றது. மெதுவாகக் கீழ் இறங்கி இரண்டு படியேறிக் கடைசி மூன்றாவது படியிலே அடிவைத்து உள்ளே நுழைந்தான். அவன் வாழ்க்கையில் அவன் செய்ய இருக்கும் மூன்றாவது ஆரம்பத்தை அது ஞாபகப்படுத்தினது போல் இருந்தது.

“வாருங்கோ, வாருங்கோ” என்று உள்ளே இருந்து அவனை உபசார முறையில் வரவேற்றுக் கூடத்திற்கு அழைத்துச் சென்றார் ஒருவர். அதை ஒரு புன்னகையோடு சந்தானம் ஏற்றுக்கொண்டான்.

கூடத்திலே இரண்டு பழைய ஜமக்காளங்களை அதன் பொத்தல் தெரிந்தும் தெரியாமலும் சேர்த்து விரித்திருந்தார்கள். அதிலே ஒரு கொடியில் சந்தானம் போய் உட்கார்ந்தான். அவனை வரவேற்றவர் இன்னும் ஒரு கோடியிலே உட்கார்ந்து கொண்டார். “ஏன், அத்திம்பேரும் அக்காவும் வரவில்லையா?” என்று

முகத்தில் ஓர் அசட்டுச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு சந்தானத்தோடு ரொம்பப் பழகின ரீதியில் அவர் கேட்ட கேள்விக்கு, "இல்லை, அத்திம்பேர் ஆபீஸுக்குப் போயிருக்கிறார்; அக்காளுக்கு உடம்பு சரியாக இல்லை" என்று ஏதோ ஒரு முகாந்தரம் ஒப்புக்குச் சொல்லித் தானும் பதில் பேசினான்.

"அதனாலே என்ன? பரவாயில்லை" என்றார் அவர்.

"உங்களுக்கு இன்னும் இரண்டு வாரந்தான் லீவு இருப்பதாகக் கேள்விப்பட்டேன். நேரே பம்பாய்க்குத் தான் போகணுமோ?" என்றார் மீண்டும்.

"ஆமாம்; நாலு நாளைக்கு முந்தியே புறப்பட்டுப் போனால்தான் சௌகரியமாக இருக்கும்" என்றான் சந்தானம்.

"அதான், அதான், எட்டாம் நாளே ஒரு நல்ல முகூர்த்தம் இருக்கு. அதில் நடத்திவிடலாம் என்று உத்தேசம்" என்று அவர் பேச்சை இழுத்தார்.

"ஹூம்!" என்று சந்தானம் லேசான ஓர் உறுமலுடன் அதற்குப் பதில் அளித்தான். பாவம்! பெண்ணைப் பெற்றவருக்கு அவ்வளவு ஆத்திரம்! பெண்ணைப் பார்க்கவில்லை. முகூர்த்தம் நிச்சயித்து விட்டார். "கொஞ்சம் மன்னிக்கணும். ஒரு நிமிஷம் உள்ளே போய்விட்டு வரேன்" என்று எழுந்து போனார். சந்தானம் தன் கண்களைத் திருப்பி அந்த இடத்தை ஒரு தரம் ஆராய்ந்து பார்த்தான். வரும்போதே அவன் மனசு கொஞ்சம் அசாதாரணம் அடைந்திருந்தது. சமையலறைப்பக்கம் அவன் கண்கள் திரும்பினபோது, அங்கிருந்து இரண்டு மூன்று உருவங்கள் எட்டி எட்டிப்பார்ப்பதும் தங்களுக்குள் பேசிக்கொள்வது

மாக இருந்தன. "இவர்தானு மாப்பிள்ளை! நம்ப...... வைப்பார்க்க வந்திருக்கிறவர்?" என்று அந்த முகங்கள் ஒன்றையொன்று கேட்டுக் கொள்வது போலவும் தன்னைப்பற்றியே அவர்கள் பேச்சு முழுதும் இருக்கும் என்றும் சந்தானத்துக்குத் தோன்றியது.

சந்தானம் பார்க்கவும் அந்த உருவங்கள் தலைகளைச் சரேலென உள்ளே இழுத்துக்கொண்டன. ஒரு விநாடிக்குச் சப்தம் உட்புறம் போய்விட்டது. அதே சமயம் அவரும் அந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்தார். பேச்சுத் தொனி பலத்தது. ஆனால் சந்தானத்தின் காதில் அது விழவில்லை.

அவர் அங்கே போய் என்ன பேசினர்? இல்லை, அந்தப் பெண்கள் கூட்டம் அவரைச் சூழ்ந்துகொண்டு என்ன கேட்டது? இவர் என்ன பதில் சொல்லிக்கொண்டிருந்தார்? "என்ன, மாப்பிள்ளை எப்படி இருக்கிறார்? பிடித்திருக்கிறதா?" என்று அவர்களைக் கேட்டாரா? அவர்கள், "என்ன அப்பா, அண்ணு, மாமா" என்று கத்தி, "மாப்பிள்ளை அப்படி இப்படி என்றெல்லாம் சொன்னீர்களே. இப்படி இருக்காரே. அப்படிச் சிவப்பு இல்லையே! மூக்கு முழி எல்லாம் எவ்வளவு பெரிசு! ஹூம்! நாற்பது வயதுக்குக் குறையாது. முப்பத்தைந்து என்பது பொய்" என்றெல்லாம் அவரவர் அபிப்பிராயங்களைச் சொல்லிக்கொண்டிருந்தார்களா?

சந்தானத்தின் கற்பனை பறந்து பறந்து தவித்தது. மூலைக்கு மூலை ஓடி அவர்கள் பேச்சைக் கிரஹித்து இழுக்க அது ஆசைப்பட்டது. அந்த ஆசை நிறைவேருத நிலைமையில் தனக்குத் தோன்றியபடி உருவகித்துக் கொண்டது. அந்த இடத்தின், சுற்றுப் புறத்தின்

ஒவ்வோர் அசைவிலும், சப்தத்திலும் தனக்குப் பாதகமான அபிப்பிராயங்களைத்தான் அது கணக்கெடுத்தது.

அப்போது 'களுக்'கென்று ஒரு பலத்தச் சிரிப்புச் சப்தம் அறையிலிருந்து கிளம்பிற்று. அதைக் கேட்ட சந்தானம் திடுக்கிட்டுவிட்டான். ஏன் இந்தச் சிரிப்பு? அந்தச் சந்தர்ப்பத்தில் அவர்களையும் மீறிவருவானேன். அவர்களுக்கு விருப்பமற்ற ஓர் அபிப்பிராயத்தை அதன் மூலம் தெரிவிப்பதாக இல்லாமல் இருந்தால்? ஆமாம். நிச்சயமாக, அந்தச் சிரிப்புக்கு அர்த்தம் அதுதான். சந்தேகமே இல்லை. சிரித்த அந்தக் குரல் அதற்குமுன் பேசின வார்த்தை வேறு எதுவாக இருந்திருக்கக் கூடும்? அதுதான் என்பதில் சந்தேகமே இல்லை.

சந்தானத்தின் தேகம் ஒருதரம் நடுங்கிற்று, அந்த வார்த்தைகளின் நினைப்பில். இதுவரை அந்த நினைப்பு அவனுக்குத் தோன்றவேயில்லை. அவன் மனசு உடைந்து போயிருந்த நிலைமையில் இந்த அம்சத்தைப் பற்றியே அவனுக்குத் தோன்றி இராது—அக்காவோடு தர்க்கித்த அந்த நிலைமையிலும்—என்ன முட்டாள்தனம் என்று அவன் மனசு அலைமோதிக் கொண்டது. 'அந்த வார்த்தைகள்! என்ன கோரம்! நான் லகுவாக அந்த வார்த்தைகள் காதில் விழாமல் நிவர்த்தி செய்திருக்கக் கூடும். அதற்குச் சந்தர்ப்பமே இல்லாமல் செய்திருக்கலாம். அவமானம்! அவமானம்! புத்தியைச் செருப்பால் தான் அடித்துக்கொள்ளவேண்டும். அக்கா! நீங்கள்தான் இதற்கெல்லாம் காரணம். பேசாமல் நீங்கள் போய்த் தொலைந்திருந்தால், இந்த வார்த்தைகளை ஏன் கேட்டுக் கொள்ளவேண்டும்? என்னால் பொறுக்க முடியாது. முடியாது என்னால்!'

மறுபடியும் ஒரு சிரிப்பு அதே ரீதியில்! இதற்கும் அதே அர்த்தந்தான். ஒரு நடுக்குக் குரல் கேட்கிறது: "மூன்றும் இளையாளைக் கல்யாணம் பண்ணிக்கிறவருக்குப் பெண் வேறே பார்க்கணுமா, இந்த லக்ஷணத்தில்!" 'கோரம்! கோரம்! ஐயோ! என்ன தப்புச் செய்து விட்டேன்......'

'ஆனால் நான் வந்தாகிவிட்டது. என்ன செய்வது இப்போது? வேறு வழியில்லை. சோதனை முழுவதையும் கடந்துதான் தீரவேண்டும். கோரம்! கோரம்!' அவன் தலை சுழன்றது.

அவர் மறுபடியும் வந்து உட்கார்ந்தார். அவருக்குப் பின்னால் ஓர் உருவம் சாயலாக எதையோ எடுத்துக் கொண்டு வந்து குனிந்து கீழே வைத்தது. ஏதோ குலுங்கும் சப்தந்தான் அருகில் கேட்டது. சந்தானத்தின் காதுகளில் இது ஏதோ ஸ்வப்ன சப்தம் போல் விழுந்தது. அந்தச் சாயலும் சப்தமும் அப்போது அவன் கவனத்தை, அது எங்கேதான் தவறிப்போயிருந்த போதிலும் இழுத்திருக்கவேண்டுமே, அதுதான் இல்லை! இன்னும் அவன் தலை குனிந்துதான் இருந்தது. அந்த வார்த்தைகளும், அந்தச் சிரிப்பும் கொடுத்த அர்த்தம் மூளையைச் சுற்றிலும் ஒரு குழப்ப நிலையை ஏற்படுத்தி விட்டன.

"ஸார்! ரெண்டு எடுத்துக்கொள்ளுங்கோ" என்று அவர் தட்டை இழுத்துப் பாயின் குச்சியைக் கிள்ளிக் கொண்டிருந்த அவன் கண்முன்னே நீட்டினதுந்தான், "அதுக்கென்ன?" என்று சொல்லிக்கொண்டே முகத்தை உயரே திருப்பினான். அப்போதுதான் மறுபடியும் ஏதோ குலுங்கல் சப்தம் கேட்டது. அவசரமாகத்

திரும்பிப் பார்த்தான். அந்த உருவத்தின் முன்புறம் அவனுக்குத் தெரியவில்லை! அவள் பின்புறம் அவனிடமிருந்து தள்ளிப்போய்க்கொண்டிருந்தது. அவளைப் பார்க்கவில்லை; இதற்காக வந்தவன்!

வெளியே தெரியாத ஒரு பெருமூச்சு அடக்கிக் கிளம்பியது, சந்தானத்தின் ஹிருதய ஆழத்திலிருந்து. "ஆமாம். நான் இப்போது குற்றவாளி அல்ல. 'மூணும் இளையாளைக் கல்யாணம் பண்ணிக்கிறவன் பெண்ணைப் பார்க்க வந்தானும், வெட்கமில்லை' என்று என்மேல் அவர்கள் இனிமேல் குற்றம் சாட்ட முடியாது. நான் தான் அவளைப் பார்க்கவே இல்லையே! நான் பிழைத்தேன். எனக்கு என்ன உரிமை இருக்கிறது, அந்தப் பெண்ணைப் போய்ப் பார்ப்பதற்கு? முதல் தடவையோடு அதை நான் இழந்து விட்டேன். இரண்டாந் தடவை அதைக் கொண்டாடினேனே, அதுவே தப்பு. மூன்றாந் தடவையா?.. இல்லை, இல்லை; பேச்சுக்கு இடமில்லாமல் செய்துவிட்டேன்.."

கடியாரத்தில் மணி நாலடித்தது. கனவிலே ஐக்கியமான உணர்ச்சி தன்னைப் பலாத்காரமாக ஸ்வப்பனத்திலிருந்து விடுவித்துக் கொண்டது. "அக்கா!" என்று வேகமாகக் கூப்பிட்டான்.

"ஏன், மணி நாலு அடித்தாகி விட்டதே. புறப்படேன், அம்பி."

"இல்லை. பொறப்பு உங்களுக்குத்தான். நான் போகவில்லை."

"அம்பி, என்னது திடீரென்று?"

"அக்கா, மேலே பேச்சுக்கு இடமில்லை. புறப்படுங்கள் சீக்கிரம். அத்திம்பேரைக் கூப்பிடு."

"நீ....?"

"நானு[illegible]கா, அங்கேவந்து பெண்ணின் மூக்கையும் கண்ணைய[illegible] பார்த்துக்கொண் டிருக்கப் போகிறேன்? வயிற்றெரிச்சல்!" அந்தத் தொனியின் பாரத்திலே அக்காவின் மேல் வார்த்தைகள் நசுங்கிவிட்டன. ஒரு நிமிஷம் தயங்கினாள்.

"அப்போது, நாங்கள் போய்விட்டு வரவா?"

"போங்கள், போங்கள் சீக்கிரம்."

"போய்விட்டு வாங்கோ என்று சொல்லு, அம்பி."

"சரி, போய்விட்டு வாங்கோ."

